


UGC CARE Listed Journal

E-ISSN: 2581-7140

# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்




# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

(Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

**தொகுதி – 4, இதழ் 1, ஜீலை 2021**

**VOLUME – 4, ISSUE - 1, JULY 2021**

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal of Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal of Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world. In achieving the aim, our journal **International Journal of Tamil Language and Tamil Studies** has been listed in **UGC CARE List on July 2020.**

## Disclaimer

**International Journal of Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics. **Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

## Message from the Editor-in-Chief

**International Journal of Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area. Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal. I am glad to say that our journal has been approved in the UGC CARE List. It is an achievement by the clear protocol of academic and ethical policies maintained by the journal and I thank the authors for their original articles with proper ethical writing methods.

**Publisher, Director and Editor**
**Dr.D.Maheswari**

# பதிப்புரை மற்றும் நன்றியுரை



**முனைவர் த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் (IJTLLS),
தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (Ijtlls) தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியைச் செய்து வருகின்றது. இது எமது நான்காம் தொகுதியின் முதல் இதழாகும். இத்தொகுதியில் பதினாறு ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

முனைவர் செ.சாந்தி அவர்களின் *சேதுபதி மன்னர்களும் பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலமும்* எனும் ஆய்வுக்கட்டுரை வாயிலாக சேதுபதி மன்னர்கள் ஆவுடையார்கோயில் மற்றும் வேறு சில கோயில்களுக்கு அளித்த தானங்களிலிருந்து அவர்கள் சிறப்பான ஆட்சியை மேற்கொண்டார்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. ம.செந்தில்குமார் அவர்களின் *“நுண்வெளிக் கிரகணங்கள்” நாவலில் காப்புக் குலத்தினரின் கால்நடைகள் பற்றிய அறிவு* எனும் ஆய்வுக்கட்டுரை சு.வேணுகோபாலின் *நுண்வெளிக் கிரகணங்கள்* நாவல் மூலம் காப்பு ஒக்கலிகர் எனும் கன்னட இனக்குழு மக்களின் வாழ்வியலை விளக்குகிறது. முனைவர் கி.நாகேந்திரன் அவர்களின் *திருமங்கலம் வட்டார கல் வழிபாடும் தீயில் மாண்ட நடுகல் வழிபாட்டு முறைகளும்* எனும் ஆய்வுக்கட்டுரை திருமங்கலம் வட்டாரத்தில் நடுகல் வழிபாடு அச்சத்தாலும், அன்பாலும், நம்பிக்கையாலும் நடைபெற்று கொண்டு இருப்பதைக் காட்சிப்படுத்துகிறது.

ப.நிர்மலாதேவி அவர்களின் *சீறாப்புராணத்தில் காப்பியத் தலைவனின் மீவியற் கூறுகள்* எனும் ஆய்வுக்கட்டுரை சீறாப்புராணத்தில் சுட்டப்படும் இயற்கை மீவிய நிகழ்ச்சிகளையும் மற்றும் காப்பியத் தலைவன் மீவியல் ஆற்றல்களையுடைய தன்னிகரில்லாத் தலைவனாக இருப்பதையும் வெளிப்படுத்துகிறது. திருமதி. சே.பிரேமா அவர்களின் *மூன்றாம் திருமுறையில் மூன்று திருத்தலங்கள்* எனும் ஆய்வுக்கட்டுரை திருஞானசம்பந்தரின் முதல்மூன்று திருமுறைப் பாடல்களில் அவரது பக்திச்சிறப்பை அறிவதோடு மட்டுமல்லாமல், எங்கும் நிறைந்திருக்கும் இறையின் செயல்பாடுகளையும், வரலாற்றுப் பதிவுகளையும் ஆராயும் நோக்கில் அமைந்துள்ளது.

செ.மகாலெட்சுமி அவர்கள் *அப்துல்ரகுமான் கவிதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்* எனும் ஆய்வுக்கட்டுரையில் அப்துல்ரகுமான் கவிதைகளில் பெண்ணின் பண்புகளான மென்மை, கருணை, இரக்கம் மற்றும் சமத்துவ நோக்கம் வெளிப்படுவதை ஆராய்ந்தறிந்த விதத்தை அறிந்துகொள்ள முடிகின்றது. முனைவர் இரா.மணிமேகலை அவர்களின் *வெ.இறையன்புவின் "வையத் தலைமை கொள்" நூலில் தனிமனித அறங்கள்* எனும் ஆய்வுக்கட்டுரை மனிதர்கள் அறத்தைக் கடைபிடித்து வாழ வேண்டும் என்பதைப் புலப்படுகிறது.

ல.கு.சு.இராஜ்குமார் அவர்களின் *சங்க இலக்கியத்தில் அரசர்களின் முரண் மரபுகள்* எனும் ஆய்வுக்கட்டுரை சங்க காலத்தில் மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்கள் ஆட்சியின் கீழ் குறுநில மன்னர்கள், சிற்றரசர்கள், குடித்தலைவர்கள் உள்ளிட்ட பல்வேறு அரசர்கள் தன்னுடைய நாட்டைப் பாதுகாத்தல் - பகை நாட்டைத் தீயிட்டு அழித்தல் ஆகிய இரு முரண்பாடுகள் கொண்டு இருந்தமையை வெளிப்படுத்துவதாக உள்ளது. முனைவர் ஆ.ராஜா அவர்களின் *கீழடி அகழாய்வுகள் – ஒரு கூர்நோக்கு ஆய்வு* எனும் ஆய்வுக்கட்டுரை தமிழரின் தொன்மைப் பண்பாட்டுக் கூறுகளைக் கீழடி கொண்டுள்ளது என்றும் சங்க கால மக்கள் வாழ்ந்த வாழ்விடப்பகுதி என்றும் மெய்ப்பிக்கிறது. மேலும் அவரது ஆய்வு தமிழ்க்குடிகள் தான் பாரதக் கண்டத்தின் மூத்தக்குடிகள் என்ற கூற்றிற்கு வழு சேர்ப்பதாகவும் அமைந்திருக்கிறது. சு.ஸ்ரீநிதி அவர்களின் *தொல்காப்பிய நோக்கில் புறநானூற்றில் பாடாண்திணைத் துறைகள்* எனும் ஆய்வுக்கட்டுரையில் தொல்காப்பியப் பாடாண்திணைத் துறைகளுள் காணப்படும் எட்டுத்துறைகள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளதனை இலக்கண இலக்கிய சான்றுகள் கொண்டு மெய்ப்பித்து இருப்பது நன்குப் புலப்படுகிறது.

கு.ஜெயபிரபா அவர்களின் *சங்க கால மக்களின் வேளாண்மைக் கருவிகள்* எனும் ஆய்வுக்கட்டுரை சங்க கால மக்கள் உழவுத் தொழிலுக்குக் கலப்பை, தளம்பு அச்சாணி, உரல், உலக்கை, கருக்கு அரிவாள், முறம் குளிர், அடார் முதலிய கருவிகளைப் பயன்படுத்தி உள்ளனர் என்பதையும் வேளாண்மை தொழிலில் அவர்கள் முன்னேறி இருந்ததையும் காட்சிப்படுத்துகிறது. திரு கு.குழந்தைவேல் அவர்களின் *The Revolutionary Spirit in Langston Hughes and Subramaniya Bharathi* எனும் ஆய்வுக்கட்டுரையில் ஆங்கில கவிஞரான லாங்ஸ்டன் கியுசு மற்றும் தமிழ்நாட்டின் பெருமைமிகு கவிஞரான பாரதியின் புரட்சி மற்றும் மானுட விழுமியம் நிறைந்த கவிதைகளில் உள்ள ஒத்த சிந்தனைகளை ஒப்பீடு செய்து ஆய்வு செய்த விதம் நன்கு வெளிப்படுகிறது. திரு போ.செந்தில்குமார் அவர்களின் *The Role of Love in "Tiruvachakam" and Poetry of John Donne* எனும் ஆய்வுக்கட்டுரை ஆன்மிகவாதிகளிடம் காணப்படும் அன்பிற்கான குறிகளை விளக்கும் ஒப்பாய்வாக

அமைந்திருப்பது மிகவும் சிறப்பு. மேலும், இதுபோன்ற ஆய்வுகள் ஒப்பீடுதுறைக்கும் மிகச்சிறந்த வழிவகுக்கும் என்பதில் ஐயமில்லை.

செல்வி த.நாகஜோதி அவர்களின் *Medicinal Values and Chemical Substances in the Traditional Medicine of India* எனும் ஆய்வுக்கட்டுரை சித்த மற்றும் ஆயுர்வேத பாரம்பரிய முறைகளை விளக்கி அவைதனில் கூறப்பட்டுள்ள மருத்துவ முறைகளையும் பயன்பாட்டினையும் எடுத்துக் கூறுவதாய் அமைந்துள்ளது. நவீன காலத்தில் பாரம்பரிய மருத்துவத்தின் முக்கியத்துவத்தையும் மற்றும் அதன் வளர்ச்சியையும் அனைவரும் அறிந்து கொள்ளும் நோக்கில் ஆராய்ந்த விதம் சிறப்பிற்குரியது.

செல்வி பிரதீபா அவர்களின் *Echoes of Caṅkam: Tiṉai Conventions in Aruṅakirinātar's Kantaralaṅkāram and Kantaranupūti* எனும் ஆய்வுக்கட்டுரை அருணகிரிநாதரின் *கந்தரலங்காரம்* மற்றும் *கந்தர் அநுபூதி* ஆகியவற்றில் உள்ள திணை சார்ந்த சங்ககால பிரதிபலிப்பை எடுத்துக்காட்டும் விதமாய் அமைந்துள்ளது. திரு மனோஜ் அவர்களின் *Comic Book Translation: Beyond Words?* எனும் ஆய்வுக்கட்டுரை ஓர் ஆங்கில துப்பறியும் நாவலின் தமிழ்மொழியாக்கத்தை ஒப்பீடு செய்து மொழிபெயர்ப்பின் முக்கியமான பண்பினை எத்துக்காட்டும் விதமாய் அமைந்துள்ளது.

இவ்வகையான சிறந்த ஆய்வுக்கட்டுரைகளின் ஆய்வுத்தொகுப்பினை ஆய்வாளர்களுக்கு வழங்குவதில் ஆனந்தமடைகிறேன். ஆய்வாளர்களின் அனைத்து கட்டுரைகளையும் ஆய்வு நெறிமுறைகளின்படி தணிக்கைச் செய்து மதிப்புரை வழங்கி செம்மைப்படுத்தி தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (IJTLLS) இணையத்தில் பிரசுரம் செய்து உள்ளது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் செயல்பட்டு வருகிறது. அதற்கு உறுதுணை அளித்த அனைவருக்கும்

நன்றி.

# பொருளடக்கம் / Contents

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# சேதுபதி மன்னர்களும் பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலமும்

## Sethupathi Kings and Pavithramanikkach Sathurvedimangalam

**முனைவர் செ.சாந்தி,** கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.
**Dr.S.Santhi,** Guest Lecturer, Department of History, Alagappa University, Karaikudi.
**ORCiD: https://orcid.org/0000-0001-6965-2478**
**DOI: 10.5281/zenodo.5101406**

### Abstract

*History is compiled on the basis of documentary data from the literature, culvert inscriptions and copper plates of the territories of each empire from the Sangam period onwards in Tamil Nadu. It is noteworthy that the kings recorded their references in the inscriptions as well as the written data engraved on them in copper plates. Many of the evidence about the Sethupathi kings who ruled Ramanathapuram as Sethunadu as kings of the Sethu land and there are meikeerthis (Title songs) about them. The donations from them to particular temples in and around the areas have also been recorded. There are lots of inscriptions, copper plates regarding it. Thus, the inscriptions of the Sethupathi kings who ruled Ramanathapuram under the name of Sethunadu as small kingdoms have been recorded through the donations made by them to the temples on the main category. On that basis, the contributions made by the Sethupathi kings to the Avudaiyar temple called 'Bavidhramanikka Chaturvedi Mangalam to be consecrated and is also mentioned in the inscriptions. The facts of the contributions are explained with the history of the Sethupathi kings. Hence, the article finds out the evidence related to it.*

**Keywords:** Sethupathi Kings, Pavithramanikkach Sathurvedimangalam, Documentary Data.

### ஆய்வுச்சாரம்

தமிழகத்தில் சங்ககாலத்திலிருந்து ஒவ்வொரு பேரரசுகளின் நிலப்பரப்புகளையும் ஆட்சி முறையினைப் பற்றியும் விவரிக்கும் இலக்கியங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள் என்னும் எழுத்துப் பொறிப்புகளில் உள்ள ஆவணத் தரவுகளின் அடிப்படையில் வறலாறானது தொகுக்கப்படுகிறது. இவற்றுள் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துத் தரவுகளைப் போலவே செப்பேடுகளிலும் மன்னர்கள் தங்களது குறிப்புகளைப் பதிவு செய்துள்ளனர் என்பதுக் குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் சிறு பேரரசுகளாக இருந்து இராமநாதபுரத்தை


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

சேதுநாடு என்னும் பெயரில் ஆட்சி செய்த சேதுபதி மன்னர்களின் செப்பேடுகள் ஒவ்வொருக் கோவில்களுக்கும் வழங்கிய தானங்களைப் பற்றி பதிவுச் செய்துள்ளனர். அதனடிப்படையில் சேதுபதி மன்னர்கள் பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்னும் ஆவுடையார் கோயிலுக்கு வழங்கியத் தானங்களைப் பற்றியும் செப்பேடுகளில் குறிப்பிட்டுள்ளனர். இதனை சேதுபதி மன்னர்களின் வரலாற்றோடு பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

தமிழகத்தில் இராமநாதபுரத்தை ஆட்சி செய்த சேதுபதி மன்னர்களின் வரலாற்றை நோக்கும் பொழுது இதன் தொன்மையை புராணங்களோடு ஒப்பிடும் வகையில் இராமாயணத்தில் இராமபிரான் இராவணனை எதிர்த்துப் போரிட்டு இலங்கையில் இருந்து திரும்பும் பொழுது இன்று இராமேஸ்வரம் என்று குறிப்பிடப்படும் பகுதியில் சிவலிங்கப் பிரதிஸ்டை செய்து சீதாப்பிராட்டியுடன் இணைந்துச் சிவனை வழிபட்டதாகவும் அதன்பிறகு அங்கிருந்து மறவர் இனத் தலைவரை அழைத்து அந்தப் புனித இடத்தைப் பாதுகாத்துப் பராமரித்து வருமாறு பணித்ததாகவும் கருதப்படுகிறது. மேலும் அந்த மறவர் இனத் தலைவரது வழித்தோன்றல்களே சேதுபதி மன்னர்களாக இருக்கலாம் என்றக் கருத்துக்களை ஆசிரியர்கள் குறிப்பிட்டாலும் கூட இதற்கான தரவுகள் ஏதும் கிடைக்கப்பெறாததால் இம்மன்னர்களின் தொன்மை வரலாறானது ஆய்வுக்குறிய ஒன்றாகவே இருந்து வருகிறது.

வரலாற்று அடிப்படையில் சேதுபதி மன்னர்களைப் பற்றி இராகவ அய்யங்கார் மதுரைத் தமிழ்ச்சங்கம் என்ற இதழில் வெளியிட்டுள்ளக் கட்டுரையில் இராமநாதபுர சேதுபதி மன்னர்கள் சோழ நாட்டிலிருந்து சேது நாட்டிற்கு வந்தவர்கள் என்றும், இவர்களதுக் குடியேற்றம் முதலாம் குலோத்துங்கச் சோழரது ஆட்சியிலிருந்து துவக்கம் பெற்றிருக்கலாம் என குறிப்பிடுகிறார். இருந்தப்போதிலும் இச்சேதுபதி மன்னர்கள் மறவர்களது செம்பி நாட்டுப் பிரிவைச் சார்ந்தவர்கள் என்றும் சில ஆசிரியர்களின் கருத்தாகவும் இருந்து வருகிறது. (செந்தமிழ் 1905) கி.பி 11ஆம் நூற்றாண்டில் இராஜராஜசோழன் பாண்டிய நாட்டின் மீது போர்தொடுத்து பாண்டிய மண்டலம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

முழுமையும் தனது ஆட்சியின் கீழ் கொண்டு வந்த அதே படையெடுப்பின் போது சோழநாட்டின் படைக்கு தலைமைத் தாங்கி வந்த வீரமறவர்கள் நாளடைவில் சோழர்களின் வீழ்ச்சிக்குப் பின்பு பாண்டிய நாட்டில் இருந்த சோழநாட்டுத் தலைவர்களான மறவர்கள் சுயேட்சைப் பெற்றுத் தன்னரசு மன்னர்களாக கானாட்டில் திருமெய்யம் பகுதியில் நிலைக் கொண்டிருந்தப் பின்னர் தெற்கே இன்றைய இராமநாதபுரம் மாவட்டத்தின் வடக்குப் பகுதியில் விரையாதக் கண்டம் என்ற ஊரில் நிலை கொண்டிருந்தனர் என்பதைக் கமால் என்பவர் சேதுபதி மன்னன் கல்வெட்டுகள் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். (கமால்.2002)

சேதுபதி மன்னர்கள் காலத்தால் மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள் என்றும் மதுரை நாயக்க மன்னர்களால் தோற்றுவிக்கப்பட்டவர் என்றும் சில ஆசிரியர்களின் கருத்தாகவும் இருந்து வருகிறது. இதனையே டெய்ளர் அவர்கள் மதுரையில் ஆட்சி செய்த முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரின் ராஜகுரு இராமேஸ்வரத் தலத்திற்கு புனிதயாத்திரை மேற்கொண்டதை முன்னிட்டு புகலூர் உடையார் சேதுபதி இந்த யாத்திரையின் ஏற்பாடுகளை சிறப்பாக செய்தமையால் நாயக்க மன்னரால் பாரட்டப்பெற்றார் என்றுக் குறிப்பிடுகிறார். (Taylor-1831) நெல்சன் அவர்கள் சேது யாத்திரை மேற்கொள்ளும் பயணிகளுக்கு ஒரு பாதுகாப்பு அரசாக சேதுபதிகளின் ஆட்சி இருந்திருக்கலாம் என குறிப்பிடுகின்றார். (Nelson-1861) இதைப்போல ஜேம்ஸ் பெர்குசன் உடையான் சேதுபதி என்பவர் பொ.ஆ. 1414 இராமேஸ்வரம் கோயிலின் மேல கோபுரத்தையும் திருச்சுற்று மதிலையும் எடுப்பித்தார் என குறிப்பிட்டுள்ளார். (James Perqusion-1881) இவ்வாறு சேதுபதி மன்னர்களைப் பற்றிய முந்தைய ஆய்வுகளின் அடிப்படையில் ஒவ்வொரு வராற்றாசிரியர்களின் கருத்துக்களைப் பற்றியும் அறிந்துக்கொள்ள முடிகின்றது.

சேதுபதி மன்னர்களது காலத்தில் சேது நாடானது இராமேஸ்வரம் தீவையும் அதன் மேற்கே உள்ள சில பகுதிகளை மட்டுமே குறிப்பதாக அமைந்திருந்தது. அதாவது பிற்கால பாண்டியர்களின் ஆட்சியில் இருந்த இப்பகுதியானது கோடிநாடு, கீர்செட்டிநாடு, வடவிருக்கை நாடு, வடதலை செம்பிநாடு, புனல் பறளை நாடு,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கிடாத்திருக்கை நாடு, ஆப்பனூர் நாடு, கமுதை நாடு, அளற்றுத்து நாடு, வேம்பு நாடு, பருத்திக்குடி நாடு, கருநீலக்கடி நாடு, போன்ற பகுதிகளை உள்ளடக்கியதாக இருந்துள்ளது. பொ.ஆ. 1645-ல் சேதுபதி மன்னராக ஆட்சி புரிந்த திருமலை ரகுநாத சேதுபதி சேது நாட்டின் எல்லைகளை வடக்கே ஆதலையூர் நாடு, கல்லக நாடு, புறமலை நாடு, சூரக்குடி நாடு, கள்ளர் நாடு, கழனிவாசல் நாடு, முத்தூர் நாடு, கல்வாசல் நாடு, உருவாட்டி நாடு, ஊஞ்சினைநாடு, பூங்குன்ற நாடு வரைக்கும் எல்லைப்பகுதி விரிவுபடுத்தப்பட்டதுடன் சோழ மண்ணடலத்தில் அறந்தாங்சீமை, பட்டுக்கோட்டைச்சீமை, திருவாவூர்ச் சீமை, கள்ளர் சீமையையும் கைப்பற்றி சேதுபதியின் சீமையாக மாற்றினார். மேலும் இம்மன்னரின் ஆட்சி சிறப்பினைப் பாராட்டி மதுரை திருமலை நாயக்கர் திருநெல்வேலி சீமையையும் வங்கக்கடலின் தென்பகுதியில் முத்துக்குளிக்கும் உரிமையையும் வழங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

சேது நாடானது பாண்டிய நாட்டின் ஒத்த பெரும் நிலப்பரப்பாக விளங்கியது. திருமலை ரகுநாத சேதுபதிக்கு பின் பொ.ஆ 1710 ஆம் ஆண்டில் ஆட்சி செய்த கிழவன் ரகுநாத சேதுபதி, விஜய ரகுநாத சேதுபதி (பொ. 1710 -1725) போன்ற மன்னர்களின் ஆட்சியின் போது ஏற்பட்ட அரசியல் குழப்பங்களின் காரணமாக சேதுபதிகளின் ஆட்சியானது வீழ்ச்சி அடைந்ததுள்ளது. அதில் சேது நாட்டின் வடகிழக்குப் பகுதியில் உள்ள பொலியூர் நாடு, புனல் பறளைய நாடு, கானப்போர் நாடு, உருவாட்டி நாடு, ஊஞ்சனை நாடு, நாலுகோட்டை நாடு, கண்டதேவி நாடு தென்னாலை நாடு, சூரக்குடி நாடு, கோமு நாடு போன்றவை சிவகங்கை சின்ன மறவர் சீமையோடும் இணைக்கப்பட்டது. மேலும் அறந்தாங்கி, பட்டுக்கோட்டை, திருவாரூர் போன்ற சீமைகள் பொது.ஆ 1878ல் தஞ்சை மராட்டிய மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டது. இவ்வாறு இராமநாதபுரத்தில் சேதுபதிகள் தங்களது ஆட்சி நிலப்பரப்புகளை விரிவுபடுத்தியதோடு மட்டுமல்லாமல் இச்சேதுபதி மன்னர்களின் ஆன்மீகப் பணியினை சமுதாய அடிப்படையில் நோக்கும் பொழுது கோயில்களின் திருப்பணிகளுக்கு அதிகப்படியான தானங்களை வழங்கியுள்ளனர். அவற்றுள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

ராமேஸ்வரம் கோயிலின் வழிபாட்டிற்கு ஆறுகால பூஜையின் கட்டளைக்கும் கோயிலின் விழாக்களுக்கும் ஒவ்வொரு ஊர்களையும் சர்வமானியமாக வழங்கியதோடு வருவாய் கிராமங்களையும் தானம் செய்துள்ளனர். இன்று வரை இத்தானங்களின் செயல்பாடு நடைமுறையில் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

திருப்புல்லாணி சீனிவாச பெருமாள் கோயில், திருக்கோஷ்டியூர் சௌமியநாராயணப் பெருமாள் கோவில் 16 மற்றும் 17 ஆவது நூற்றாண்டுகளில் திருவாடுதுறை ஆதீனத்தவர்களுக்கும் தானங்களை வழங்கியுள்ளனர் என்னும் செய்திகளை செப்பேடுகளின் மூலம் அறிய முடிகின்றன. மேலும் சேதுபதி மன்னர்கள் கோயில்களை கல்வி கற்கும் பாடசாலையாகவும் நடனம், நாட்டியம், இயல், இசை, நாடகம் என்னும் கலைகளை மையப்படுத்தும் கோயில்களாகவும் வழிநடத்தியுள்ளனர். பெரிய மேளம் எனப்படும் நாதஸ்வர குழுக்களுக்கும், சிறிய மேளம் எனப்படும் நாட்டிய குழுக்களுக்கும் கோயில்களின் கலை நிகழ்ச்சிகளை சிறப்பாக நடத்தியதற்கான தானங்களை பொன்னும் பொருளும் ஆகவும் ஜீவிதம் மானியங்களாக காணிகளும் காணிகள் நிறைந்த ஊர்களும் வழங்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு கோவில்களுக்கு தானம் வழங்கிய சேதுபதிகள் கீழ்க்கடற்கரையில் திருப்பெருந்துறை என்னும் பெயருடன் விளங்கிய பவித்திரமாணிக்கச் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரான ஆவுடையார் கோயிலுக்கு சர்வமானியமாக நிலங்களை கோயிலின் பூஜைக்காக வழங்கியச் செய்தியினை செப்பேடுகளின் மூலம் அறிய முடிகின்றன.

ஆவுடையார்கோயிலுக்கு என பத்துச் செப்பேடுகளில் சேதுபதி மன்னர்கள் தங்களது தான செய்தியினை பதிவு செய்துள்ளனர. இச்செப்பேடுகளில் ஆவுடையார் கோயிலுக்கு நிலங்கள், ஊர்கள், சீமைகள், நிலவரிகள் போன்றவற்றை இக்கோயிலில் நடைபெறும் பூஜைகளுக்கு தானமாக வழங்கப்பட்ட செய்தியினையும் மேலும் இக்கோயிலின் பண்டாரங்கள், செப்பேடுகளை வெட்டியவர்கள் இறைவன் இறைவியின் பெயர்களைப் பற்றியும் இவ்வூர் பவித்திர மாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயருடன் விளங்கியதையும் குறிப்பிடப்பெற்றுள்ளது. மேலும் மதுரை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

நாயக்கரான திருமலை நாயக்கரின் உடல் நலன் கருதி இக்கோயிலுக்கு வழங்கியக் கடல் முத்துக்களைப் பற்றியும் குலோத்துங்கச் சோழ நல்லூரிலிருந்து வழங்கப்பட்ட தானச் செய்தியினைப் பற்றியும் இடம்பெற்றுள்ளன. இச்செப்பேடுகளில் பவித்ரமாணிக்க சதுர்வேதிமங்கலம் என்னும் ஊர் பெயர் பொறிக்கப் பெற்றுள்ளதைத் தொடர்ந்து நோக்கும் பொழுது குறிப்பாக சதுர்வேதி மங்கலம் என்பது பிராமணர்களுக்கு கொடையாக வழங்கப்பட்ட பெரிய நிலப்பரப்பை பற்றிக் குறிப்பதாகும். சதுர்வேதிமங்கலம் என்னும் சொல்லானது சோழர்காலக் கல்வெட்டுகளில் அதிகமாக காணப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார்கோயில் அதிகமான நிலப்பரப்பினை கொண்ட பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயருடன் விளங்கியதை தொடர்ந்து சேதுபதிகளின் செப்பேடுகளும் பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலமும் என்னும் பெயரில் இக்கட்டுரையானது தொகுக்கப்பட்டுள்ளது. (நேரடிக் கள ஆய்வுகளை நோக்கும் பொழுது இக்கோயிலைச் சுற்றி பிராமணர்களின் அக்ரகாரங்கள் அமையப்பெற்றுள்ளன என்பதுக் குறிப்பிடத்தக்கது) பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என சேதுபதிகளின் செப்பேடுகளில் குறிப்பிடப்பெறறுள்ள ஆவுடையார்கோயில் தமிழகத்தின் புதுக்கோட்டை மாவட்டத்தில் இருந்து 52 கிலோ மீட்டர் தொலைவிலும் அறந்தாங்கியில் இருந்து 20 கிலோமீட்டர் தொலைவிலும் கிழக்கில் வங்கக்கடல் எல்லையையும் மேற்கில் திருமயம் வட்டத்தையும் தெற்கில் திருவாடானை வட்டத்தையும் வடக்கில் அறந்தாங்கி வட்டத்தையும் வெள்ளாற்றின் தென்கரையில் கடல் மட்டத்தின் மேற்பரப்பில் 20 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

**ஊர் பெயர்க்காரணம்**

இவ்வூர் கல்வெட்டுக்களில் மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றமாகவும், பவித்ரமாணிக்கச் சதுர்வேதி மங்கலம் என்றும், மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றம் விறுமதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்ரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்றும் கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் குறிப்பிடப்படுகின்றன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இலக்கியங்களிலும், புராணங்களிலும் இவ்வூர் சிவபுரம், அநாதிமூர்த்திதலம், ஆதிகைலாயம், உபதேசத்தலம், குருந்தவனம், சதுர்வேதபுரம், ஞானபுரம், திருமூர்த்திபுரம், தட்சிணக் கைலாயப்புரம், தென்கயிலை, யோகவனம், யோகபீடபுரம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன. திருப்பெருந்துறை என கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் இவ்வூர் ஆத்மநாதச் சுவாமிக் கோயிலின் கருவறையில் உள்ள உருவமற்ற ஆவுடையை மையமிட்டு ஆவுடையார்கோயில் என்றும் ஊர் பெயரும் கோயிலின் பெயராலையே தற்போது வரை அழைக்கப்பட்டுவருகின்றது. கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் இக்கோயிலின் இறைவன் பெயர் பவித்திர மாணிக்க சதுர்வேதி மங்கலத்து நாயனார் ஆளுடைய பரமசுவாமி என்றும், ஆளுடைய நாயனார் என்றும், இறைவி யோகநாயகி என்றும் குறிப்பிடப்பெறறுள்ளது. தற்போது இறைவன் ஆத்மநாதசுவாமி, இறைவி யோகாம்பிகை என்னும் பெயரில் அழைக்கப்பட்டுவருகின்றது.

மாணிக்கவாசகர் ஞானஉபதேசம் பெற்ற பெருந்துறை மாதோட்டம் என குறிப்பிடப்படுகின்றன. மாதோட்டம் சிங்களப் பெயர் திரிந்த தமிழ் வடிவம் என்பது குறிப்பிடத்தக்கது. சம்பந்தரும், சுந்தரரும் தேவாரத்தில் வங்கம்மலிக்கின்ற கடல் மாதோட்டநன்னகர் எனவும் மாணிக்கவாசகர் திருவாசகத்தில் மாதோட்டம் எனப்பெயர் தரும் பெருந்துறை என்றும் குறிப்பிடுகின்றனர். மேலும் பீனிசியர், கிரேக்கர், ரோமர் போன்ற மேலைத் தேசவணிகர்களின் துறைமுகம் எனவும் அரபிய பாரசீகக் குதிரைகள் இறக்குமதி செய்யப்படும் இடமாகவும் கருதப்பட்டுள்ளன. பெருந்துறை எனும் மாதோட்டம் யாழ்ப்பாணத்திலும் இருப்பது குறிப்பிடத்தக்கது. (இராசநாயகம். செ) குறிப்பாக வெள்ளாற்றின் கரைப்பகுதியில் இருப்பதனால் இவ்வூர் திருப்பெருந்துறை எனவும் பெயர் பெற்றிருக்கலாம் எனக் கருதமுடிகின்றது.

**காலக்கட்டத்தின் அடிப்படையில் பூஜைக்கானத் தானங்கள்**

பிற்காலப் பாண்டியர்களின் காலத்திலிருந்தே இக்கோயிலுக்கு வழங்கப்பட்டப் பூஜைக்கானத் தானங்களுக்குரிய கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கிடைக்கப்பெறுகின்றன. இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன் இக்கோயிலின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பூஜைக்கு 1000 மாநியத்தைச் சர்வமானியமாக கொடுக்கப்பட்டதையும், (திருப்பெருந்துறை வரலாறு ப. 42) இரண்டாம் மாறவர்மன் குலசேகரன் தனது பிறந்த நாளன்று இக்கோயிலின் சந்திக்கும், அமுதுபடி மற்றும் சாத்துப்படிக்கும், (ARE 1925-503) திருவாசகம் ஓதவும் வீரமங்கலம் என்னும் கிராமத்தின் நிலங்களைத் தானமாகவும், முதலாம் சடையவர்மன் பராக்கிரமன் இக்கோயிலில் இவனதுப் பெயரிலுள்ளச் சந்திக்கும், திருப்படி நிபந்தனைகளுக்கு உத்தமச் சோழநல்லூர், ஒக்கக்கூடி, மறவனேரிப் போன்ற கிராமங்களையும், கொடுத்துள்ளனர் என்பதை கல்வெட்டுகளில் குறிப்பிடப் பெற்றுள்ளன. (ARE 1925-502) இதைப்போல பொது.ஆ 14ம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டிய மன்னர்களான வீரபாண்டியத் தேவர், கோமாறவர்ம வீரபாண்டியன், சீவல்லபத்தேவர், மாறவர்மன் பராக்கிரமப் பாண்டியன் போன்றோர் இக்கோயிலின் திருப்பணிக்கும், பராக்கிரமப் பாண்டியச் சந்திக்கும் சாத்தக்குடி, பிள்ளைவயல், ஒக்கூர் போன்ற கிராமங்களைத் தானம் செய்துள்ளனர். இப்பாண்டிய மன்னர்களின் ஆட்சியின் கீழுள்ள வாணாதிராயர்கள், மழவராயர் தேவராயர் போன்றோரும் தானம் செய்துள்ளனர்.

வாணாதிராயர்கள் மாவலிவாணாதிராயர் என்னும் சந்தியை ஏற்படுத்தி பூஜைக்காக திருவமுது, திருபரிவட்டம், திருமாலை, திருவிளக்கு போன்றவற்றிற்கு கிராமங்களைத் தானம் செய்துள்ளனர். தஞ்சை நாயக்கர்கள் இக்கோயிலின் திருப்பணிக்காக நிலங்களையும், இக்கோயிலின் பூஜைக்காக மதுரை நாயக்கரான திருமலை நாயக்கர் முத்துசிலாபத்தில் ஒரு தோணிச் சிப்பியும் வழங்கியுள்ளார். (இராசு.செ 1994) மேலும் அறந்தாங்கித் தொணடைமான்கள் ஆன்மநாதரை குலதெய்வமாகவும், இக்கோயிலின் பூஜைக்காக நிலங்களையும், கிராமங்களையும் தானம் செய்துள்ளனர். இதைப்போல இராமநாதப்புரச் சேதுபதிகள் இக்கோயிலின் உசாக்காலப் பூஜைக்காக வெள்ளாம் பற்றுச்சீமை, அஞ்சிரண்டுச் சீமை, அறந்தாங்கிச் சீமை, பட்டுக்கோட்டை, புதுக்கோட்டை, திருப்பத்தூர், துரைக்குடி, தேர்போகிநாடு, முத்துநாடு போன்ற சீமைகளையும், இடையன்கோட்டை, வேங்கூரை, கீழ்வயல், கோயிற்காடு, நாகமங்கலம் போன்றக் கிராமங்களையும் வழங்கியுள்ளனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இக்கோயிலின் உச்சிக்காலப் பூஜைக்காக அமரடக்கி, விளானூர், இப்பூஜையின் அபிசேக, நைவேதனம், திருமாலை, திருவிளக்கிற்கு புல்லுக்குடி கிராமத்தையும், இப்பூஜைக்காக பட்டுக்கோட்டைச் சபாவைச் சேர்ந்த ஊர்களும் இப்பகுதியில் அனைத்துத்துறை ஊழியர்களும் ஒருமாதச் சம்பளத்தையும் இடையூர், சொருகானூர் ஆவுடையார்கோயிலின் தெற்குமடம், மனைகள், தென்னந்தோப்பு, நன்செய், புன்செய் உட்பட தானமாக சேதுபதி மன்னர்கள் செப்பேடுகளில் அளித்துள்ளனர் என்பதைக் கீழ்க்கண்டவாறு ஒவ்வொரு செப்பேட்டுத் தரவுகளின் படி விளக்கப்படுகின்றன.

**சேதுபதி செப்பேடுகள்**

**கணக்கன்வயல் செப்பேடு**

கணக்கன்வயல் செப்பேட்டின் காலம் பொ.ஆ.1654 எனக் குறிப்பிடப் பெறுகின்றது. தற்போது இச்செப்பேடு திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. திருமலை இரகுநாதச் சேதுபதி 76 பொன் கொடுத்து வாங்கிய நிலத்தை இக்கோயிலுக்கு கொடையாகக் கொடுத்ததைப் பற்றியும். நான்கெல்லைக்குட்பட்ட கணக்கன்வயலையும், இச்செப்பேட்டு தானத்தை பாதுகாக்க சேதுபதி மன்னர் இரகுநாத தொண்டைமானாரின் காரியக்கர்த்தரான பாண்டிய தேவனையும், பிள்ளைமாரும் காக்க வேண்டும் என்றும், அறந்தாங்கி காமாட்சிதேவன் ஆவுடையார்கோயில் செல்லப்பெருமாள் போன்றோர் சாட்சிக் கையொப்பமிட்டச் செய்தியினையும், வீரப்பிள்ளை என்பவர் இச்செப்பேட்டின் நிலவிற்பனை கொடைச் சாசனத்தை எழுதியதைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன. (இராசு.செ.1994, ப.58-63)

**திருப்பெருந்துறைச் செப்பேடு**

திருப்பெருந்துறைச் செப்பேட்டின் காலம் பொ.ஆ. 1661 எனக் குறிப்பிடப் பெறுகின்றது. இச்செப்பேடு திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. திருமலை இரகுநாத சேதுபதி மதுரை நாயக்க மன்னரான திருமலைநாயக்கரின் நலனுக்காகவும், இம்மன்னனின் தந்தை தளவாய்சேதுபதி காத்தத்தேவரின் நலனுக்காகவும் ஆவுடை பரமசுவாமி என்னும் இக்கோயிலின் இறைவனுக்கு உஷாக்காலப் பூசைக்காக வெள்ளாம்பற்றுச்சீமை, அஞ்சீரண்டுச்சீமை,

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

அறந்தாங்கிச் சீமை, பட்டுக்கோட்டைச் சீமை, புதுக்கோட்டைச் சீமை, திருப்பத்தூர் சீமை, துரைக்குடிச்சீமை, தேர்போகிநாட்டுச்சீமை, முத்துநாட்டுச்சீமை போன்ற கொடைக் கிராமங்களையும் ஏந்தல்உள்க்கிடை என்ற சிறிய ஊரினையும் தானமாக அளித்து இக்கொடைக் கிராமங்கள் பலச் சில்லறை வரிகளை கொடுக்க வேண்டாம் என்றும் பிற்காலச் சந்ததியினரும் இக்கொடையை என்றும் அழியாமல் பாதுகாக்க வேண்டும் என்று சேதுபதி மன்னர் வேண்டுகோள் விடுத்தச் செய்தியினைப் பற்றியும் குறிப்பிடுகின்றது. (இராசு.செ. 1994, ப.84 - 88)

**பெருங்காட்டுச் செப்பேடு**

பெருங்காட்டுச் செப்பேட்டின் காலம் பொ.ஆ.1668ஆக குறிப்பிடப் பெறுகின்றது. திருவாவடுதுறை ஆதினத்தவர்களால் இச்செப்பேடு பாதுகாக்கப்பட்டு வருகின்றது. திருமலை இரகுநாதசேதுபதி இக்கோயிலின் இறைவன் ஆளுடைய பரமசுவாமிக்கு உஷாக்காலப் பூஜைக்காக பெருங்காட்டின் கிழக்கு எல்லையான இடையன்கோட்டை மேன்மங்கலம், தெற்கு எல்லையான வேங்கரை, மேற்கு எல்லையான கீழ்வயல், வடக்கு எல்லையான கோயிற்காடு, நாகமங்கலத்தையும் கொண்டப் பெரியக் கிராமமான பெருங்காட்டை தானமாக கொடுத்ததைப் பற்றிக் குறிப்பிடப்பெற்றுள்ளது. (இராசு.செ. 1994 ப. 104-108)

**தச்சமல்லிச் செப்பேடு**

தச்சமல்லிச் செப்பேட்டின் காலம் பொ.ஆ.1673ஆக குறிப்பிடப் பெற்றுள்ளது. இராமநாதப்புர தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறையான அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. திருமலை இரகுநாதச் சேதுபதி இக்கோயிலின் இறைவன் ஆளுடைய பரமசுவாமிக்கு உச்சிக்காலப் பூசைக்காக அமரடக்கி மற்றும் வீரானூர்க் அருகிலுள்ள தச்சமல்லி கிராமத்தை தானமாக வழங்கிய தோடல்லாமல் அக்கிராமத்தில் உள்ள கூபம், தடாகங்கள் போன்றவைகளையும் தானமாக வழங்கியுள்ளார். இத்தானங்களைக் கொண்டு இக்கோயிலில் மடம் ஒன்று கட்டப்பட்டச் செய்தியினையும், மருதுப் பண்டாரம், ஏகப்பண்டாரம் போன்றோர் இதனை பாதுகாக்க வேண்டும் என்றும் தச்சமல்லியின் மேற்கில் துர்க்கைவனம்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

தாழங்குடிக்கருகில் சமணப்பள்ளி ஒன்றிருந்ததைப் பற்றியும் செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. (இராசு.செ. 1994, ப.118-124)

**புல்லுக்குடிச் செப்பேடு**

புல்லுக்குடிச் செப்பேட்டின் காலம் பொ.ஆ.1678 எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் இச்செப்பேடு பாதுகாக்கப்பெறுகின்றது. திருமலை இரகுநாதச்சேதுபதி மன்னரின் பெயர் இச்செப்பேட்டில் இடம்பெற்றிருந்தாலும் இம்மன்னரின் காலம் பொ.ஆ.1672ல் முடிவடைகிறது. ஆனால் இச்செப்பேடு பொ.ஆ. 1678ஆக குறிப்பிடுவதிலிருந்து இச்செப்பேடு கிழவன் சேதுபதியின் காலமாக இருக்கலாம் என்றக் கருத்தும் உள்ளது. இக்கோயிலின் இறைவன் ஆளுடைய பரமசுவாமிக்கு நந்தவனம், மடம் பராமரிப்பிற்காகவும், அபிஷேகம், நைவேதனம், திருமாலை, திருவிளக்குப் போன்றத் திருப்பணிகளுக்காக புல்லுக்குடி என்னும் கிராமத்தின் வருவாயை தானமாகக் கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. (இராசு.செ. 1994, ப.134-141)

**புதுவாக்கோட்டைச் செப்பேடு**

புதுவாக்கோட்டைச் செப்பேட்டின் காலம் குறிப்பிடப்பெறாமல் கிழவன் சேதுபதி என்னும் மன்னனின் பெயர் மட்டுமே இடம்பெற்றுள்ளன. இம்மன்னன் தனதுச் சேதுபதிப் பரம்பரையின் நலனுக்காக இக்கோயிலுக்கு புல்லுக்குடி, காடுகுடி, நரிக்குடி எட்டிச்சேரி இவற்றுடன் புதுவாக் கோட்டைக் கிராமத்தையும் இக்கிராமத்தின் பசு, அணை, மண்டபம், தோப்பு போன்றவைகளை தானமாக வழங்கியச் செய்தியினையும் மேலும் கொடையளிக்கப்பட்டக் கிராமங்கள் அரசுக்கு எவ்வித வரியும் கட்டத் தேவையில்லை என்றும் இச்செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது. (இராசு.செ. 1994, ப.158-161)

**பட்டுக்கோட்டைச் செப்பேடு**

பட்டுக்கோட்டைச் செப்பேட்டின் காலம் பொ.ஆ. 1706 ஆகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறையின் அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்படுகின்றது. கிழவன் சேதுபதி என்னும் இம்மன்னன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இக்கோயிலின் இறைவன் ஆளுடைய பரமசுவாமிக்கும், இறைவி யோகநாயகிக்கும் உஷாக்காலப் பூசைக்காக பட்டுக்கோட்டைச் சபாவைச் சேர்ந்த ஊர்களான ஆவுடையார்கோயில், அறந்தாங்கி, கிளாறாநல்லி, நேப்பவத்தம், கட்டுமாவடி, சம்பை, சாளுவநாயக்கன்பட்டினம், பழங்கரை, தெட்சிணராச்சியம் போன்ற ஊர்களையும், இச்சபாவைச் சேர்ந்த ஊர்களிலுள்ள அனைத்து துறை ஊளியர்களான மாணியக்காரர், கணக்குப்பிள்ளை, வழிமுறைக்காரர், தண்டல்காரர், தரகர், நகரத்தார் போன்றோர் அவர்களின் ஊதியத்தில் மாதம் ஒன்றுக்கு ஒருநாள் ஊதியத்தையும் மண்டபக் கட்டளைக்கு அரைவீதமும் கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயத்துறையில் புதியதாகப் பதவியேற்கும் அனைவரும் இந்தத் தர்மத்தை தொடர்ந்து நடத்த வேண்டும் என்றும் இந்த அறச்செயலைச் செய்தவர்கள் சிதம்பரத்தில் பதஞ்சலி வியாக்கிரபாதர் பெற்றப்பேறு பெறுவர் என்றும் கூறப்பட்டுள்ளது. சேதுபதி அரசரின் ஆணைக்கினங்க மருதபண்டாரம் என்பவரின் மகன் சின்னத்தம்பியாபிள்ளை இச்செப்பேட்டை எழுதியுள்ளார் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. (இராசு.செ. 1994 ப.220-223)

**மன்னார்சலாபச் செப்பேடு**

மன்னார்சலாபச் செப்பேட்டின் காலம் பொ.ஆ. 1729 ஆகும். திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் இச்செப்பேடு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. விசயரகுநாத சேதுபதிகாத்ததேவர் என்னும் மன்னன் திருப்பெருந்துறை ஆத்மநாதச்சுவாமிக்கும், சிவயோக நாயகிக்கும் அடப்பவரிசை ஆபரணத்திற்காக மன்னார்சலாபத்தின் முத்துக்குளிப்பில் ஒரு பகுதியைச் சர்வமானியமாகச் சேதுபதி அரசர் வழங்கியுள்ளார். இம்மன்னார் சலாபத்தில் ஒரு தோணிக்கு 5 சிப்பி அளிக்க வேண்டும் என இச்செப்பேட்டில் கட்டளையிடப்பட்டுள்ளது. மேலும் ஆவுடையார்கோயிலை திருப்பெருந்துறை பாண்டிநாட்டில் மிழலைக் கூற்றத்தில் நடுவிற் கூற்றம். தனியூர் பிரம்மதேயம் பவித்திர மாணிக்க சதுர்வேதி மங்கலம் ஆதிகைலாசசிவபுர சேத்திரம் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. (இராசு.செ.1994, ப.296-300)

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**திருப்பொற்கோட்டைச் செப்பேடு**

திருப்பொற்கோட்டைச் செப்பேட்டின் காலம் பொ.ஆ.1733 ஆகும். தற்போது இச்செப்பேடு ஆவுடையார்கோயிலில் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. விசயரகுநாத சேதுபதி காத்தத்தேவர் என்னும் மன்னன் திருப்பொற்கோட்டை என்னும் ஊரை இக்கோயிலின் ஆதீனமடமான திருவாவடுதுறை ஆதீனத்திற்கு கொடையாக அளித்ததையும் நன்செய் புன்செய் நிலங்கள் தானமாக வழங்கப்பட்டதையும், சுங்கத்துறையில் எட்டு மாகாணங்களில் வணிகர்களின் வரியினைப் பற்றியும், சேதுபதி அரசர் தனதுச் சத்திரத்தை திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலுக்கு பண்டாரச் சன்னதி என்னும் பெயரில் அன்னதான மடமாகக் கொடையாக அளித்தார் என இச்செப்பேட்டில் குறிப்பிடப்பெற்றுள்ளது. (இராசு.செ.1994, ப.336-342)

**விலானூர்ச் செப்பேடு**

விலானூர்ச் செப்பேட்டின் காலம் 1782 ஆகும். தற்போது இச்செப்பேடு திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. முத்துராமலிங்க விசயரகுநாதச்சேதுபதி மன்னர் திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார்கோயிலுக்கு உச்சிக்காலப் பூசைக்காக விலானூர், இடையூர், சொருகானூர், பூதக்குடி, கோடிக்குளம், ஆவுடையார்கோயில் தெற்குமடம், மனைகள், தென்னந்தோப்பு, நன்செய், புன்செய் உட்பட நெல்லியடிக்குளம், நெல்லியடித் தோப்பு போன்றக் கிராமங்களையும், நிலங்களையும் கொடையாக வழங்கியதைப் பற்றியும், இப்பகுதியிலுள்ள சுங்கம், மகமை, நாடுகால்வரி, உள்ளூர்வரி, சாணார்வரி, இடங்கைவரி, வலங்கைவரி, இவைகளுடன் மொத்தம் பதினெட்டு வரிகளை இக்கோயிலின் பூசைகாக வழங்கியுள்ளார். இவற்றுடன் இராமநாதப்புரச்சீமை, திருவாடனைச் சீமையிலுள்ள நன்செய், புன்செய் நிலங்களும் வழங்கப்பட்டுள்ளன. மேலும் திருவிழாக் காலங்களில் சேதுபதிச் சீமையிலிருந்தும், சிவகங்கைச் சீமையிலிருந்தும் வரும் கால்நடைகள அனைத்தும் இக்கட்டளையின் கீழ் சேர்க்க வேண்டுமென்றும், இப்பூசைக்காக வாகனம், பூசனம் போன்ற ஆபரணங்களும்,

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பாத்திரங்களும் வழங்க வேண்டுமென்று கட்டளையிட்டுள்ளார். இச்செப்பேடு திருவாவடுதுறை ஆதீனத்தவர்களால் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும் அவர்களின் கண்காணிப்பின் கீழ் சாசனங்களின் செயல்பாடுகள் நடைபெற வேண்டும் என்றும் குறிப்பிடப்பெற்றுள்ளது. (இராசு.செ. 1994, ப.473-478)

**கோயிலின் சிறப்புகள்**

கோயிலின் கருவறையில் ஆவுடையை மட்டுமேக் கொண்டு இறைவனாக வழிபடப்படுகின்றன. லிங்கபாணம் ஆவுடையெனும் பீடத்தினுள்ளே திருவுண்ணாளி எனும் பள்ளமான பகுதியில் இலிங்கபாணம் அல்லாமல் அருவமாகக் காட்டப்பட்டுள்ளது. முதல் பிரஹாரத்தில் கருவறையின் வடமேற்கு மூலையில் அம்மனின் கருவறை யோகாம்பிகை என்னும் பெயருடன் அமைந்துள்ளது. இங்கு கருவறையில் அம்மன் அருவமாக யோகநிலையில் நின்றவாறு தாமரைப் பீடத்தின் மீது பாதங்கள மட்டும் காட்டப்பட்டு சாளரத்தின் வழியே வழிபாடு நடத்தப்படுகின்றது. இவ்வழிபாட்டினை மக்கள் நேரிடையாக காண்பதரிது. மேலும் சிவனின் யோகநிலைக்கு தட்சிணா மூர்த்தியின் சிற்பமும் எடுத்துக்காட்டாகும். தட்சிணம் என்ற யோக நிலையில் சிவன் தெற்குதிசையை நோக்கியே காட்டப்படுகின்றார்.

அந்நிலையில் தட்சிணாமூர்த்தியின் சிற்பமானது சிவன் கோயில்களில் கருவறையின் தெற்குப்புறத் தேவகோட்டத்தில் அமையப்பெற்றுள்ளன. இதைப்போல இக்கோயிலில் இறைவனும், இறைவியும் யோகநிலையில் ஆன்மாவாக காணப்படுவதால் தெற்குப்பார்த்தக் கோயிலாக அமையப்பெற்றுள்ளது. இத்தெற்குத் திசையை நோக்கிய முதற்கோயிலும் இதுவேயாகும் என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகவும் இருந்துவருகின்றது. மேலும் இக்கோயிலில் கருவறையின் ஆத்மநாதர் மற்றும் அம்மனுக்கு நிகரானப் வழிபாட்டை மாணிக்கவாசகரே பெற்று விளங்குகிறார். அதிகார நந்திகேசுவரராகவும் காணப்படுகின்றார். இத்தலத்தில் மாணிக்கவாசகரே இறைவனுக்குரிய ஆடையணிகலன்களைப் பூண்டு வாகனங்களையும் ஏனைய வழிபாட்டு உரிமைகளையும் திருவிழாச் சிறப்புகளையும் பெற்று விளங்குகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

ஒரு சிவத்தொண்டனுக்கு, சிவனுக்கு நிகரான வழிபாட்டு முறையினையும், விழாக்களையும் இக்கோயிலில் கொடுத்திருப்பதைப் போல வேறெந்தக் கோயில்களிலும் இப்படிப்பட்ட சிவத்தொண்டனின் வழிபாடு காணப்பட்டதற்கான சான்றுகள் இல்லையென்றேக் கூறலாம். மேலும் இக்கோயிலில் நந்தி, கொடிமரம், பலிபீடம், சண்டிகேசுவரர், துவாரபாலகர் எதற்கும் முக்கியத்துவம் கிடையாது இவையனைத்துமே இக்கோயிலில் இல்லையென்பதும் குறிப்பிடத்தக்கது. இத்துவாரபாலகர்களின் சிற்பமும் துவார வலம்புரி விநாயகர், இடம்புரி விநாயகர் சிற்பங்களும் தில்லைமண்டபம், கனகசபை மற்றும் இரகுநாதபூபால மண்டபங்களில் போன்ற இடங்களில் தான் காணப்படுகின்றன. இச்சிற்பங்கள் அர்த்தமண்டபங்களில் கிடையாது ஏனென்றால் இங்கு அனைத்துமே மாணிக்கவாசகருக்குத் தான் முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளன. கருவறையின் இறைவனுக்கு காட்டப்படும் தீபத்தை கருவறையினை விட்டு வெளியே கொண்டுவருவது கிடையாது. காரணம் தீப ஜோதியில் மாணிக்கவாசகர் கலந்திருக்கிறார் என்ற ஐயப்பாடினால் இதனை வெளியேக் கொண்டுவருவதில்லை என்பது அர்ச்சகர்களின் கருத்தாக இருந்து வருகின்றது.

கோயிலின் கருவறையில் ஆண்டு முழுவதும் சூரிய ஒளியானது ஆவுடையின் மீது விழுகின்றது என்றும், இறைவன் யோகநிலையில் இருப்பதால் இங்கு மேளம் வாசிப்பது கிடையாது அதற்குப் பதிலாக சங்கு, திருச்சின்னம் என்னும் இரட்டைப் பித்தழைக்குழாய் போன்ற வாத்தியங்களை உவச்சர்கள் வாசிக்கின்றனர் எனவும் குறிப்பிடுகின்றனர். மேலும் இக்கோயிலில் குருந்தமூலக் குருவுக்குச் சோழியப் பிராமணரும், ஏனையச் சன்னிதிகளுக்குச் சிவாச்சாரியராகிய பிராமணரும், நரியைப் பரியாக்கிய குதிரைச் சேவகருக்கு ஓதுவாரும், வீரப்பத்திரருக்குக் கொத்தனாறும் பூஜை நடத்துகின்றனர். மடப்பள்ளியில் நாள்தோறும் புதிதாகத் தீ மூட்டப்படாமல் பல ஆண்டுகளுக்கு முன் மூட்டப்பட்ட நெறுப்பே இன்னும் எரிகிறது என இக்கோயில் பிராமணர்களின் வாய்மொழிச் செய்தியாக நேரடிக் களப்பணியில் காணமுடிகின்றது. இக்கோயில் மண்டபம், சபை, பூஜைகள், ஆதாரங்கள், பூஜகர்கள் நிவேதனம் என

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

ஒவ்வொன்றும் ஆறு என்ற எண்ணிக்கையில் காணப்படுகின்றன. மண்டபங்கள் பஞ்சாட்சர மண்டபம், தில்லை மண்டபம், தேவ மண்டபம், அமுது மண்டபம், அலங்காரதீப மண்டபம், கற்பகிரகம் எனவும், சபைகள் ஆனந்தசபை, சித்சபை, சத்சபை, தேவசபை, நடனசபை, கனகசபை மற்றும் பூஜைகள் திருவனந்தல், சிறுகாலசந்தி, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாம பூஜைகளாகவும் ஆதாரங்கள் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞையாகவும், பூஜகர் நம்பிமார்கள், சிவாச்சாரியர்கள் அத்யானபட்டர், ஓதுவார் கொத்தனார், உவச்சர்கள் என அமையப்பெற்றிருப்பது சிறப்புக்குரிய ஒன்றாகும். இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தவர்களின் மேற்பார்வையில் திருப்பணிகள் மேற்க்கொண்டு செயல்பட்டுவருகின்றது.

**முடிவுரை**

சேதுபதி மன்னர்கள் சிறப்பான ஆடசியை மேற்க்கொண்டார்கள் என்பதை ஆவுடையார்கோயில் மட்டுமல்ல அனைத்துக் கோயில்களுக்கும் இவர்களால் வழங்கப்பட்ட தானங்களிலிருந்து அறிந்துக்கொள்ள முடிகின்றது. குறிப்பாக இச்சேதுபதி மன்னர்கள் குறிப்பிட்ட நிலப்பரப்புகளை மட்டும் ஆட்சி செய்திருந்தாலும் கூட பல்லவர்கள், பாண்டியர்கள், சோழர்கள், விஜயநகரர், நாயக்கர்கள் போன்ற மிகப்பெரிய பேரரசுகள் கோயில்களுக்கு வழங்கியத் தானங்களைப் போலவே சேதுபதிகளும் கோயில்களுக்கு வழங்கிய தானங்களை கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகளின் மூலம் பதிவுசெய்துள்ளனர் என்பதுக் குறிப்பிடத்தக்கது. இச்சேதுபதி மன்னர்களின் ஆட்சிப்பரப்பு சோழ மண்டலம் வரை விரிவடைந்திருந்ததை மிழலைக் கூற்று நடுவிற்கூற்று என்று ஆவுடையார்கோயில் செப்பேட்டு வரிகளின் மூலம் அறியமுடிகின்றன. மேலும் சேதுபதிகளின் செப்பேடுகளில் குறிப்பிடப்பட்டுள்ள பவித்திரமாணிக்க சதுர்வேதி மங்கலம் என்னும் பெயருடைய ஆவுடையார்கோயிலின் வழிபாட்டிற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் என்புதம் குறிப்பிடத்தக்கது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**நூற்பட்டியல்**

[1] இராமன். கே.வி. *பாண்டியர் வரலாறு*, தமிழ்நாடு அரசு, சென்னை, 1977.

[2] இராசமாணிக்கனார்.முர். *சோழர் சரிதம்*, பூரம் பதிப்பகம், சென்னை, 1999.

[3] இராசு.செ. *சேதுபதி செப்பெடுகள்*. தமிழ்ப்பல்கலைக்கழகம் தஞ்சாவூர், 1994.

[4] கமால்.எஸ்.எம். *சேதுபதி மன்னர்கள் செப்பேடுகள்*, இராமநாதபுரம், 1993.

[5] கமால்.எஸ்.எம். *விடுதலைப்போரில் சேதுபதி மன்னர்கள்*, இராமநாதபுரம், 1987.

[6] கமால்.எஸ்.எம். *சேதுபதி மன்னர்கள் கல்வெட்டுகள்*, இராமநாதபுரம், 1987.

[7] சதாசிவப்பண்டாரத்தார்.தி.வை. *பிற்காலச் சோழர் வரலாறு*, அண்ணாமலைப் பல்கலைகழகம், சிதம்பரம், 1974.

[8] சதாசிவப்பண்டாரத்தார்.தி.வை. *பாண்டியர் வரலாறு*, மணிவாசகர் பதிப்பகம், சென்னை 2001.

[9] சீனிவாசன்.கே.ஆர். *தென்னிந்தியக் கோயில்கள்*, நேஸனல் புக் டிரஸ்ட் ஆப் இந்தியா, புதுடில்லி, 1966.

[10] சேதுப்பிள்ளை ரா.பி. *தமிழக ஊரும் பேரும்*, சென்னை, 1940.

[11] இராசநாயகம்.செ. *யாழ்ப்பாண சரித்திரம்*, சென்னை, 1994.

**References**

[1] Raman. K. V. *Pandiyar Varalaru*, Government of Tamil Nadu, Chennai, 1977.

[2] Rajamanikkanar. M. *Chola Charitam*, Pooram Publishing House, Chennai, 1999.

[3] Rasu. S. *Sethupathi Cheppudukal*, Tamil University Thanjavur, 1994.

[4] Kamal. S. M. *Sethupathi Mannar Cheppetugal*, Ramanathapuram, 1993.

[5] Kamal S. M. *Veduthalaipporil Sethupathigal*, Ramanathapuram, 1987.

[6] Kamal S. M. *Sethupathi Mannar Kalvettugal*, Ramanathapuram, 1987.

[7] Sathasivapandarattar.Y. *Later Chola History*, Annamalai University, Chidambaram, 1974.

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[8] Sathasivapandarathar.Y. *Pandiyar Varalaru*, Manivasakkar Publishing House, Chennai, 2001.
[9] Srinivasan. K. R. *Thenninthia Koyilgal*, National Book Trust of India, New Delhi, 1966.
[10] Sethupillai R. P. *Tamilaga Urum Perum*, Chennai, 1940.
[11] Rasanayakam.S. *Yalpana Sarithiram*, Chennai, 1994.
[12] Mahalingam.T.V, (ed.), *A Topographical list of inscriptions in Tamilnadu and Kerala States*. Vol. II, Indian Council of Historical Research, New Delhi, 1988.
[13] Annual Report of Epigraphy. *Archaeological Survey of India*, New Delhi, 1925.
[14] Balasubramanyam.S. R. *Later Chola Temples*, Mudgala Trust, Faridabad, 1979.
[15] Balasubramanyam. S. R. *Middle Chola Temples*, Oriental Press, Amsterdam, 1977.
[16] Balasubramanyam. S. R. *Early Chola Temples*, Oriental Longman, Chennai, 1971.
[17] Nilakanda Sastri, K.A. *A History of South India*, Oxford University, Chennai, 1971.
[18] Nilakanda Sastri, K.A. *The Cholas*, University of Madras, Chennai, 1975.
[19] Subbarayalu.Y. *Political Geography of the Chola Country*, The State Department of Archaeology, Govt. of Tamilnadu, 1973.
[20] Subramaniyan. N. *History of Tamilnadu*, Madurai, 1981.
[21] Subramaniyan. N. *Sangam Polity*, Madurai, 1966.
[22] Sathyanatha Iyer. *History of Madura Nayaks - Introduction*, Madurai, 1924.
[23] Thiruvenkata Chettiar. *Sethupathi's of Ramnad*, Ramanathapuram, 1952.
[24] Rajaram.T. *Manual of Ramnad Samasthanam*, Tamilnadu Arasu, 1891.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# "நுண்வெளிக் கிரகணங்கள்" நாவலில் காப்புக் குலத்தினரின் கால்நடைகள் பற்றிய அறிவு

## Knowledge of the Kappu Kula's Livestock in the Novel of *Nunveli Kiraganangal*

**ம. செந்தில்குமார்,** முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, பெரியார் பல்கலைக்கழகம், சேலம் - 11
**M. Senthilkumar,** Ph.D. Research Scholar, Department of Tamil, Periyar University, Selam - 11
ORCiD: https://orcid.org/0000-0002-9436-132X
**முனைவர் ரா.தேவணன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பெரியார் பல்கலைக்கழகம், சேலம் – 11
**Dr R. Devanan,** Assistant Professor, Department of Tamil, Periyar University, Selam – 11
ORCiD: https://orcid.org/0000-0002-8598-2984
**DOI: 10.5281/zenodo.5101455**

## Abstract

*Knowledge is formed on the basis of human activities in social dialectics. Each community group will have knowledge of their respective professions, activities, and natural insights. The conservation clans living in the Kambam Valley are grazing communities. They have different knowledge about livestock. The cognitive systems of bulls, cows, racing cows, and bullocks become their intellectual property. They are aware of its characteristics with the actions of the rearing of the bull. Their knowledge of the types of dairy cows, milking methods and calving methods are also found in the novel. The knowledge of the people of Kappu Kula's livestock is revealed in S. Venugopal's novel "Nunveli Kiraganangal". Hence, the article deals with the concerned topic-related texts of the novel.*

**Keywords:** Kappu Okkaligar, Livestock, Kambam Valley, *Nunveli Kiraganangal.*

### முன்னுரை

மனித வாழ்வில் கடைபிடிக்கும் வழக்கங்கள் யாவும் அனுபவத்தின் விளைவாக உருவானவையாகும். நம்பிக்கைகளாகவும், சடங்குகளாகவும் இருப்பவற்றிற்கு அறிவியல்பூர்வமான நிரூபணங்கள் இல்லையென்றாலும் அவற்றை மக்கள் நம்புவதற்குக் காரணம், அது அனுபவத்தின் விளைவாகக் கடைபிடிக்கப்பட்ட செயல்களின் உருத்திரிபு என்பதால்தான் எனலாம். மீவியல் நம்பிக்கைகள் அறிவியலால் நிரூபிக்கப்பட்டவையல்ல. ஆனால் அவை பற்றிய கருத்துக்கள் மக்களிடம் எப்பொழுதும் காணப்படுகின்றன. மனித அறிவானது அனுபவத்தின் விளைவாக உருப்பெறுவது என்று இயங்கியல் அடிப்படையில் கூறுவர். பல்வேறு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

துறை சார்ந்த அறிவுப் புலங்கள் காணப்படுகின்றன. வேளாண் சார்ந்த அறிவினை உடையவர்கள் எந்தக் கல்வியும் கற்றில்லாதவர்களாக மண்ணின் வகை, விளையும் பயிர், பயிரின் தன்மை ஆகியவற்றைப் பற்றி அறிந்திருப்பார்கள். விலங்குகளை வளர்ப்பவர்கள் அவற்றின் அசைவுகள், கத்துதல்கள் ஆகியவற்றைக் கொண்டு அவற்றின் மூலம் விளையும் தட்ப, வெப்ப நிலைகளைக் கணக்கிட்டுக் கொள்வார்கள். ஒவ்வொரு சூழலிலும் வாழும் மக்கள் அச் சூழலின் பாலான அறிவினைப் பெற்றிருப்பர் எனலாம். அறிவென்பது புறவய யதார்த்தத்தின் மீது மனிதர்கள் நிகழ்த்தும் இடையீட்டினால் உருவாவதாகும். எனவே புறத்தில் காண்பதின் உருத்திரிபுகள் அகத்தில் பதியப் பெற்று அதன் பல்வேறு கோணங்கள் வெளிப்படுகின்றன. இக்கட்டுரை சு.வேணுகோபாலின் நுண்வெளிக் கிரகணங்கள் நாவல் காப்பு ஒக்கலிகர் இன மக்களின் வாழ்வியலில் கால்நடைகளான பசுக்கள், காளைகள் ஆகியவற்றினைப் பற்றிய அறிதல்களை வழி வெளிப்படுத்துகிறது.

**அறிவென்பது என்ன?**

மனிதர்களின் மனம் செயல்படத் தொடங்கும் போது அறிவும் செயல்படத் தொடங்குகிறது. தர்க்கவகைப்பட்ட செயல்பாடுகளே அறிவு என்று கொள்ளப்படுகிறது. மரபு வகைப்பட்ட அறிவு என்பது மரபணுக்கள் வழியாகக் கடத்தப்படுவதும் உண்டு. ஆனால் அது மட்டுமே முழுமையான ஒரு மனிதனின் அறிவினை சுட்டுவதாகாது. குழந்தை பிறந்ததிலிருந்து இயல்பூக்கமான சில செயல்களைச் செய்கிறது. இயல்பூக்கமற்ற பிற செயல்கள் செய்விக்கப்படுகின்றன. உளவியல் ரீதியாக ஒரு குழந்தையின் செயல்களைத் தடுக்கும் போது மனம் பிளவுபடுகிறது. பின்பு அது உணர்த்தப்படுகிறது. இதை செய்யக் கூடாது என்பது உணர்ந்ததும் அதுவே அறிவாக சேகரமாகிறது. “மனதை அகப்பொறி என்கிறார்கள் தமிழர்கள். மனம் அகப்பொறி என்றால் புறப்பொறி எது? அதுதான் மெய், வாய், மூக்கு, கண், செவி என ஐந்தும். புறப்பொறியின் புலன் உணர்வுகளை அகப்பொறியான மனம் பதிவு செய்து கொள்கிறது. இதுதான் அறிவின் தோற்றத்திற்கு அடிப்படைய” (சி.மகேந்திரன், அறிவு பற்றிய தமிழரின் அறிவு, ப.17) என்ற கூற்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

புறவயமான சூழலைப் புரிந்து கொள்ளுதல், சமூகத்தைப் புரிந்து கொள்ளுதல், மனிதர்களைப் புரிந்துகொள்ளுதல் என்பதாக வளர்ச்சி நிலைகளில் குழந்தைப் படிப்படியாக சமூக மனிதனாகும் போது அறிதல் முறையினைக் கற்றுக் கொள்கிறது என்பதை உணர்த்துகிறது. மேலும், "புறத் தூண்டுதலால் மூளையில் ஏற்படும் மாற்றங்கள்தான் மனிதரால் நிகழ்த்தப்படும் அனைத்திற்கும் காரணம்" (சி.மகேந்திரன், அறிவு பற்றிய தமிழரின் அறிவு, ப.24) என்ற கூற்று மனித மூளை செயல்படுவதற்கு புறவயமான காட்சிகளே காரணமாகின்றன என்பதைக் கூறுவதாக அமைகிறது. எனவே அறிவென்பது புறவயகாட்சிகளின் அகப் பரிமாணமே எனலாம். கல்வியின் மூலம் பெறுவதும் அறிவெனக் கொள்ளலாம். அனுபவத்தின் மூலமாக புறவயமான சூழலில் கற்றுக் கொள்ளுவதே பெரிதும் மனிதனை இயக்கும் அறிவாகக் கொள்ளப்படுகிறது. "அனுபவத்திற்கு இயைபுடையதாக இருப்பது உண்மை அறிவு. அனுபவத்திற்கு முரணான அறிவு பொய்மையானது. உண்மையான அறிவு உலகின் இயல்போடு ஒத்துப் போவது" (க.நாராயணன், தமிழரின் அறிவுக்கோட்பாடு, ப.30) என்று அனுபவத்திற்கும் மனித வாழ்விற்கும் அறிவுக்குமான தொடர்பினை வெளிப்படுத்துகிறார் க.நாராயணன்.

ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒவ்வொரு அறிவுப்புலம் செயல்படுமெனக் கொள்ளலாம். மனிதப் படிமலர்ச்சியில் மனிதர்கள் இயற்கையை வென்று தம் கட்டுக்குள் கொண்டு வந்ததில் அறிவின் வளர்ச்சி முக்கிய இடம் பெறுகிறது. திணை நிலைச் சமுதாயம் போல கருவிகளின் வளர்ச்சியில் மனிதர்கள் பெற்ற அனுபவங்களே தொழில்களாக மாறுகின்றன. தொழில்கள் ஒவ்வொன்றும் ஓர் அறிவுக் கொத்தாக மனிதனுள் சேகரமாகிறது. அது வழிவழியாக பிறர்க்குக் கடத்தப்படுகிறது. இவ்வாறு ஒரு சமூகத்தின் அறிதல் முறை உருவாக்கம் பெறுகிறது.

**கால்நடை மேய்ச்சல்**

மனிதச் சமூகத்தின் படிமலர்ச்சியில் இரண்டாம் நிலையாகக் குறிக்கப்படுவது மேய்ச்சல் சமூக நிலையாகும். தொடக்கத்தில்விலங்குகளை வேட்டையாடி அவற்றை உணவாகக் கொண்ட மனிதன் பின்பு அவற்றைப் பழக்கித் தம் தேவைகளுக்குப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பயன்படுத்திக் கொள்ளும் அறிவினைப் பெற்றான். "சமூக அமைப்பில் மிருகங்களைப் பழக்குதல், வளர்த்தல், பயிரிடுதல் ஆகியன சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தன.... பாலும் இறைச்சியும் தரக்கூடிய விலங்குகளைப் பழக்குவதிலிருந்து அநாகரிக நிலையின் கட்டம் தொடங்குகிறது. கால்நடைகளைப் பழக்கி வளர்த்தல், பெரிய மந்தைகளைத் திரட்டி அமைத்தல் இந்நிலையின் முக்கிய கட்டங்கள் ஆகும். கால்நடை மந்தைகளை அமைத்தல் வசதியுள்ள இடங்களில் மேய்ச்சல் வாழ்க்கைக்கு இட்டுச் சென்றது" (சிலம்பு நா.செல்வராசு, தொல்தமிழர் திருமண முறைகள், ப. 37) என்ற கூற்று விலங்குகளைப் பழக்கும் மனிதப் படிமலர்ச்சியின் இடைக்கட்டம் பற்றிக் கூறுகிறது. கால்நடைகளில் ஆடு, மாடு, நாய், ஒட்டகம், குதிரை, பன்றி என்பன போன்ற பல்வேறு விலங்குகள் காணப்பட்டாலும் மாடுகளைத்தான் வீடுகளில் வளர்த்தார்கள். அவற்றிலிருந்து கிடைக்கும் பால் பொருட்களைக் கொண்டு உணவுத் தேவையினை போக்கிக் கொண்டனர்.

மேலும், மாமிசம், தோல் ஆகியனவற்றையும் பயன்படுத்திக் கொண்டனர். மாடுகளின் வகைகளும் அவற்றின் குணங்களும் மாறுபட்டனவாக அமைகின்றன. பசுக்களின் வகைகளையும் அவற்றின் பண்புகளையும் அறிய பன்னெடுங்கால விலங்குகளுடனான அனுபவங்களைக் கொண்ட சமூகத்தின் அவ்வறிவினை கொண்டிருப்பர். மாடுகளில் பல வகையுண்டு. ஒவ்வொரு மாட்டின் குணமும் வேறுபட்டு அமையும் என்பதையும் அவற்றின் வளர்ச்சி நிலை, ஆயுள், ஈனும் முறை ஆகியன பற்றிய அறிதல்களையும் கொண்டிருப்பர்.

**காப்பு ஒக்கலிகர் சமூகத்தில் கால்நடைகள்**

தமிழகத்தில் வாழும் சமூகத்தினரில் சாதிய பிரிவுகள் பல இருக்கின்றன. ஒ்வவொரு சாதிக்குள்ளும் பல்வேறு உட்கிளைச் சாதிகள் காணப்படுகின்றன. கர்நாடகத்திலிருந்து புலம்பெயர்ந்து தமிழகத்தின் மேற்குப் பகுதிகளில் வாழ்ந்து வரும் ஒரு சாதியினர் காப்பிலிய ஒக்கலிகர் எனப்படுகின்றனர். இவர்கள் தேனி, பெரியகுளம், மதுரை போன்ற பகுதிகளில் வசிக்கின்றனர். இவர்கள் கம்பம் பள்ளத்தாக்குப் பகுதிக்கு மேய்ச்சல் நிலத்தைத் தேடி வந்தவர்கள் என்றும்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கால்நடைகளை வளர்த்து அவற்றைக் கொண்டு வாழ்க்கை நடத்தியவர்கள் என்றும் கூறப்படுகின்றனர் “மதுரை மாவட்டத்திலுள்ள கம்பம் பள்ளத்தாக்கினைச் சேர்ந்த காப்பிலியன்களைப் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு.சி.ஹயவரத ராவிற்குக் கடப்பாடுடையேன் தேவுரு ஆவு எனவும் தமிழில் தம்பிரான் மாடு எனவும் அழைக்கப்படுகின்றன. இந்த இனப் பசுக்களிடம் இவர்கள் பால் கறப்பதில்லை இவற்றின் கன்றுகள் வளர்ந்த பின் இனப்பெருக்கத்துக்கு அன்றி எந்தப் பணியிலும் ஈடுபடுத்துவதில்லை. இந்தக் கால்நடைகள் இறக்குமாயின் இவற்றை ஆழக் குழி தோண்டிப் புதைக்கின்றனரே அன்றி சக்கிலியர்களிடம் ஒப்படைப்பதில்லை. இக்காளைகளில் ஒன்று பட்டத்து ஆவு என அழைக்கப்படுகிறது. ஒரு விசித்திரமான சடங்கினை நடத்தி இந்தப் பட்டத்து ஆவினைத் தேர்ந்தெடுக்கின்றனர்” (எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், பக்.273-274) என்று காப்புக் குலத்தினரைப் பற்றியும் அவர்கள் மேய்ச்சல் தொழிலைக் கொண்டிருப்பவர்கள் என்றும் காளைகளைப் பற்றி அவர்கள் கொண்டிருக்கும் நம்பிக்கைகளைப் பற்றியும் அவற்றிற்கு அவர்கள் நிகழ்த்தும் சடங்குகள் பற்றியும் எட்கர் தர்ஸ்டன் எடுத்துரைத்துள்ளார்.

அட்டி மாடுகள் மேய்ச்சலுக்கும் கிடை போடவும் பயன்படுத்தப்படும் என்பதையும் மாடு இறந்தால் சக்கிலியர்களிடம் கொடுக்க மாட்டார்கள் என்பதையும் நுண்வெளிக் கிரகணங்கள் நாவல் பதிவு செய்துள்ளது “மாடி மொகப்புல மாட்டுக் கொம்பு நல்லா இருக்கில்ல. அதுவா அட்டி மாடுக பெரும்பாலும் வீட்டுக்கு வராதுக. கரட்டோரம் கெட போட்டு மேச்சலுக்குப் போய் வரும். தனியா ஆள் போட்ருக்கோம். நோய் நொடி தாக்கி மாடு எறந்துச்சுன்னா சக்கிலியனுக்குக் கறி போட கொடுக்கமாட்டோம். வீட்டுக்கு எடுத்து வந்து மஞ்சத் துணி போட்டு சாஸ்திரம் பண்ணுவோம், பால் தெளிப்பு, அகத்திக் கீரை நீவல், அது இதுன்னு செஞ்சு உறுமி எல்லாம் வாசிச்சு பொதைப்போம்” (சு.வேணுகோபால், நுண்வெளிக் கிரகணங்கள், பக்.113-114) என்று குறிப்பிடுவதன் மூலம் அச்சமுதாயத்தினர் கால்நடைகளை நடத்தும் விதத்தை அறியலாம். அச்சமுதாயத்தினர் வேளாண்மை சார்ந்த தொழில்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பலவற்றில் ஈடுபட்டு வருகின்றனர். அவர்கள் கால்நடைகளை வேளாண்மைப் பணிக்கும் மாட்டுவண்டிப் பந்தயம் விடுவதற்கும் பயன்படுத்துகின்றனர். அவற்றினைப் பற்றிய பல்வேறு நுணுக்கங்களை அறிந்திருக்கின்றனர். மாட்டுவண்டிப் பந்தயத்திற்கென்று வளர்க்கப்படும் காளைகள் குறித்த நேர்த்தியான அறிதல் நுண்வெளிக் கிரகணங்கள் நாவலில் பதிவு பெற்றுள்ளன. பசு மாடுகளையும், ஏர் உழுவதற்குப் பயன்படும் மாடுகளையும் குறித்தும் தனித்துவமான அறிதலைப் பெற்றிருக்கின்றார்கள்.

**மாட்டு வண்டிப் பந்தைய மாடுகள் குறித்த அறிவு**

பழங்காலத்தில் மனிதர்கள் வாகனத்திற்கு குதிரைகளையும், கழுதைகளையும் பயன்படுத்தினர். சக்கரத்தின் பயனும் தொழில்நுட்பமும் வளர்ச்சியடைந்த காலத்தில் மாடுகளைப் பூட்டி வண்டியை இயக்கக் கற்றனர். மாடுகள் அதற்காக வளர்க்கப்பட்டு பக்குவப்படுத்தப்பட்டன. அது போலவே மனிதர்கள் ஏறுதழுவுதல் போல மாடுகளை தட்டு வண்டிகளில் பூட்டிப் பந்தயம் வைத்தனர். அதில் வெற்றி பெறும் மாடுகள் பரிசுகளைப் பெற்றன. மாட்டு வண்டி பந்தயம் பல ஊர்களில் நடத்தப்படுகின்றன. அதில் கலந்து கொள்ளக் கூடியவர்கள் குறிப்பிட்ட சாதியினராக இருந்தனர். ஆனால் தற்போது அந்நிலை மாறியிருக்கிறது. "மக்கள் பந்தய வண்டி ஓட்டுவது என்பதை வீரு விளையாட்டுக்களில் ஒன்றாகவே கருதுகின்றனர். பந்தய வண்டியை ஆண்கள்தான் ஓட்ட வேண்டும். பெண்கள் ஓட்டக் கூடாது. ஏனென்றால் பெண்கள் வலிமை குறைந்தவர்கள். பந்தய வண்டியை ஓட்டும் போது உள்ளோட்டியாக இருக்கக் கூடியவர் வண்டி ஓடிக் கொண்டிருக்கும் போதே கீழே இறங்கி மாடுகளை அடித்து வேகமாக ஓடச் செய்ய வேண்டும்" (அ.அன்புத் தவமணி- கட்டுரையாளர், பண்பாட்டு அடையாளம்: அதிகாரம் விவாதங்கள், ப.19) என்று பந்தய வண்டிகளை ஓடடும்ட நடைமுறை பற்றிக் கூறப்படுகிறது.

அதில் ஈடுபடுத்தப்படும் மாடுகளை பராமரித்தல், பழக்குதல் போன்ற செயல்களை அடிப்படையாகக் கொண்ட அறிவினை உடைய மக்கள் குறித்தும் இவ்வாறு பந்தயத்திற்கென வளர்க்கப்படும் மாடுகள் குறித்த செய்திகளையும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

நுண்வெளிக் கிரகணங்கள் நாவலில் காணமுடிகிறது. மாட்டுப் பந்தையத்திற்கென மாடுகளை பழக்குவதைப் பற்றியும் பந்தைய மாடுகளைத் தினமும் ஓட்டப் பயிற்சி கொடுத்தல், தீவனம் கொடுத்தல், தண்ணீர் விடுதல் போன்றவை பற்றிய அறிதல்களையும் மாடுகளின் வகைகள் அதற்கேற்ற குணங்கள் ஆகியன பற்றிய அறிதல்களையும் நாவல் சுட்டியுரைக்கிறது. அசோக்கும் ராஜாங்கமும் மாடுகளை வண்டியில் பூட்டி சுற்றுகிறார்கள். "ஓடித் தவித்த காளைகள் நல்ல திராட்டில் வந்தாலும் பைரவன் கோயில் முக்கில் திரும்பியதும் ஓட்டமெடுத்துப் பாய்ந்து கால்களை விசிறிப் போட்டன. வண்டியின் தடதடப்பைக் கேட்டு டீக்கடைக்குள்ளே இருந்தவர்கள்… வேடிக்கை பார்த்தார்கள். அசோக் கயிற்றை மட்டும் இடறி நிலைதடுமாறாமல் இருக்க தொய்யல் இல்லாமல் எடுத்துக் கூட்டிப் பிடித்திருந்தான். இளைப்பில் தள்ளிய வாயின் நுரைகள் ரோட்டில் கோடாக விழுந்து போயின. பின்னால் அமர்ந்திருந்த ராஜாங்கம் டேய் எல்லாரும் பாக்குறாங்கடா ஒரு தட்டு தட்டுடா என்று காதுபக்கம் சொன்னான். முக்கு அகலமில்ல. ஓடிச் சுத்த முடியாது.

நொடிச்சு தட்டுனா முக்கில ராத்தி புரட்டிப் போட்டுடும் வீடு நெருங்கிருச்சில்ல. அதுதான் கூடாது என்று சொல்லும் போதே புல்லை முக்கில் லாவகமாக பக்கவாட்டில் வால் பறக்கப் பாய்ந்து சுற்றியது. மிச்ச மீதி இருந்த சாணி கொஞ்சூண்டு வெளியேறியது. காளைகளின் புட்டங்களில் எல்லாம் சாணி. வால் வீச்சில் அசோக்கின் தொடைகளில் சாணி அப்பிக் காய்ந்து விட்டது" (சு.வேணுகோபால், ப.122) என்று காளைகளை வெறுமனே ஓட்டிப் பழக்கும் விதம் கூறப்படுகிறது. ஊருக்குள் ஓட்டி வரும் போது அவை கூச்சத்தை விட்டு விடுகின்றன. மாடுகள் குறுக்குச் சந்துகளில் ஓடுவதற்குப் பழக்கப்படுத்தும் போது பந்தயங்களில் வேகமாக ஓடுவதற்கு தயக்கம் காட்டாது என்பதும் இதில் விளங்குகிறது. அந்த மாடுகளை கட்டும் விதம் குறித்தும் கூறப்படுகிறது. "புல்லையைச் சுடலை அவிழ்த்துக் கொண்டு போய் வெட்ட வெளியில் கயிற்றை நீட்டி விட்டு முளைக்குச்சியில் கட்டினான். குறுக்கிக் கட்டினால், நிமிர்ந்து கால்களை உதறிக் கொள்ள முடியாது. காரியைக் கடலைக் கொடிப் படப்பிற்கு எதிரில் கட்டினான் ராஜாங்கம்… ரேஸ் காளைகள் இரண்டும் தண்ணீருக்கு இழுத்தன. விரட்டி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

வந்த காளைகளுக்கு உடனே தண்ணீர் காட்டக் கூடாது. மூச்சுவாங்கல் நன்றாக நின்ற பின் தான் காட்ட வேண்டும். நாக்கால் எச்சிலை சுழற்றி நக்கின" (சு.வேணுகோபல். ப.123) என்று காளைகளைக் கட்டும் முறை தண்ணீர் காட்டும் முறை குறித்த அறிதல்கள் வெளிப்படுகின்றன. மூச்சு இயல்பான நிலைக்கு வரும் போதுதான் தண்ணீர் காட்ட வேண்டும் இல்லையெனில் தண்ணீர் அடைத்துக் கொண்டு இறப்பு நேரலாம் என்பதை அனுபவத்தால் அறிந்திருந்தார்கள் எனவே தண்ணீர் கொடுக்கும் முறை பற்றி விளக்கப்படுகிறது. புல்லை, மயிலை, காரி என்பன மாடுகளின் வகைகளாகக் குறிப்பிடப்படுவனவாகும். பந்தைய மாடுகளுக்கு உரிய குணங்களைப் பற்றிக் காளியப்பன் கூற்றாக நாவலில் கூறப்படுகிறது.

> **பூஞ்சிட்டு, கரச்சான், நடுமாடு, பெரிய மாடு என்று வகை வகையாக ரேஸ்களுக்கு என்று முன்பு இந்த கொட்டத்தில் தனித் தனியாக ஜோடிகள் இருந்தன. இப்ப பெரிய மாடு மட்டும். பேருக்கு வைத்திருக்கிறார்கள். வீச்சுக்கால் மாடுகள் ரேசுக்கு தோதுப்படாது. ரெண்டு மூணு ரேஸிலேயே நீர்க்கட்டு வந்து விடும். அப்படி வந்தும் மொலியில் சூடு வைத்து வீக்கத்தைக் குறைத்து மறு ரேஸூக்கு இறக்கத் தயார் செய்வதும் உண்டு. கிழக்குச் சீமையிலே மேலூர், சிவகங்கை கிடை மாடுகளில் வெரளிகளைக் கண்ணிப் போட்டுப் பிடித்து பழக்குவார்கள். (சு.வேணுகோபால், ப.141)**

என்று பந்தைய மாடுகளின் வகைகளும் இப்போது சில வகைகள் இல்லாமல் போனதும், வீச்சுக்கால் மாடுகள் ரேஸுக்குப் பயன்படாது ஆயினும் அவற்றையும் பயன்படுத்தி காலில் சூடு போட்டு ரேஸுக்குப் பயன்படுத்துகின்றனர் என்பதும் கூறப்படுகிறது.

மேலும், "வடக்கத்தி, காங்கேயம், தாராவரம், கன்னாவரம், அத்திக்கோம்பை மாடுகள் பதினஞ்சு பிடியிலிருந்து பதினாறு பிடிவரை இருக்கும். வடக்கத்தி மாடுகள் வேலைக்குத்தான். ரேஸுக்கு விடுவதில்லை. அதுகள் ராஜகளையாக இருக்கும். ரேஸ் மாடுகள் கரளிகளாக இருக்கும். பெரும்பாலும் தேனி போன்ற நகரங்களில் டயர் வண்டிகளுக்கு வடக்கத்தி மாடுகள்தான். சேர்க்கிறார்கள். கன்னாவரத்தில் வாங்கிய

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com


இரண்டு ஜோடி மாடுகளம் ஒரு கோப்பு சொல்லலாம். ஆறு பல்லில் வாங்கியவை. ஒரு சுருட்டுக்கு தட்டு வண்டியை அந்தரமாகத் தூக்கிப் போகும். தொடர்ந்து ஆறாறும் பன்னிரெண்டு கிலோ மீட்டர் போய்த் திரும்ப வேண்டுமென்றால் தொடக்கப் பாய்ச்சலில் கடைசிவரை வராதுகள். நாட்டு மாடுகள், குட்டை சைசுகள், குறுங்கால், தோல் சன்னமிருக்கும். எல்லைக்கோடு தாண்டுற வரைக்கும் விடி விடாதுகள்" (சு.வேணுகோபால், ப.141) என்ற குறிப்பிலிருந்து பல்வேறு வகையின மாடுகளில் பந்தையத்திற்குப் பயன்படுத்தப்படும் மாடுகளின் பிடி அளவு, அதன் பாய்ச்சல், அதன் கம்பீரம் ஆகியனவற்றைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

மேலும், சில வகை மாடுகள் அட்டியிலிருந்து பிடித்து வரப்பட்டதாக இருந்தாலும் பந்தயத்திற்குப் பயன்படுத்தாமல் டயர் வண்டிகளுக்குப் பயன்படுத்துவார்கள். பந்தய மாடுகளுக்கென்று சில பயிற்சிகளை மாடுகள் ஏற்கும் நிலையில்தான் அவற்றைப் பந்தயங்களுக்குப் பயன்படுத்துவர் என்பதும் புலப்படுகிறது. பந்தய மாடுகளுக்கு உணவாகத் தரும் பொருட்களைப் பற்றிக் கூறும் போது "ஒரு மாசமாக கால் வாளி பருத்திப்பால்தான். ஒரு கூடை பிஞ்சு கத்தரிக்காய்கள், ஒரு முடி நாத்து, சோளப்பொறி இதுதான் தீவனம். வயிறு சால் போடாது. எக்கிக் கட்டும். கொடங்கை அளவு அகத்திக் கீரை, நடு ஜாமத்தில் இரண்டு பஞ்சாரம் கடலைக் கொடி, இல்லையென்றால் பட்ட நாத்து" (சு.வேணுகோபால், ப.142) என்று அவை உண்ணும் உணவுகள் பற்றியும் எந்த உணவினைக் கொடுத்தால் பந்தய மாடுகள் கட்டுக் கோப்பாக இருக்கும் என்பதையும் அறிந்திருந்தார்கள். சால் போடாது என்னும் போது வயிறு பெரிதாகி விட்டால் பந்தயத்திற்கு பயன்படுத்த முடியாது. எனவேதான் அதற்கான தீவனத்தைப் போடுகிறார்கள் எனக் கொள்ளலாம். இவ்வாறு பந்தய மாடுகளைப் பற்றியும் அவற்றின் வகைகள், அவற்றைப் பராமரிக்கும் விதம், பழக்கும் விதம், அட்டி மாடுகளில் தேர்ந்தெடுக்கும் விதம் பிற பயன்களுக்கும் பந்தயத்திற்கும் பயன்படுத்தும் மாடுகளின் சிறப்புப் பண்புகள் எனப் பலவற்றைப் பற்றிய அறிவு முறைகள் காப்பு ஒக்கலிகர் சமூகத்தினரிடம் காணப்படுவதை நாவல் சுட்டுகிறது.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**வேளாண்மைக்குப் பயன்படும் கால்நடைகள் பற்றிய அறிவு**

பண்டைய காலத்திலேயே வேளாண்மைக்கு மாடுகள் பயன்படுத்தப்பட்டு அதன் மூலம் விவசாயத்தைப் பெருக்கினர் என்பதை வரலாற்று ரீதியாக உணர முடிகிறது. ஏரில் பூட்டப்பட்டு உழுவதற்கு பல்வேறு விலங்குகள் பயன்படுத்தப்பட்டாலும் மாடுகளே பெரிதும் பயன்படுத்தப்பட்டன. 'ஏர் உழுவதற்கும் நீர் இறைப்பதற்கும் குப்பை முதலியவற்றை அடிக்கும் வண்டியை இழுக்கவும் கதிர் மிதிக்கவும், மாடுகள் அவசியமாகின்றன. மாடுகளை வைத்துக் கொண்டால் நிலத்துக்கு வேண்டிய உரமும் கிடைக்கும். மாடில்லா விவசாயிகளின் வாழ்வு ஒரு வாழ்வாகாது என்பர்" (ஜி.இராஜகோபால் பிள்ளை (தொ.ஆ), தென்னிந்திய வேளாண்மை, ப.89) என்ற கூற்று உழுவதற்கும் இன்ன பிற பயன்பாட்டுக்கும் மாடுகள் இன்றியமையாதவை என்பதைக் கூறுவதாக அமைகிறது.

காப்பு ஒக்கலிகர்கள் வேளாண்மைக்குப் பயன்படுத்தும் கால்நடைகளைப் பற்றிய பல்வேறு அறிதல்களைக் கொண்டுள்ளனர். "ரெண்டு பல் போடறது வரைக்கும் நேக்காலுக்குப் பூட்டுறது கெடையாது. பிட்டி அகண்டு நிக்கும் பல் போட்ட பின்னாடி தட்டு வண்டியில பழக்கங் காட்டியும் படாதபாடு படுத்திடும். சும்மா எகிறும். டாம்பீகம் பண்ணும். தொளியில போட்டு பத்து நாளைக்கிக் கழட்டினாதான் திமிர் அடங்கிப் பழக்கப்படும்" (சு.வேணுகோபால், ப.114) என்று மாட்டினை தொளிக்குப் பயன்படுத்த அதனைப் பழக்கப்படுத்தும் விதத்தினைக் குறிப்பிடுகின்றார் திம்மையா கவுடர்.

உழுவதற்குப் பயன்படுத்தும் முன் அதனை நன்கு பழக்கப்படுத்த வேண்டும் என்கின்றனர். ஒவ்வொரு மாட்டுக்கும் ஜோடி மாடுகள் அமைவதைப் பொறுத்தும் வேலை நன்கு நடக்கும் என்றும் கூறப்படுகிறது. "அந்தக் கருமயில விவசாயத்தையே பதினாறு வருசம் கட்டி இழுத்துச்சு. ஏழு மாட்ட அதுக்கு ஜோடி மாத்துனோம். ஏழையும் தின்னுடுச்சு. எட்டாவது மாட்டை தூக்கிப் போட்ட பின்னாடிதான் அடங்கிப் போச்சு. அது எறந்தப் புறம் கொம்பெடுத்து வச்சோம்" (சு.வேணுகோபால, ப.114) என்ற கூற்று உழுவதற்குப் பயன்படும் மாடானது தன் ஜோடி மாடுகளை இல்லாமல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

ஆக்கும் ராசியினை உடையதாக இருந்தது என்று கூறப்படுகிறது. மாடுகள் இறந்தால் அவற்றின் கொம்புகளை அட்டி பெருகவும் பால் நன்கு கறக்கவும் எடுத்து வைப்பதை வழக்கமாகக் கொண்டிருப்பது கூறப்படுகிறது. உழவுக்குப் பயன்படுத்தும் போது நேர்ந்த ஆபத்தினைக் குறித்து,

> **இந்தா பாருங்க இந்த அல்லப்புறத்திலே அந்தக் கருமயில முட்டுனது. அப்ப காளைக்கு நல்ல வயசு. சதி பாச்சக்காரி. மனசுல வம்மம் வச்சிருந்து செண்டிருச்சு. சரி வீட்டுல நிப்பாட்டுன்னா ராங்கி ஏறிக்கிடுதுன்னு, வேலைக்கு எறக்கினேன். ஒழவுல தாட்டியம் பண்ணிப் போற மாட்ட பாத்திருக்கீங்களா, சர்ர்ரன்னு நல்லபாம்பு போறது கணக்காப் போகும். எடத்தில போட்டா வலத்து மாட உறிஞ்சியெடுத்திடும். வலம்மன்னா தலவரையில ஓடிச் சுத்தணுமில்ல அதனால வலத்துல போட்டுக் களட்டுன்னேன். சட்ட செய்யல. வலத்தில போட்டு களட்டினாலும் ஒரு நூலு கழுத்த நீட்டித்தான் போகும். கவனமில்லன்னா கொழு ஜோடி மாட்டுக் காலைத்தான் பதம் பார்க்கும். (சு.வேணுகோபால், ப.144-115)**

என்று காளைகளை வேளாண்மைக்குப் பயன்படுத்தும் போது அதனால் ஏற்படும் ஆபத்துக்களையும், காளைகள் மூர்க்கமாக இருக்கும் போது அதனை பழக்குவதற்கு செய்யும் நடைமுறைகளையும் வலம், இடம் பார்த்து காளைகளைப் பூட்டுவதன் மூலம் காளைகள் அடங்கிப் போகும் விதம் பற்றியும் ஜோடி மாடுகளில் வலம், இடம் மாறிப் போனால் ஏற்படும் சிக்கல்களையும் எடுத்துரைக்கிறார் திம்மையா.

இவ்வாறு வேளாண்மைக்குப் பயன்படுத்தும் மாடுகளின் தன்மை, அவற்றை அட்டி மாடுகளிலிருந்து பிரித்துக் கொண்டு வந்து பழக்கப்படுத்துதல், தொளி அடிக்க விடுதல், நுகத்தில் பூட்டுதல், ஏரில் பூட்டுதல் என பலவாறு பழக்கப்படுத்தப்படுகின்றன. அவ்வாறு பழக்கப்படுத்தாவிட்டால் அவற்றைப் பயன்படுத்த முடியாது. எந்த மாடுகளை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதைப் பற்றிய அறிதல்களைக் கொண்டவர்களாக ஒக்கலிகர்கள் இருப்பதை நாவல் சுட்டுகிறது.

**பால் பயன்பாட்டிற்கான பசுமாடுகள்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பசுக்களை வீடுகளில் வளர்ப்பது பெரும்பாலும் அவற்றினால் கிடைக்கும் பாலுக்காகவே எனலாம். வீடுகளில் குழந்தைகள் முதல் பெரியவர் வரை பால் அருந்துவது ஒரு வழக்கமாகக் காணப்படுவதால் பசுக்களை வளர்த்து அவற்றின் மூலம் பெறும் பாலை வீட்டுப் பயன்பாட்டுக்கும் விற்பனைக்கும் என வைத்துக் கொள்கின்றனர். "மாடுகள் தாம் உண்ணும் உணவைப் பாலாக மாற்றித் தம் வம்ச விருத்திக் காரணமாகும் தம் கன்றுகளுக்கும் நமக்கும் அளித்து வருகின்றன. அவ்வாறு பசுக்களின் மடியில் பால் ஊறுவது இயற்கையில் அமைந்த ஒரு அற்புதச் செயலாகும்" (கே.எஸ்.லட்சுமணன், மாட்டுச் செல்வம், ப.152) என்ற கூற்றுக்கிணங்க பசுமாடுகள் தருகின்ற பால் மனிதர்க்கும் பசுங்கன்றுகளுக்கும் உதவுகின்றன. பசு மாடுகள் கருவுறுதல் பற்றிய அறிதல்கள், ஈனும் போது செய்யப்படும் செயல்கள் எனப் பலவற்றைப் பற்றியும் அறிவுமுறைகள் சமூகத்தில் காணப்படுகிறது. மாடு வாங்க வந்தவர்கள் திம்மையா வீட்டு மாடுகளை பார்க்கின்றனர். கொட்டத்தில் படுத்திருந்த பசுமாட்டினை எழுப்பிப் பார்க்கின்றனர்

**போற போக்கில் படுத்திருந்த செவலை சிந்துப் பசுவை எழுப்பி விட்டுப் பார்த்தார்கள். எழுந்ததும் மூத்திரம் பெய்தது. அதன் தொப்பூள் காகிதப்படகு போல் தொங்கியது. மந்தமான தோல் கூடு கொம்பு. இடக்கொம்பு வலக்கொம்பு மேல் விழுந்தால் ராசி என்பார்கள். கழுத்துத் தோல் படுதா போல் நெளிவு நெளிவாகத் தொங்கியது. வீட்டுப்பாடு, பாலுக்காக வாங்கியது. இங்கு வந்து ஒரு ஈத்து ஈன்றிருந்தது. பால் வத்திய பின் செனையே பிடிக்கவில்லை. மூன்று வருசமாக மலடாக நிற்கிறது. மொட சாயும் நேரத்தில் அட்டிமாடு கூட ஓட்டி விட்டார்கள். பொலி காளைகள் போட்டி போட்டு ஏறின. பசு அத்தனையையும் வாங்கி ஏப்பம் விட்டு விடுகிறது. செனை பிடிக்க வைப்பதில் பொலி காளைகள் மூன்று வருசமாக தோற்றுக் கொண்டு இருக்கின்றன. (சு.வேணுகோபால், ப.144)**

என்று பசு மாட்டினை பாலுக்காக வாங்கி அதனை பராமரித்து வருகின்றமை கூறப்படுகிறது. கருவுருதலுக்காக பல்வேறு முறைகளைப் பின்பற்றியும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கருவுறவில்லை என்று வருந்தும் நிலையில் அந்த மாடு மலடாகிப் போனது பற்றிய செய்தி கூறப்படுகிறது. பசு ஈனும் போதான நிகழ்வுகளைக் குறித்த அறிதல்களை,

> **பசு இரண்டு மூன்று முறை படுத்து எழுந்து விட்டது. தனகோபால் சிந்து மாட்டை அமட்டி விட்டு வந்தான். அடிவயிற்றில் செருமல் சில மாடுகளுக்கு ஏழு மாசத்திலிருந்தே கன்னுக்குட்டி முட்டுவது தெரியும் வயிறு அலுங்காமல் இருந்தால் காளங்கன்று பிறக்கும் கருவறைக்குள் பெண் துள்ளாட்டம். வெளியில் சங்கிலிப் பிணைப்பு. ஆண் கருவறையில் பதுங்கல் வெளியில் பாய்ச்சல். இதுக்கு கன்று முட்டியதை ஒரு நாள் கூடப் பார்க்கவில்லை. மட்டக்குழி மூன்று நாளுக்கு முன்னமே போட்டு விட்டது. இன்னைக்கு நாளைக்கின்னே மாடு இழுத்தடிச்சிருச்சி, தல ஈத்து கெடேரின்னாலே கணிக்க முடியாது. ஈத்து மாடுன்னா அரையின் தளர்ச்சியைப் பாத்தே இன்ன நாள் ஈனுமன்னு சொல்லிடலாம். கெடேரிபோல சிறுகச்சிறுக மடி போடாது. நாலு நாள்ல மடி போட்டு நிக்கும். இந்த மயிலை இருவது நாள எதிர்பார்க்க வச்சிடிச்சி. (சு.வேணுகோபால், ப.240)**

என்ற நாவலின் பகுதியானது பசு மாட்டு வகைகளில் ஒன்றான மயிலைப் பசு கருவுற்ற நாட்களை வைத்தும் அதன் நடவடிக்கைகளை வைத்தும் என்ன கன்று போடும் என்று கணித்து விட முடியும் என்பதைக் கூறுகிறார்கள். அது போல பிற மாடுகளில் மூன்று நாளில் மடி போட்டு விடும் ஆனால் இந்த மாடு இருவது நாளை கடத்தி விட்டது என்று கூறுவதன் மூலம் ஒவ்வொரு வகை மாட்டிற்கும் ஒரு விதமான உடல்வாகு இருப்பது சுட்டப்படுகிறது. மாடுகளின் நடவடிக்கைகளைக் கொண்டு அவற்றினால் நடக்கும் செயல்களை கணக்கிடுகின்ற அறிவானது அனுபவத்தின் மூலம் கிடைப்பதாகும். இவ்வாறு பசு மாடுகளின் வகைகள், அதன் நடவடிக்கைகள், ஈனும் கன்றுகள், பால் கறக்கும் விதம் என்பனவற்றைப் பற்றிய அறிதல்களை நாவல் வெளிப்படுத்துகிறது.

## முடிவுரை

அறிவுசார்ந்த சொத்துடைமை என்பது சம காலத்தில் பேசுபொருளாகி இருக்கிறது. ஒவ்வொரு துறை சார்ந்தும் அறிவுத் தொகுப்புகள் காணப்படுகின்றன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இனக்குழுக்களின் அறிவுத் தொகுப்பானது அவர்களது வாழ்வியலை அறிந்துகொள்வதற்கானதாக இருக்கிறது. கால்நடைகளை வாழ்வாதாரமாகக் கொண்டவர்கள் அவற்றின் நடவடிக்கைகளைக் கொண்டு சூழலைக் கணிப்பது உண்டு. நுண்வெளிக் கிரகணங்கள் நாவலில் சுட்டப்படும் காப்பு ஒக்கலிகர் என்னும் கன்னடத்தைச் சேர்ந்த இனமக்கள் கம்பம் பள்ளத்தாக்கில் வாழ்கின்றனர். அவர்களது கால்நடைகளைப் பற்றிய அறிதல்கள் அனுபவத்தின் விளைவாக சேகரிக்கப்பட்ட அறிவுத் தொகுப்பாக அமைகிறது. காளைகளைப் பற்றியும் அதன் வகைகள், செயல்பாடுகள், உடல்நிலை, பராமரிக்கும் விதம், தீவனம் போடுதல் என பலவற்றைப் பற்றிய அறிதல்கள் சுட்டப்படுகின்றன. அட்டி மாடுகளில் பந்தய மாடுகளும் உழவுக்குப் பயன்படுத்தும் மாடுகளும் இனம் பிரிக்கப்பட்டு அவற்றின் பல்வேறு வகைகளும் அவற்றின் இயல்புகளும் குறித்துக் கூறப்படுகின்றன. அது போல பசுமாடுகளின் தன்மை, வகை, பராமரித்தல் என்பனவற்றைப் பற்றிய அறிவினையும் நாவல் சுட்டுகிறது.

**துணைநூற்பட்டியல்**

[1] சு.வேணுகோபால், *நுண்வெளிக் கிரகணங்கள்*, தமிழினி, அண்ணாசாலை, சென்னை, 2017.

[2] எட்கர் தர்ஸ்டன் (தமிழில் க.ரத்னம்), *தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்,* தொகுதி மூன்று, பதிப்புத்துறை, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2010.

[3] சி.மகேந்திரன், *அறிவு பற்றிய தமிழரின் அறிவு*, டிஸ்கவரி புக் பேலஸ், கே.கே.நகர், சென்னை, 2018.

[4] க.நாராயணன், *தமிழரின் அறிவுக்கோட்பாடு*, மாரி பதிப்பகம், கொட்டுப் பாளையம், புதுச்சேரி, 2003.

[5] சிலம்பு நா.செல்வராசு, *தொல்தமிழர் திருமண முறைகள்*, காலச்சுவடு, 669,

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கே.பி. சாலை, நாகர்கோவில், 2016.

[6] சி.ஜெயசங்கர், நா.சுந்தரரத்தினம், ச.பட்டம்மாள், கு.இரவிக்குமார், மூ.தாமரைச் செல்வி (தொ.ஆ), *பண்பாட்டு அடையாளம் அதிகாரம் விவாதங்கள்*, ஆய்வாளர் மன்றம், நாட்டுப்புறவியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2010.

[7] ஜி.இராஜகோபால்பிள்ளை (தொ.ஆ), *தென்னிந்திய வேளாண்மை*, தென்னிந்திய வேளாண்மைக் கழகம், பிட்சாண்டடார் கோவில், திருச்சி, 1949.

[8] கே.எஸ்.லட்சுமணன், *மாட்டுச் செல்வம்*, வள்ளுவர் பண்ணை, சென்னை, 1964.

**References**

[1] S.Venugobal, *Nunveli Kiraganangal*, Tamilini, Annasalai, Chennai, 2017.
[2] Edkar Tharston, (Translate in Tamil – K.Ratnam, *Caste and Tribes in Southern India*, Publication Department, Tamil University, Tanjore, 2010.
[3] S.Mahendran, *Arivu Pattriya Tamilarin Arivu*, Discovery Book Palace, K.K.Nagar, Chennai, 2018.
[4] K.Narayanan, *Tamilarin Arivu Kotpadu*, Mari publication, Kottupalayam, Pudhuchery, 2003.
[5] Silambu N.Selvarasu, *Tholtamilar Thirumana Muraikal*, Kalachuvadu, 669, K.P.Salai, Nagarkovil, 2016.
[6] S.Jayasankar, N.Sundarratnam, S.Pattammal, K.Ravikumar, M.Thamaraiselvi (Ed), *Cultural Idendity: Power and Dialogues*, Scholars Forum, Department of Folklore, Madurai Kamaraj University, Madurai – 21, 2010.
[7] G.Rajagobalpillai (Ed), *Southern Agricultre*, Southern Agricultural Society, Pitchandar Kovil, Trichy, 1949.
[8] K.S.Lakshmanan, *Mattuselvam*, Valluvar Pannai, Chennai, 1964.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# திருமங்கலம் வட்டார கல் வழிபாடும் தீயில் மாண்ட நடுகல் வழிபாட்டு முறைகளும்

## Stone Worship and the Stone Erections for the Immolated in Thirumangalam Taluk

**முனைவர் கி. நாகேந்திரன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி, சாத்தூர், விருதுநகர் மாவட்டம்.

**Dr.K.Nagendran,** Assistant Professor, Department of Tamil, Sri.S.Ramasamy Naidu Memorial College, Sattur, Virudhunagar District.

**ORCiD: https://orcid.org/0000-0003-2865-7832**

**DOI:** 10.5281/zenodo.5111275

**Abstract**

*Tamil Nadu is known for its indigenous culture and tradition. The way worshipping methods contains different rituals. The people of Thrumangalam Taluk is better known for such practices that include ancestral worship, worship of the bravely dead, worship of the dead by fire etc. The are many stories behind the worshipped persons in this area. It consists of immolation or self-immolation for friendship, paramour, anonymous deaths and even about the death of a dog that is loyal to the master. The people revere to them and their belief plays significant matters in the lives of the people. So, a direct survey had been done to get the real facts behind such beliefs and the stories. Many old people of the area had explained about the real incident that as they have gained from their elders. Indeed, there are many reasons for establishing such sites by establishing stones; the reasons are discussed in the paper. Moreover, the article decodes the various situations and states of the martyred to elucidate them in detail.*

**Keywords:** Stone Worship, Stone Erections, Immolated, Thirumangalam Taluk

மனிதன் கல்லை வழிபாடு செய்வதைப் பல இடங்களில் கண்கூடாகக் காண முடிகின்றது. கல் ஆசாரி தன் கல்லைத் தேர்வு செய்யும் போது ஆண் கல், பெண் கல், அலி கல் என்று பார்த்துத்தான் தேர்வு செய்கின்றான். தேர்வு செய்யும் முன் கல்லை உடைப்பதற்கு வழிபாடு செய்கின்றனர். மலைகளில் உள்ள பாறை, பூமியின் அடியில் உள்ள பாறையை உடைக்கும் தொழில் செய்யும் மக்கள் முதன் முதலில் வழிபாடு செய்து விட்ட பின்பே கல்லை உடைக்க வெடி வைக்கின்றனர். கல்லின் அருமை கல் செய்யும் சிற்பிக்குத்தான் தெரியும் என்பார்கள்.

**கல்லைக் கண்டால் நாயைக் காணோம்**
**நாயைக்கண்டால் கல்லைக் காணோம்**

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்ற பழமொழி நாட்டுப்புறத்தில் வழக்கில் இருந்து வருகின்றது. கல்லைப் பார்க்கின்ற மனிதனின் கண்களுக்கு ஏற்றார் போல் அதன் வடிவம் தெரியும். கல்லாய்ப் பார்த்தால் அது கல், தெய்வமாய்ப் பார்த்தால் அது தெய்வம் என்ற மனிதனின் மன இயல்பிற்கு ஏற்றார் போல வடிவம் அமையும். இதிலிருந்து தோன்றியதுதான் நடுகல் வழிபாடு என்று கூறுவர். இறப்புச் சடங்கு செய்யும் ரெட்டியார் இனமக்கள், இறப்புச்சடங்கு செய்யும் பொழுது ஏழு சிறு சீனிக்கல் எடுத்து அந்தக்கல்லை நல்ல எண்ணெய், சீயக்காய், பால் ஊற்றிக் கழுவி, சந்தனம், குங்குமம் இட்டு, இறந்தவர்களுக்கு என்ன படையல் செய்கின்றார்களோ அனைத்தையும் அந்தக் கல் முன் வைத்து வழிபடும் வழக்கத்தை இன்றளவும் காண முடிகின்றது.

**அம்மிக்கல் வழிபாடு**

அம்மிக்கல்லைத் தெய்வமாக வழிபடும் வழக்கம் இருந்து வருகின்றது. திருமணம் நடைபெறும் நாளில் அம்மி மிதித்து காலில் மெட்டி போடும் வழக்கம் தமிழ்நாட்டில் நிலவி வருகின்றது. பெரும்பான்மையான நாட்டுப்புறங்களில் அம்மியைப் பெண்ணாக வணங்குகின்றனர். அம்மிக்கல்லை என்றுமே கிழக்கு மேற்காகத்தான் போட வேண்டும் என்றும், அம்மி அரைக்கும் முன் அம்மியில் மஞ்சள் வைத்து அரைக்க வேண்டும் என்றும் கூறுகின்றனர். தெலுங்கு பேசும் மக்கள் அம்மிக்கல்லை ‘பசுவு இராயி’ என்று கூறுகின்றனர். பசுவு என்றால் மஞ்சள். இராயி என்றால் கல். மஞ்சள் அரைக்கும் கல் என்று பொருள் கூறுகின்றனர். சுமங்கலிப் பெண்கள் தான் அம்மியை அரைப்பர் என்பதை,

**வாவாசி பிட்டம்மா**
**பசுவு நூறும் இராயம்மா**
**திவ்ய அரசி பிட்டம்மா**
**திதி சேய எவுரம்மா**

என்ற தெலுங்குப் பாடலும்,

**சுமங்கலிப் பெண்ணம்மா**
**அம்மி அரைக்கும் கல்லம்மா**
**திவ்ய அரசி பெண்ணம்மா**
**திதி செய்ய ஆரம்மா**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்ற தெலுங்கு ஒப்பாரிப்பாடலும் குறிப்பிடுகின்றன. நாட்டுப்புற தெய்வக் கோயில்களில் அம்மிக்கல் இல்லாத கோயில்கள் இல்லை. சாமிக்கு மஞ்சள் அரைத்து குளிப்பாட்டுவதற்கு இந்தக்கல்லைப் பயன்படுத்தகின்றனர். நாளடைவில் இந்த வழக்கம் மாறி வருகின்றது.

**குத்து உரல் வழிபாடு**

திருமணத்திற்கு முதல் நாள் மஞ்சள் குத்தும் சடங்கு நடைபெறும். இவை முதலில் நடைபெறும் சடங்காகும். மஞ்சள் குத்தும் சடங்கு தமிழ்ச் சமூகத்தில் நடைபெறும் ஒன்றாகும். வழிபாடு நடைபெறும் நாளில் குத்து உரலுக்கும், உலக்கைக்கும், மஞ்சள் தேய்த்து, சந்தனம், குங்குமம், வெற்றிலை பாக்கு, விரலி மஞ்சள் வைத்து காப்பு கட்டப்படுகின்றது. பின்பு உரல் முன்பு தேங்காய், வாழைப்பழம் வைத்து வழிபாடு நடைபெறுகின்றது. வழிபாடு முடிந்தவுடன், மாப்பிள்ளை வீட்டார், அம்மா, அத்தை, அண்ணி, சித்தி போன்ற உறவுமுறை உடைய பெண்கள் ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று என்ற ஒற்றைப்படை எண்ணிக்கையில் பெண்கள் மஞ்சள் குத்துகின்றனர். மஞ்சள் குத்தும் பொழுது மஞ்சள் சிதறாமல் குத்த வேண்டும். மஞ்சள் சிதறி விட்டால் திருமண வாழ்க்கை நன்றாக அமையாது என்று கூறுகின்றனர். இதன் மூலம் முன் கூட்டியே மனிதனின் வாழ்க்கையைக் கணிக்கும் நம்பிக்கை முறை நம் தமிழ் மக்களிடம் இருந்துள்ளதை அறிய முடிகின்றது.

**திரிகைக்கல் வழிபாடு**

வரகு திரிக்கும் பொழுது பெண்கள் ஒன்று கூடி ஒரு குழுவாக வழிபடுகின்றனர். வரகு திரிப்பதற்கு ஒருவர் திரிக்க, ஒருவர் பொட்டை பெடைக்க, ஒருவர் கொழிக்க, ஒருவர் மறுதிரிப்பு திரிக்க, ஒருவர் வரகு அள்ள என்று ஐந்து பேர் தேவைப்படுகின்றனர். இவர்கள் வரகு திரிக்கும் முன் திருகையின் மேல் கல்லுக்கும், கீழ்க் கல்லுக்கும், கரம்பைமண் குழைத்து, சாக்குத் துணிவைத்து பற்று போடுகின்றனர். பின்பு காய வைத்து திரிகையை ஒன்றின் மேல் ஒன்று வைத்து திரிகைக்குள் வரகைப் போட்டு வழிபாடு செய்கின்றனர். இவர்கள் அனைவரும் திரிகைக் கல்லைத் தொட்டு வணங்குகின்றனர். பின்பு வரகு திரிக்க ஆரம்பிக்கின்றனர்.

**திருகையில் வரகு போட்டு**
**திரிக்க வேண்டும் மாமன் பெண்ணே**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**திருகை திரிக்கும் முன்னே**

**திட்டம் மிட்டு தேங்காய் உடை**

**தேங்காய் உடைச்சு வச்சு,**

**திருநீரை அள்ளி வச்சு**

**தொட்டுக் கும்புடுறேன்**

**குணமுடனே வாரும் பெண்ணே**

என்ற நாட்டுப்புறப் பாடல் வழி திரிகை வழிபாட்டை அறியலாம்.

**நடுகல் வழிபாடு**

நடுகல் என்றால் 'நடப்பட்ட கல்' எனப் பொருள்படும். இறந்தவர்களுக்காக நடப்பட்ட கல்லை நடுகல் என்று கூறுவர். "சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல்லே நடுகல் ஆகும்." (காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 248) இதனை அகநானூறு, "நட்ட போலும் நாடாஅ நெடுங்கல்" (அகநானூறு) எனக் குறித்துள்ளது. போரில் வீரம் காட்டி வீழ்ந்துள்ள வீரர் பெயரையும், போர் புரிந்த அவ்வீரனது பெருமையையும் ஒரு பெருங்கல்லில் எழுதி அதில் அவர்களின் உருவையும் செதுக்கி மாலை, பீலி முதலியன புனைந்து வழிபடுதல் நடுகல் வழிபாடாகும்.

போர்க்களத்தில் வீரமரணம் அடைந்த மறவனுக்குக் கல் நட்டு வழிபாடு செய்யும் மரபு தொல்காப்பியத்தில் காட்டப்படுகிறது.

**காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்**

**சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று**

**இரு மூன்று மரபின் கல்லெரு புணர (தொல், நூ. 1010)**

என்ற நூற்பா நடுகல் மரபு பற்றிய செய்திகளைத் தருகின்றன. இங்கு காட்சி என்பது உருவம் பொறித்தற்கேற்ற கல்லைத் தேர்ந்தெடுத்தல், கால்கோள் என்பது அக்கல்லை நடுவதற்கான தொடக்கவிழாவை மேற்கொள்ளுதல், நீர்ப்படை என்பது அக்கல்லை தூய்மைப்படுத்துதல், சீர்த்தகு மரபின் பெரும்படை என்பது கோயில் எடுத்தல், வாழ்த்துதல் என்பது எல்லோரும் கூடி அந்தக் கல்லில் இறந்த வீரனுடைய ஆவி குடிகொண்டிருப்பதாக எண்ணி வாழ்த்தி வணங்குதல் என்பதாகும்.

நடுகல் பற்றிய செய்தியை புறநானூறு,

**ஒன்னாத தெவ்வர் முன் நின்று விலங்கி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**ஒளிறு ஏற்றது மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தென**

**கல்லே பரவின் அல்லது**

**நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே (புறநானூறு, 335: 9-12)**

என்று தெரிவிக்கின்றது. போர் புரிந்த வீரனுக்கு மட்டும் நடுகல் எடுத்து வழிபடுதல் வழக்கமாக பழந்தமிழரிடம் இருந்துள்ள நிலையை அறிய முடிகின்றது. இம்முறையை ஒட்டியே பத்தினிக்குக் கல் நடும் வழக்கமும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் வரும் காட்சிக் கதை, கால்கோட் காதை, நீர்ப்படைக் காதை, நடுகற்காதை, வாழ்த்துக்காதை ஆகிய வஞ்சிக்காண்டக் காதைகள் பத்தினிக் கடவுளான கண்ணகிக்கு நடுகல் எடுப்பித்த வரலாற்றைத் தெளிவாகக் கூறுகின்றன. கண்ணகி வீரபத்தினியாதலால், போர் வீரனுக்கு ஏற்பட்ட முறைகளின் படியே அவருக்கும் நடுகல் எடுப்பிக்கப்பட்டது.

போர்க்களத்தில் தங்கள் வீரம் காட்டி வீழ்ந்த வீரர்கள், ஆநிரையைக் காத்து உயிர் நீத்த வீரர்கள், வடக்கிருந்து உயிர்நீத்த வீரர்கள், சான்றோர்கள், பத்தினிப் பெண்டிர், உடன்கட்டை ஏறிய பெண்டிர், யானை, புலி, சிங்கம், பன்றி முதலியவற்றிடம் வீரம் காட்டி இறந்துபட்ட வீரர்கள் ஆகியோருக்குப் பண்டைத் தமிழர்கள் நடுகல் எடுப்பித்து வணங்கினர். வீரக்கல் நடும் வழக்கம் தொல்காப்பிய காலத்திற்கு முன்பே நிலவியிருந்தது. நடுகற்களுக்கு மலர் மாலை அணிவித்து மயிற்பீலிகளால் அணிசெய்து வழிபட்டதை இலக்கியங்களிலிருந்து அறிய முடிகின்றது. எனவே, வீரத்தின் அடையாளத்தைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நடுகல், காலப்போக்கில் நடுகல் வழிபாடாக மாற்றம் பெற்றது. இந்த நடுகல் வழிபாடே படிப்படியாக வளர்ச்சி அடைந்து நாட்டுப்புறத் தெய்வங்களாகவும், பின்பு நாட்டுப்புற மக்களால் முன்னோர் வழிபாடு, சமாதி தெய்வம், குலதெய்வம், ஊர்த்தெய்வம் என்று பல பெயர்களிலும் வணங்கப்பெற்றன.

இன்றளவும் மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்தில், ம.போத்தநதி, ம.புதுப்பட்டி. ம.புளியங்குளம், சடையக்கவுண்டன்பட்டி, அலப்பலச்சேரி போன்றவற்றிலும் விருதுநகர் மாவட்டம், மெட்டுக்குண்டு, மலைப்பட்டி, வக்கனக்குண்டு, கோட்டூர், இருக்கன்குடி போன்ற ஊர்களிலும் உள்ள தமிழ் பிராமணர்(சைவம்), நாயக்கர், கம்பளத்துநாயக்கர், கன்னடக் கவுண்டர், கன்னடச் சக்கிலியர், தெலுங்குச் சக்கிலியர் ஆகிய இனமக்கள் தங்கள் குலத்தில்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இறந்தவர்களுக்கு நடுகல் நட்டு வழிபடும் பழக்கம் கொண்டுள்ளனர். அதேபோல் வேறு சாதியில் கர்ப்பம் தரித்து இறந்த பெண்களை ஊர் எல்லையில் சுமை தாங்கிக் கல் நட்டு வழிபடுவது வழக்கமாக இருந்து வருகின்றது. நாட்டுப்புறத்து மக்கள் இம்முறையை வழிவழியாகப் பின்பற்றி வருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

**சீலைக்காரி**

சீலைக்காரி தெய்வம் சக்கிலியர் இனமக்களால் வணங்கப்படுகின்ற தெய்வம். சீலைக்காரி என்ற சக்கிலிய இனப்பெண் நாயக்கர் இனத்தைச் சேர்ந்த வயதானவருடன் நட்பாக இருந்ததையறிந்த ஊர் மக்கள் இட்டுக்கட்டி பேச ஆரம்பித்து விட்டனர். இதை அவமானமாகக் கண்ட சீலைக்காரி, புளியங்குளம் ஜமீன் வீட்டில் நெருப்பு வாங்கி அக்கினியில் மாண்டுவிடுகின்றாள். இதை அறிந்த நாயக்கர் இனத்தைச் சேர்ந்த வயதானவரும் அதே அக்கினியில் மாண்டு விடுகின்றார். இருவரின் நினைவாகக் கல் வழிபாடு நடைபெறுகின்றது. மஞ்சனத்தி மரத்தடியில் விளக்குக் கல் மட்டும் வைத்து கரும்பால் பந்தலிட்டு பனியாரம் சுட்டு பெங்கல் படையலிட்டு வழிபாடு நடைபெறுகின்றது.

**பொம்மியம்மன்**

பொம்மி கம்பலத்து நாயக்கர் இனத்தைச் சேர்ந்த பெண். இவளுக்கு ஏழு குழந்தைகளாம். கணவன் இறந்து விடுகிறான். இதனால் பொம்மி வெள்ளைச்சீலை அணிந்து கைம்பெண்ணாக வாழுகின்றாள். காலங்கள் கழிக்க திடீர் என்று அந்த ஏழு குழந்தைகளுக்கும் காய்ச்சல் வந்து இறந்து விடுகின்றனர். பொம்மியும் துக்கம் தாளாமல் குழந்தையுடனே உடன்கட்டை ஏரி தன் உயிரை மாய்த்துக் கொள்கிறாள். பொம்மியின் நினைவாக வைக்கப்பட்டக் கல், நாளடைவில் சிலையாக மாற, கல் வழிபாடு நடைபெற்று இருகின்றது. குழந்தைகளுக்கு உடல்நிலை சரியில்லை என்றால் இந்த பெம்மியம்மனுக்குப் பொங்கலிட்டு வழிபட்டால் உடல்நிலை சரியாகிவிடும் என்றும் நம்புகின்றனர்.

**அக்னிகொண்டம்மாள்**

ஜமீன் ஆளுகைக்குட்பட்ட கட்ராம்பட்டி எட்டு ஊர்களில் தலைமைக் கிராமம் ஆகும். இந்த ஊரில் உள்ள அனைத்து மக்களும் ஜமீன் முன்னிலையில் திருமணம் புரிந்து கொள்வது வழக்கம். ஒருமுறை பதினொரு திருமண வீட்டார்கள் ஜமீன் முன்னிலையில் திருமணத்தின் பொருட்டு கூடினர். அங்கு திருமணம் நிச்சயக்கப்பெற்ற

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பதினொரு பெண்களில் கொண்டம்மாள் என்ற பெண்ணின் அழகினைக் கண்டு அப்பெண்ணை ஜமீந்தார் திருமணம் செய்து கொள்வதாகக் கட்டளையிட்டுள்ளார். கொண்டம்மாள் இதையறிந்து பயந்து அன்று இரவே ஊரை விட்டு போய்விடுவோம் என்று முயற்சிக்க அது ஜமீனுக்குத் தெரிந்து விடவே ஜமீன் கொண்டம்மாளையும் குடும்பத்தையும் தீயிட்டு அழித்து விடுகின்றார். இதில் கொண்டம்மாளின் சேலை அணிகள் மட்டும் அழியாமல் இருந்துள்ளது. அதனைக்கண்ட ஜமீனும், ஊர் மக்களும் வியந்து கொண்டம்மாளின் நினைவாக நடுகல் எழுப்பி வழிபாடு மேற்கொண்டுள்ளனர் என்பது களஆய்வு வழி அறிந்த செய்தியாகும்.

**சின்னக்கம்மாள்**

குருவாரெட்டியார் என்பவர் அப்பக்கரையில் வாழ்ந்து வந்தார். அவருக்கு ஒரு மகள் சின்னக்கா. தாயை இழந்தவள். தந்தையின் பாதுகாப்பில் வளர்ந்து வந்தாள். குருவாரெட்டியார் நாயுடன் தன்காட்டில் காவளுக்கு போவது வழக்கம். ஒரு நாள் வரகு சூடு அடிப்பதற்காக கையில் விளக்கு எடுத்துச் சென்று, வரகுபடப்பு பக்கத்தில் விளக்கை வைத்து விட்டு கட்டிலில் அசந்து தூங்கி விட்டார். விளக்கில் இருந்த தீ படப்பில் பட்டு தீபிடித்தது. படப்பு சரிந்து அவர் மேல் விழுந்து எரிந்தது. அவர் வளர்த்த நாய் எவ்வளவு முயற்சி செய்தும் தீயின் பக்கத்தில் போக முடியவில்லை. நாய் ஓடிப்போய் சின்னக்காவை எழுப்பி பாவடையைப் பிடித்து இழுத்து காட்டுக்கு அழைத்து வந்துள்ளது. தந்தை இறந்தது அறிந்த சின்னக்கா அந்த நெருப்பில் விழுந்துவிட்டால் நாயும் நெருப்பில் விழுந்து இறந்து விடுகின்றது. இவர்களின் நினைவாக நடுகல் எழுப்பி வழிபாடு மேற்கொண்டுள்ளனர் என்பதும் களஆய்வு வழி அறிந்த செய்தி. நடுகல்லை நட்டு இன்றும் வழிபடுவது “தேவதை வணக்கங்களுக்கு அடிப்படைக் காரணங்கள் அச்சமும் அன்புமாகும் தம்மோடு வாழ்ந்து மறைந்தவர்களின் வணக்கங்களும் இவ்வாறு தேவதை வணக்கங்களாகி இருக்கின்றன” என்று சு.சண்முகசுந்தரம் கூறுவதும் புலனாகின்றது.

**திம்மக்கம்மாள்**

திம்மக்கம்மாளும் மூர்த்தியம்மாவும் நல்ல தோழிகள். திம்மக்கம்மா ரெட்டியார் வீட்டுப்பெண், மூர்த்தியம்மா பட்டு நூல் செட்டியார் வீட்டுப்பெண், திம்மக்கம்மாள் நாகம் தீண்டி இறந்து விடுகிறாள். தோழியின் இறப்பைத் தாங்க முடியாத

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

மூர்த்தியம்மா தோழியுடன் உடன்கட்டை ஏரி விடுகின்றாள். இதை அறிந்த அந்த மக்கள் இவர்களின் நினைவாக ஆசான கல் நட்டு வழிபாடு மேற்கொண்டுள்ளனர்.

**கல்பெறக்கியம்மாள்**

வெயில்யுகந்தாபுரம் என்ற ஊரில் பொம்மி வசதியாக வாழ்ந்து வந்தாள். அந்த ஊரில் வெள்ளப்பெருக்கு ஏற்பட வீடுகள் அனைத்தும் இடிந்து, ஊர் அழிந்து விட்டது. அனைத்து மக்களும் வேற ஊர்களில் குடிபுந்தனர். பொம்மி மட்டும் அந்த ஊரை விட்டு பிரிய மனம் இல்லாமல் கல்லைப் பெறக்கி அடிக்கி வைத்து வாழ்ந்து வந்தாள் ஒரு சமயம் கல்லும் கல்லும் உரசி தீ பிடித்து இறந்து விடுகின்றாள். இவளின் நினைவாக நடுகள் நட்டு சிறு குன்று போன்ற வடிவில் கற்கள் குவித்து வழிபாடு நடைபெறுகின்றது.

**முடிவுரை**

திருமங்கலம் வட்டாரத்தில் கல் வழிபாடு மனத்தின் தன்மையில் நடைபெறுகின்றது என்பதை அறியமுடிகின்றது. இங்கு அம்மிக்கல், குத்துரல், திருகைக்கல் போன்றவை பெண்களின் முக்கிய பயன்பாட்டு பொருள்களில் ஒன்றாக இருப்பதையும் அதை நம்பிக்கையின் அடிப்படையில் வழிபடுவதையும் காணமுடிகின்றது. தோழியின் நட்பின் காரணமாக உடன்கட்டை ஏறும் நட்பு புனிதத்திலும், சாதியம் மீரிய ஆண்பெண் நட்பு புனிதத்திலும் நடுகல் வழிபாட்டைக் காணமுடிகின்றது. ஊரே அழிந்து போனாலும் ஊரை விட்டு போகமாட்டேன் என்ற ஊரின் மேல் கொண்ட அன்பின் காரணமாகவும் நடுகல் வழிபாடு மேற்கொண்டுள்ளனர் என்பதும் புலனாகின்றது. திருமங்கலம் வட்டார கல் வழிபாடும் தீயில் மாண்ட நடுகல் வழிபாட்டு முறைகளும் மனத்தின் தன்மையில் அச்சத்தாலும், அன்பாலும், நம்பிக்கையாலும் நடைபெற்றிருக்கின்றது என்பதை இவ்ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

**தகவலாளர் பெயர்**

1.கு.பாப்பம்மாள்,வயது-80, ம.போத்தநதி, 2.நி.குருசாமி,வயது-84, புளியங்குளம். 3.முனிஸ்வரி, வயது-42, அலங்காரபுரம், 4.வெ.பெருமாள்,வயது-60, அலப்பலச்சேரி.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

5.ம.கருப்பையா, வயது-55, போத்தநதி, 6.கோ.சீனியம்மாள்,வயது-65, போத்தநதி.
7. ச.மாரி, வயது-75, வலையங்குளம், 8.ப.அழகு, வயது-60, நாகையாபுரம்.
9.ரா.ஜேசுலா, வயது-65, நாகையாபுரம், 10. ப.லட்சுமி, வயது-85, போத்தநதி.
11. ர.கோபி, வயது-65, நாகையாபுரம், 12.சே.அம்பலத்தடியன், வயது-70, குராயூர்.
13.சு.சுந்தரராஜ், வயது-58, சோளம்பட்டி, 14.சண்முகநாதன், வயது-76, சோளம்பட்டி.
15.நா.கிருஷ்ணன், வயது-60, போத்தநதி, 16. சு.மோகன், வயது-50, திருமங்கலம்.
17.கு.அழகுராஜ், வயது-65, குராயூர், 18.ப.வீரச்சாமி, வயது-67, சௌடார்பட்டி.
19.கி.அழகம்மாள், வயது-75, மேலப்பட்டி, 20. வே.அழகர், வயது-55, நாகையாபுரம்.
21.அ.பரமசிவம், வயது-67, நாகையாபுரம், 22.வே.பார்வதி, வயது-75, நாகையாபுரம்.
23.சு.தேவி, வயது-53, சோளம்பட்டி, 24.ச.அழகர், வயது-26, குராயூர்.
25.கி.கமலம், வயது-89, சோளம்பட்டி, 26.க.அலமேலு, வயது-80, போத்தநதி.
27.க.லட்சம்மாள், வயது-80, போத்தநதி, 28.நா.சுப்புலட்மி, வயது-75, போத்தநதி
29.ப.முத்துச்சாமி, வயது-59, போத்தநதி, 30.சு.நாகலட்சுமி, வயது-60, போத்தநதி.
31.வே.சிவகாமி, வயது-62, சௌடார்பட்டி, 32.போ.இரத்தினம், வயது-60, போத்தநதி.
33.கி.ருக்குமணி, வயது-80, போத்தநதி, 34.சி.செல்வம், வயது-50, போத்தநதி.
35.கு.ஜெயராம், வயது-58, திருமங்கலம்.

**துணைநூற் பட்டியல்**

[1] காந்தி. *தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்*, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981.

[2] செயபால், இரா. *அகநானூறு*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி.லிட்., சென்னை, 2011.

[3] அடிகளாசிரியர், (ப.ஆ.). *தொல்காப்பியம் (பொருளதிகாரம்) செய்யுளியல்*, தமிழ்ப் பல்கலைக்கழகம் மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர், 1985.

[4] பாலசுப்பிரமணியன்,கு.வெ. (உ.ஆ.), *புறநானூறு*, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பி.லிட்., சென்னை, 2014.

[5] சண்முகசுந்தரம்.சு. *நாட்டுப்புற இயல்*, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1989.

[6] இராமசாமி,துளசி. *நெல்லைமாவட்ட நாட்டுப்புற தெய்வங்கள்*, உலகத்தமிழராய்ச்சி, நிறுவனம், சென்னை, 1985.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**References**

[1] Gandhi. *Tamilar palagavalagangalum nambikkaigalum*, Ulaga Tamil Araichi Niruvananm, Chennai, 1981.
[2] Seyapal, Ra. *Agananooru*, New Century Book House B.Lit., Chennai, 2011.
[3] The Author, (P.A.). *Tholkappiyam (porulathigaram) Cheyulial*, Tamil University, Thanjavur, 1985.
[4] Balasubramanian, K.V. (E.A.), *Purananooru*, New Century Book House B.Lit., Chennai, 2014.
[5] Shanmugasundaram.S. *Folk Nature*, Manivasagar Pathipagam, Chennai, 1989.
[6] Ramasamy, Tulsi. *Folk Deities of Nellai District*, Ulaga Tamil Araichi Niruvananm, Chennai, 1985.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# சீறாப்புராணத்தில் காப்பியத் தலைவனின் மீவியற் கூறுகள்

## The Epic Leader's Metaphysical Elements in *Sirapuranam*

**ப.நிர்மலாதேவி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அன்னை பாத்திமா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, திருமங்கலம், மதுரை.
**P.Nirmaladevi,** Assistant Professor, Department of Tamil, Annai Fathima College of Arts and Science, Thirumangalam, Madurai.
ORCiD: https://orcid.org/0000-0002-4740-1218
**DOI: 10.5281/zenodo.5101487**

### Abstract

*Epics in Tamil are said to have originated from the literary mastery of the post-colonial and modern writers. The genre of epics in Tamil refers to the stories of legendary lives. Most of the epics that appeared in Tamil are religious epics. Hindu, Jain, Buddhist, Vedic, Christian and Islamic epics have emerged and flourished in Tamil writing. One of the greatest epics is "Sirapuranam"; it is dedicated to the selfless prophet and leader of Islam. The epic shows the protagonist as someone with distinct abilities and one who manifests himself by the forces of Metaphysics. There are a number of contexts in which Prophet Muhammad manifested such powers in the "Sirapuranam". Metaphysics are the ones who have noble and spiritual hearts. They often merge with the almighty to submit to the glory of God. Allah's Prophet has divine grace showered upon him and is lucidly portrayed in the epic work "Sirapuranam". Hence this article traces the metaphysical and supernatural elements in "Sirapuranam".*

**Keywords**: Prophet Muhammad, Metaphysical Elemants, *Sirapuranam.*

### முன்னுரை

தமிழில் காப்பிய இலக்கியங்கள் வடமொழி இலக்கியங்களின் தாக்கத்தால் தோன்றின என்னும் கருத்திற்கு மாறுபட்ட தமிழிலேயே காப்பிய இலக்கியங்கள் தோன்றியதற்கான சான்றுகளை எடுத்துக்காட்டுவர். பொருட்தொடர்நிலைச் செய்யுள் என்னும் தொல்காப்பியத்தின் இலக்கணம் காப்பியத்தையே குறித்தது என்பர். காப்பியங்கள் சமயம் சார்ந்தனவாக தமிழில் இனம் காணப்படுகின்றன. முதற்காப்பியங்களாக அறியப்படுகின்ற சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன இரட்டைக் காப்பியங்களாகக் குறிப்பிடப்படுகின்றன. இவை இரண்டுமே பௌத்தத் தத்துவத்தை வெளிப்படுத்துவதற்கானப் பாத்திரங்களைக் கொண்டவையாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

தலைமைப் பாத்திரம் என்ற வகையில் கோவலன், மணிமேகலை இருவரும் மீவியற் பண்புகளைக் கொண்டவர்களென்று கூறுவதற்கு காப்பியத்தில் பல்வேறு காட்சிகள் காணப்படுகின்றன. காப்பியத் தலைவன் அளப்பரிய ஆற்றல் கொண்டவனாக இருத்ததல் வேண்டும் என்ற எண்ணக் கருவே அதற்கு அடிப்படை என்று கருதுவோரும் உண்டு. அந்த வகையில் மீவியல் பண்புகளை மிகுதியாகக் காப்பியங்கள் சமயம் சார்ந்தனவாக இருத்தல் தற்செயலானதன்று. கடவுளர்கள், அரசர்கள் ஆகியோரே காப்பியத் தலைமைப் பாத்திரமாக இருந்த நிலையில் வணிகக் குடியில் தோன்றிய கோவலன், கண்ணிகி ஆகியோர் தலைமைப் பாத்திரமாக உருவான பின்னணியில் வணிகம் மேலோங்கிய நிலை காணப்பட்டது எனலாம். பௌத்த, சமணர்கள் வைசியர்களாக இருந்தமையை அறிஞர்கள் புலப்படுத்துகின்றனர். எனவே காப்பியத் தலைமை மாந்தர்களின் வகையும் மாறுதலடைந்தது எனலாம். காப்பியத்தில் மீவியற் கூறுகள் இடம்பெறுவது காப்பியக் கூறுகளில் ஒன்றாகக் கொள்ளப்படுகிறது.

சிலப்பதிகாரம், மணிமேகலை மற்றும் அதற்குப்பிறகு தோன்றிய பல்வேறு காப்பியங்களில் இத்தகைய மீவியற் நிகழ்வுகள் கூறப்படுகின்றன. இதில் காப்பியத் தலைவனின் ஆற்றல்மிக்க செயல்பாடு காப்பியத்தின் தன்மைக்கு இன்றியமையாததாகும். எனவேதான் காப்பியத் தலைவனை தண்டியலங்காரம் தன்னேரில்லாதத் தலைவன் என்று விளிக்கிறது. காப்பியத்தின் இத்தகையப் பின்னணியில் 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய சீறாப்புராணத்தில் தலைமைப் பாத்திரமாக இருக்கும் முகம்மது நபியின் வாழ்க்கை வரலாறு கூறப்படுகிறது. அவர் வணிகக் குலத்தைச் சார்ந்தவர் எனக் கூறப்படுகிறார். அவரது சிற்றப்பாவோடு வணிகத்தில் ஈடுபட்டார். கதீஜா அம்மையாரைத் திருமணம் செய்த பின்பு அவரது செயல்பாடுகளில் மாற்றங்கள் ஏற்பட்டன. அவரது இயல்பான வாழ்வு மாற்றம்பெற்றது. அவருக்குள் ஜிப்ரயீல் தோன்றிய வஹி இரக்கப்பட்டது. அவரை இறுகக் கட்டியணைத்து அவரை கேட்கப் பண்ணினார் என்று கூறப்படுகிறது. வணிகராக இருந்த தலைமைப் பாத்திரமானது பின்பு வியத்தகு ஆற்றல்களுடன் படைக்கப்படுகிறது. ஒரு காப்பியத்தில் காப்பியத்தலைவனின் மீவியற் ஆற்றல்கள் இன்றியமையாததாகக் காணப்படுகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கடவுளின் தூதுவர் என்ற அடிப்படையில் அவரது செயல்பாடுகள் மக்களைத் துயரங்களிலிருந்து காப்பாற்றுவதாக அமைகிறது. இக்கட்டுரை சீறாப்புராணத்தில் தலைமைப் பாத்திரமான முகம்மது நபியின் மீவியற் செயல்பாடுகள் குறித்து எடுத்துரைக்கப்படுகிறது.

**காப்பியத் தலைவன்**

காப்பியங்கள் ஒரு முழுமையான கதையை எடுத்துரைக்கும் தொடர்நிலைச் செய்யுள் வகைமையைச் சார்ந்தது. இனக்குழு வாழ்வு நிறைவுற்று உடைமைச் சமூக நிலையில் அரசவைகளில் மிகுதியான நேரம் கிடைத்ததால் காப்பிய இலக்கியங்கள் தோன்றின எனக் கூறுவதுண்டு.

> **உடலுழைப்பின்றிப் போதிய ஓய்வு நேரமிக்க மக்களைக் கொண்ட வர்க்கத்தினர் ஆர அமர இருந்து கேட்டின்புறத்தக்க இலக்கிய வடிவமே காவியம் என்றால் அது தவறாகாது (க.கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், ப.24)**

என்ற கூற்று இதனை வெளிப்படுத்துகிறது. இது போல் காப்பியத் தலைவன் சாதாரண மனிதர்களைப் போல் அன்றி ஆற்றல் மிக்கவனாக இருத்தல் வேண்டும் என்பதை தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது.

> **தன்னிகர் இல்லாத் தலைவனை யுடைத்தாய்... (தண்டி.பொதுவணி.8) இதற்குப் பொருளுரைக்கும் ஆசிரியர் "காப்பியத்தின் தலைவன் எல்லையற்ற ஆற்றல் உடையவனாகி ஏனைய மாந்தர்க்கும் முற்படு பெருந்தலைவனாய் இருந்தால் அன்றிப் பாராட்டத்தக்கதாக அமையாது. அருஞ்செயலைப் புரியும் ஆற்றல் மிக்கோனால் உலகம் செம்மைப்படுதல் வேண்டும்" (வ.த.இராம.சுப்பிரமணியம் (உ.ஆ), தண்டியலங்காரம், ப.29)**

என்கிறார். ஆற்றல் மிக்கனவாக இருத்தல் என்பது அருஞ்செயல் புரியத் தக்க வகையில் இருத்தல் என்கிறார். எனவே காப்பியத் தலைவன் எப்போது பிற மனிதர்களின் இயல்பான செயல்பாடுகளிலிருந்து வேறுபட்டவனாகவும், ஆற்றல் மிக்கவனாகவும் இருத்தல் வேண்டும் என விதிக்கிறது. சீறாப்புராணத்தில் முகம்மது நபிகளின் செயல்பாடுகள் சில அவ்வாறு அமைவதைக் காணலாம். அவருக்கு எதிராக எதிரிகள் பல்வேறு இடர்களைச் செய்தாலும் அவற்றிலிருந்து தன்னையும் தன் மக்களையும் காப்பாற்றும் வல்லமையுடையவராக இருந்தார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**உமறுவின் கூற்றுக்கள் நபியின் இறைத்தூதர் என்ற நிலையை நன்கு வெளிப்படுத்துவனவாக உள்ளன. ஆமீனா வயிற்றில் கருக்கொண்ட நிலையிலிருந்து திருமணம் முடியும் வரை நபி இறைத்தூதரே என்பதை விளக்கும் கனவுகளும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகளும் முழுக்க முழுக்க இடம்பெற்றுள்ளன. (து.சீனிச்சாமி, தமிழில் காப்பியக்கொள்கை இரண்டாம் பகுதி, ப.288)**

என்ற கூற்று நபிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் அவரது பிறப்பு முதலே அவரது இணையற்ற செயல்பாடுகளை வெளிப்படுத்தும் பல்வேறு நிகழ்வுகளைக் கொண்டதாக அமைவதை எடுத்துக் காட்டுகிறது.

**சீறாப்புராணம்**

உமறுப்புலவரால் 17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இந்நூல் மூன்று காண்டங்களைக் கொண்டதாகும். முழுமைப்படுத்தப்படாத இந்நூலை சின்னசீறா என்று இறுதியை எழுதி முடித்தார் என மரைக்காயர் கூறப்படுகிறது. உமறுப்புலவர் கம்பராமாயணத்தில் தோய்ந்தவர் என்பதை சீறாப்புராணத்தின் பாடல்களில் உணர முடியும். இக்காப்பியமானது மொத்தம் மூன்று காண்டங்களையும், 92 படலங்களையும், 5027 பாடல்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**மீவியல் நிகழ்ச்சி**

உலகிறந்த, இயற்கை இகந்த நிகழ்வுகளையே மீவியல் நிகழ்ச்சி என்று குறிப்பிடுவர். மனிதர்க்கு அப்பாலான சக்திகள் என இதற்குப்பொருள் கொள்வதுண்டு. **“மனித சக்திக்கு அப்பாற்பட்டு நிகழும் விந்தைகள் தெய்வீக ஆற்றலை மக்களுக்கு உணர்த்தக் கூடியனவாக இருப்பது தொல்வபழங்காலந்தொட்டு இருந்துவரும் ஒரு நம்பிக்கை மரபாகும்” (து.சீனிச்சாமி, தமிழில் காப்பியக்கொள்கை முதற்பகுதி, ப.162)** என்று இயற்கை இகந்த நிகழ்ச்சி குறித்து கூறுகிறார் சீனிச்சாமி. காப்பியத்தில் அதன் தேவை குறித்தும் கூறப்படுகிறது. **“அற்புத நிகழ்ச்சிகளும், இயற்கை இகந்த நிகழ்ச்சிகளும் பெரும்பாலான காப்பியங்களில் விவரிக்கப்பெறுகின்றன. நம்பத் தகாததும் ஒப்புவமை இல்லாததுமான வியத்தகு அற்புத நிகழ்ச்சிகளையும் காப்பியம் கொண்டிருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் அது வாசகருக்கு வியப்பினை ஊட்டி இன்பம் அளிக்கும்” (இரா.காசிராசன், உலகக் காப்பியங்கள், ப.19)** என்ற கூற்று காப்பியத்தில் இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் இடம்பெறுவதன் தேவையை சுட்டுகின்றன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**முகம்மது நபிகளின் மீவியல் ஆற்றல்கள்**

சீறாப்புராணத்தில் உமறுப்புலவர் நபிகள் நாயகத்தின் பிறப்பிலிருந்தே மீவியல் நிகழ்வுகள் நிகழத் தொடங்கி விட்டதை கூறுவதாக பாடல்கள் அமைத்துள்ளார். நபிகள் நாயகம் ஜிப்ரயீல் என்னும் வானவரால் ஆட்கொள்ளப்பட்ட பின்னர்தான் வியத்தகு ஆற்றல்களை வெளிப்படுத்தத் தொடங்குகிறார். பெருமானார் வெளிப்படுத்திய இறையாற்றல்களை அவரது நபிப் பட்டத்திற்கு முன், பின் என வகைப்படுத்துவது வழக்கமாகும்.

**“பெருமானார் காட்டிய இயற்கை கடந்த நிகழ்ச்சிகளை நபி பட்டத்திற்கு முன் – பின் என இருவகைப்படுத்துவர். முன்-விலாயத் என்றும் பின்-முஃஜிஸாத்து என்றும் கூறவர். இரு வகையும் இறை அற்புத ஆற்றல்களே” (எம்.எஸ்.பஷீர், சீறாப்புராணம், ப.25)** என்ற கூற்று இதனை வெளிப்படுத்துகிறது. மூன்று படலங்களிலும் மீவியல் ஆற்றல்கள் வெளிப்படுத்தப்படுகின்றன. வானவர் கோன் ஜிப்ரயீல், மீக்காயீல், ஜின்கள், மலைகளுக்கு அதிபதியான மலக்கு, இபுலீசு என்பன போன்ற மீவியல் பாத்திரங்களும் சீறாப்புராணத்தில் பயின்று வருவதைக் காணலாம். நபிகளின் ஆற்றல்களை வெளிப்படுத்தும் நிகழ்வுகள் இரண்டாம் காண்டமான நுபுவத்துக் காண்டத்தில்தான் பெரிதும் காணப்படுகின்றன. அதில் உடும்பு பேசிய படலம், மதியை அழைத்தப் படலம், தசைக் கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம், ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம், மானுக்குப் பிணை நின்ற படலம், புத்துப் பேசிய படலம் என்பனவும் மூன்றாவது காண்டத்தில் ஓநாய் பேசிய படலம், ஒட்டகை பேசிய படலம் என்பன நபிகளின் ஆற்றல் மீவியல் ஆற்றல்கள் வெளிப்பட்டதை வெளிப்படுத்தும் படலங்களாக உள்ளன.

**உடும்பு பேசியது**

மனிதர்களைத் தவிர பிற உயிரினங்கள் பேச்சாற்றல் அற்றனவாகும். பிற விலங்குகள் பேசினால் அது தெய்வீக ஆற்றல் எனவே குறிக்கப்படும். இஸ்லாமிய மார்க்கம் உருவான பின்னர் வேற்று இனத்தவரான குறைஷியர்களால் இஸ்லாமியர்களுக்குப் பெரிதும் இடர்கள் ஏற்பட்டன. இதனால் மறைந்து வாழும் நிலை ஏற்பட்டது. அவ்வாறு நபிகள் நாயகமும் அவருடன் வேறு பல இஸ்லாமியர்களும் காடுகளில் வாழ்ந்தனர். அப்போது வேடனொருவன் காட்டில் விலங்குகளை வேட்டையாட வந்தான். அப்போது அங்கு தங்கியுள்ள

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இஸ்லாமியர்களைப் பார்த்தான். உடும்பு ஒன்றை வலையில் சிக்க வைத்துப் பிடித்து விட்டான். அவர்களிடம் இவ்விடம் தங்கியிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்க நபிகள் காரணம் கூறினார். அதற்கு நீங்கள் எந்த வேதத்தைச் சேர்ந்தவர்கள் என்று கேட்டான். அதற்கு நபி இவ்வுலகிற்கு கடைசியாக வந்த நபி தான் என்றும் அலீமென்னும் வேதம் தம்முடையதென்றும் அது உயர்வானதென்றும் கூறினார். கலிமாவைக் கூறி இம்மார்க்கத்தை ஏற்றுக் கொள்ள அவனிடம் கூறினார். அவன் மீண்டும் நபிகளைப் பார்த்து தங்களை நபி என்று கூறுவதற்கு சாட்சி வேண்டும் என்று கூறினான். அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று நபிகள் கேட்க. தன்னிடம் உள்ள உடும்பு இன்பமாக பேசினால் அதை நம்புவதாகக் கூறுகிறான்.

**என்றுரை பகர்ந்தவ னிதயங் கூர்தர**
**நன்றென முறுவல்கொண் டினிய நந்நபி**
**குன்றினிற் றிரிதரு முடும்பைக் கூடிய**
**மன்றினில் விடுகவென் றுரைவ ழங்கினார் (சீறா. 1618)**

என்ற பாடலடிகளில் மலையில் திரிகின்ற அந்த உடும்பை கீழே விடுவாயாக என்றார். அவன் அதற்கு கடின முயற்சிக்குப் பின்னர் இக்காட்டினில் இந்த உடும்பை பிடித்துள்ளேன் இதை விடுவது இயலாது என்று கூறினான். நபிகள் இவ்விடத்தில் விட்டால் அந்த உடும்பு எங்கும் செல்லாது என்றார். அவனும் விட்டான்.

**நெடுந்தலை யெடுத்துவா னிமிர்த்து முள்ளெனப்**
**படுந்தரத் துகிர்நிலம் பதிப்ப வூன்றியெள்**
**ளிளிடுந்தரை யகன்றிடா திறைவன் றூதெனத்**
**திடந்தர மனத்தினிற் றெளிந்து நோக்கிற்றே (சீறா. 1621)**

என உடும்பானது தனது நெடிய தலையைத் தூக்கி வாலை நிமிர்த்தி முள்ளைப் போன்ற தனது கால் நகங்களைப் பூமியில் ப தியும் வண்ணம் ஊன்றி நபிகள் நாயகத்தைப் பார்த்தது. நபிகள் அவ்வுடம்பைப் பார்த்து அழைத்தார். அழைப்பைக் கேட்டு உடும்பானது தனது நாவை அசைத்து அவரிடம் பேசிற்று.

**இகம்பர மெனவரு மிருமைக் குண்மையா**
**யுகம்பல வுதிக்குமுன் னுதித்துப் பின்னுதித்**
**தகம்பயி லாரணத் துறைந்து செப்புமுச்**
**சகம்புகழ்ந் திடவருந் தக்க நீதியோய் (சீறா. 1623)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்று உடும்பானது நபிகளை நோக்கி இம்மை, மறுமையென்று சொல்லும் வண்ணம் வாராது நிற்கும் இரண்டிற்கும் உண்மையாக பல யுகங்களும் தோற்றமாகு முன்னர் தோன்றிய நபிமார்களுக்கெல்லாம் பின்னர் இவ்வுலகத்தில் தோன்றி மனமானது பழகாது நிற்கும் வேதங்களில் தங்கிச் செல்லா நிற்கும் வானம், பூமி பாதாளமாகிய மூன்று உலகங்களும் துதித்திடும் வல்லமை உடையவர்களே என்று விளித்துப் பேசியது. மேலும் தங்கள் அடிமையாகிய என்னை அழைத்தமைக்கான காரணங்களைக் கூறுமாறு கேட்டது. நபிகள் நீ யாரை வணங்குகிறாய் என்றார் அதற்கு உடும்பானது,

**மருமலி வள்ளலியான் வணங்கு நாயக**
**னொருவனன் னோனெழி லுயர்சிங் காசனம்**
**பொருவரும் வானில்ரா சாங்கம் பூமியிற்**
**றெரிதருங் கிருபையோ செம்பொ னாட்டினில் (சீறா. 1626)**

என்ற பாடலடியில் கஸ்தூரி வாசனை மிகுதியாக வீசும் வள்ளலே நான் வணங்கும் நாயகன் ஏகன். அவனுடைய அழகிய சிங்காசனமானது ஒப்பற்ற வானலோகத்தில் ராஜாங்கம், பூமியில் தோற்றா நிற்கும் கருணை சிவந்த பொன்னான சொர்க்க லோகத்தில் தீமையும் பகைமையும் அற்ற ஹக்கு சுபுகானகுவத்த ஆலாவைத் துதித்த வருவதாகக் கூறிற்று. இந்நிகழ்வைக் கண்ட வேடன் நபிகளின் கால்களைப் பிடித்துத் அவனது வாயினால் கலிமாவை ஓத வைத்து இஸ்லாமிய மார்க்கத்தில் இணைத்துக் கொண்டார்.

**மதியழைப்பித்தமை**

மக்கா நகரத்து மன்னனான ஹபீபென்வனிடம் அபுஜகீலும் அவனது நண்பர்களும் இங்கு தம் முன்னோர்களது மார்க்கத்திற்கு எதிராக புதிய மார்க்கமொன்றைக் கூறி மக்களை மடைமாற்றி வருவதாக புகார் அளித்தான். ஹபீபென்பவனும் தான் அதற்கு தீர்வு காண்பதாகக் கூறி நபிகளைத் தம் சபைக்கு வர வேண்டுமென க் கூறினான். அபுத் தாலீபென்பவனை அழைத்து நபியை அழைத்து வரக் கூறினான். குதிரையில் சென்றவன் நபிகளைக் கண்டு மன்னனான ஹபீப் தங்களை அழைத்ததாகக் கூறினான். அவரும் அவர்களது சபையில் சென்று நின்றார். அவர் மேல் பலரும் குற்றங்களைக் கூறினார்கள். நபிமார் என்று சொல்வது பொய்யென்றும் கபட வார்த்தைகளைக் கூறி மக்களைத்தம் பக்கம் ஈர்த்து விட்டான்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்று கூறினார்கள். அவரை தான் நபிதானென்று நிரூபிக்கும்படி ஹபீப் என்னும் அரசன் பணித்தான். அமாவாசை இரவில் அபூகுபைசென்னும் மலையில் நின்று கொண்டு சந்திரனை வரவழைக்க வேண்டும் என்று கூறினார். அபூகுபை மலையின் மீது நின்று சந்திரனை வரவழைத்தார் நபிகள் நாயகம். சந்திரன் கடலினின்றும் மேலெழுந்து வந்தது.

**திணிசுடர்ச் சுவனத் தரம்பைய ரமரர்**
**தினந்தொறும் பரவிய நயினா**
**ரணிப் பெறத் திமஸ்குக் கிறைமனங் களிப்ப**
**வவனியில் தீன்பயிர் படரப்**
**பணிநெடும் படத்திற் கிடந்தபா ருடுத்த**
**பரவைவேந் தனுக்குவெண் டரள**
**மணியினி லமைத்த செழுமுடி நிகர்ப்ப**
**வந்தது நிறைந்த வெண்மதியம் (சீறா. 1915)**

என்ற பாடலடிகள் இதனை உணர்த்துகின்றன. திண்ணிய பிரகாசத்தை உடைய சுவர்க்க லோகத்து ரம்பையர்களைப் போனற் கூறுலீன்களும் மலாயிக்கத்துமார்களும் தினந்தோறும் வணங்கும் நயினாராகிய நாயகம் நபிமுகம்மது முஸ்தபா ரசூல் சல்லலாகு அலைகி வசல்லம் அவர்கள் சிறப்பெய்த வேண்டுமாய் திமஸ்கு நகராதிபதியாகிய ஹபீபென்பவனின் மனமானது மகிழவும் இவ்வுலகத்தின்கண் தீனுள் இஸ்லாமென்னும் பயிரானது படரவும் ஆதிசேடனது நெடிய பணாமுடியினிடத்துக் கிடக்கப் பெற்ற பூமியை உடுத்த சமுத்திர ராஜனுக்கு வெண்ணியத்தை உடைய முத்துக்களைப் போன்ற வெள்ளியச் சந்திரன் மேலெழுந்து வந்தது எனக் கூறப்படுகிறது. இதனைக் கண்டு ஹபீப் அரசனும் அவனைச் சார்ந்த மந்திரிகளும் இதைப்போன்ற நிகழ்ச்சி யாராலும் நடத்தவியலாது என்று கூறி நபிகளைத் துதித்தனர்.

**மாதவன் திமஸ்குக் கிறையுரைத் ததவு**
**முகம்மது விளைத்தகா ரணமும்**
**பூதலத் தினிற்கண் டறிகொணாப் பெரிய**
**புதுமையிற் புதுமைகொ லென்னச்**
**சீதவொண் கமல முகமலர் மலர்ந்து**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**தேர்ச்சியிற் றுணைவர்மன னவரும்**
**பேதுற லகற்றிச் சிந்ததையிற் றேறிப்**
**பெரியவன் றூதினைப் புகழ்ந்தார் (சீறா. 1928)**

என்ற பாடல் இதனை கூறுகிறது. மகாத தவத்தையுடைய திமஸ்கு நகராதிபதியாகிய ஹபீபென்பவன் அவ்வாறு கூறியதும் நாயகம் நபி முகம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகி வசல்லம் அவர்கள் செய்த காரணமும் இந்தப் பூலோகத்தினிடத்து நாம் ஒரு காலமும் பார்த்து அறியவியலாத பெரிய வியப்பிலும் வியப்பான ஒன்று என்றனர். தாமரை மலர் போன்ற முகமானது மலர்தலுற்றுத் தங்களின் மயக்கத்தை மாற்றி மனதின்கண் தேர்ச்சியடைந்து பெரியவனான அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவின் தூதுவராகிய நபிநாயகத்தைத் துதித்தார்கள். இவ்வாறு சந்திரனை வரவழைத்துத் தன்னை நபிமார்களில் கடைசி நபி என்று நிரூபித்தார்.

**தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்தல்**

இறைவனாற் பெற்ற ஆற்றலை வெளிப்படுத்தும் இறையடியார்கள் உயிர்ப்பிக்கும் செயலை செய்துள்ளமையை பக்தி இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. இறந்தவரைப் பிழைக்கச் செய்த செயலை இயேசுவும் செய்துள்ளார். இது போலொரு இயற்கைக்கு முரணான செயலை நபிகள் நாயகமும் செய்தார். அதே ஹபீப் என்னும் திஸ்மக் நகரின் அரசர் மதியை வரழைவத்தப் பின்னர் அடுத்த நாள் அவரைத் தன் மகவை பெண்ணுருவாக்கித் தருமாறு வேண்டினார். மாமிசக் கோளமாய் இருந்த புழுவைப்போன்று கிடந்த மாமிசத்தை பெண்ணாக்கும் வியப்பில் ஆழ்த்தும் செயலையும் செய்தார். அவ்வரசன் பெட்டியிலிருந்த தசைக் கட்டியை நபிகளிடம் கொடுத்தார்.

**முன்னுறப் பணித்த பெட்டகத் திருந்த**
**முதிர்தசைக் கட்டியை யெடுத்து**
**மன்னிய குரிசின் முகம்மது நபிமுன்**
**வைத்தனர் சுரிகுழற் கருங்கண்**
**மின்னெனப் பிறழு மடந்தையருடனும்**
**விரிதிரைப் பசுங்க டலனைய**
**வந்நகர் மாக்க ளனைவரும் விரைவி**
**னடுத்ததி சயித்திட வன்றே (சீறா. 1949)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்னும் பாடலடிகளில் இது கூறப்படுகிறது. அந்தப் பெட்டகத்திலிருந்து முதிர்ச்சி தங்கிய தசைக்கட்டியை அவ்வபீபரசன் முறுக்கைப் பெற்ற கூந்தலையும் கருமை தங்கிய கண்களையுமுடைய மின்னலைப் போலும் பிரகாசிக்கும் பெண்களோடும் விரிந்த அலைகளைக் கொண்ட பசிய கடலைப் போன்ற அந்த மக்கா நகரத்தினது ஆடவர்களெல்லாரும் சீக்கிரமாய் நெருங்கி வந்து அதிசயிக்கும் வண்ணம் கைகளினால் எடுத்துக் குரிசிலாகப் பொருத்திய நாயகம் முன்னால் வைத்தார். நபிகள் இறைவனை துதித்து அருமையான ஆபுசமென்னும் கிணற்றினது தண்ணீரை கொண்டு மருந்தோடு தசைக்கட்டியின் மேல் தெளித்து நின்றார்கள்.

**பூதலத் தெவர்க்கு மறைநெறி புதுக்கிப்**
**பொருவருஞ் சுவனநா டளிப்பத்**
**தூதென வுதித்த முகம்மதின் துவாவைத்**
**துய்யவ னுறக்கபூ லாக்கப்**
**பாதகக் குபிரர் மனம்பதை பதைப்பப்**
**பலன்படாப் பெருந்தசைத் திரட்சித்**
**தெரிவையின் றிருவுரு வெடுத்த (சீறா. 1953)**

என்னும் பாடலடிகள் தசைக்கட்டி பெண்ணுரு பெற்றதைக் கூறுகின்றன. தூயதான ஆலாவானவன் இந்த பூமியில் உள்ள அனைவருக்கும் புறுக்கானூல் அலீமென்னும் வேதவழியைப் புதுப்பித்து ஒப்பற்ற சுவர்க்க லோகத்தை அருளும் வண்ணம் றசூலாகத் தோன்றிய நபிகள் முகம்மது அவர்கள் துஆவைத் பொருத்தும் விதத்தில் கபூலாக்கப் பாகத்தைக் கொண்ட காபீர்களாகிய சத்துராதிகளின் மனங்களானவை மிகவும் பதைக்கும்படி எந்த பயனும் இல்லாத அந்த தசைக்கட்டியை உறுப்புகள் சிறந்து நிற்கும் பெண்ணாக அழகிய உருவெடுத்து நின்றது. தெரிதரப் பவள விதழ் திறந்தோதி சபையின் கண் ஓதி நின்றாள் எனக் கூறப்படுகிறது. இவ்வாறு பெண்ணுருவாக்கிய நிகழ்வானது ஹபீப் அரசனை இஸ்லாம் மார்க்கத்தில் இணையக் காரணமானது.

நபிகள் இதுபோன்ற வேறு பல மீவியற் செயல்களை ஆற்றியுள்ளார். மான் தன் குட்டிகளுக்குப் பாலூட்டச் செல்ல வேண்டுமென்று கூற அம்மானுக்காக வேடனிடம் பிணை நின்றார். காய்க்காத ஈச்சமரத்தை காய்க்கச் செய்தார். தான் வணங்கி வரும் புற்றுத் தன்னிடம் பேசினால் தான் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்பதாகக் கூற புற்றினை பேச வைக்கிறார். இவ்வாறு தன் வாழ்வில் பல்வேறு வியத்தகு செயல்களைச்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

செய்தவராக நபிகள் நாயகம் இருப்பதை சீறாப்புராணத்தின் வழி அறிய முடிகிறது. வியத்தகு ஆற்றல் என்பது காப்பியத்தலைவனுக்கு இன்றியமையாதது என்பதை காப்பிய இலக்கணங்கள் சுட்டுகின்றன. அதன்படியே சீறாப்புராணம் அமைந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

**முடிவுரை**

மீவியல் ஆற்றல்கள் பல இடம்பெறுவதை காப்பியங்கள் அனுமதிக்கின்றன. தமிழில் தோன்றிய இரட்டைக் காப்பியங்களில் பல்வேறு மீவியல் நிகழ்வுகள் சுட்டப்படுகின்றன. காப்பியத் தலைவன் தன்னேரில்லாத் தலைவனாக இருக்க இம்மீவியல் ஆற்றல்களை வெளிப்படுத்துவதும் தேவையாகக் கருதப்படுகிறது. சீறாப்புராணத்தில் காப்பியத் தலைவனாக முகம்மது நபி கூறப்படுகிறார். அவரது வாழ்வில் நடைபெற்றனவாகக் கூறப்படும் செயல்களில் பலவற்றில் இம்மீவியல் அல்லது இயற்கை கடந்த நிகழ்ச்சிகள் உள்ளன. முகம்மது நம்பியைத் தன்னேரில்லாதத் தலைவனாகச் சுட்டும் இந்நிகழ்வுகள் சல்லல்லாம் அலைக்கும் றசூலை வேண்டிய அவர் நிகழ்த்தியதாகக் கூறப்படுகிறது. உடும்பு பேசியது, சந்திரனை வரவழைத்தது, தசைக்கட்டியை பெண்ணுருவாக்கியது என்பன போன்று பல இயற்கை கடந்த நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. இது போன்ற பல்வேறு நிகழ்ச்சிகள் சீறாப்புராணத்தில் சுட்டப்படுகின்றன. இந்நிகழ்வுகள் யாவும் காப்பியத் தலைவனைத் தன்னேரில்லாத் தலைவனாகக் கருதுவதற்கு உதவுகின்றன. இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொள்ளும் வகையில் பலருக்கும் இது போன்ற வியத்தகு நிகழ்வுகளை செய்தார் எனக் காணமுடிகிறது.

**துணை நூற்பட்டியல்**

[1] உமறுப்புலவர் (மூலவாசிரியர்), செய்குத் தம்பிப் பாவலர் (உ.ஆ), *சீறாப்புராணம் பகுதி -1, 2,* யுனிவர்சல் பப்ளிஷர்ஸ், சென்னை, 2014.

[2] இரா.காசிராசன், *உலகக் காப்பியங்கள்*, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2014.

[3] வ.த.இராம.சுப்பிரமணியம் (உ.ஆ), *தண்டியலங்காரம்,* முல்லை நிலையம், சென்னை, 2008.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

[4] க.கைலாசபதி, *தமிழ் நாவல் இலக்கியம்*, காலச்சுவடு, நாகர்கோவில், 2017.

[5] து.சீனிச்சாமி, *தமிழில் காப்பியக் கொள்கை முதற்பகுதி*, பதிப்புத்துறை, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2015.

[6] து.சீனிச்சாமி, *தமிழில் காப்பியக் கொள்கை இரண்டாம் பகுதி,* பதிப்புத்துறை, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1994

[7] தக்கலை எம்.எஸ்.பஷீர், *சீறாப்புராணம்,* குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, 2005.

## References in English

[1] Umarupulavar (Poet), Seiku Thambi Pavalar (Text Editor), *Sirapuranam Part -1, 2.* Universal Publishers, Chennai, 2014.

[2] R.Kasirajan, *Ulaga Kappiangal*, New Century Book House (P) Ltd), Chennai, 2014.

[3] V.T.Rama.Subramaniyam (Text Editor), *Thandiyalangaram*, Mullai Nilayam, Chennai, 2008.

[4] K.Kailasapathi, *Tamil Naval Ilakkiam*, Kalachuvadu, Nagarkovil, 2017.

[5] T.Seenisamy, *Tamilil Kappia Kolkai Part – 1*, Publication Department, Tamil University, Tanjore, 2015.

[6] T.Seenisamy, *Tamilil Kappia Kolkai Part – 2*, Publication Department, Tamil University, Tanjore, 1994.

[7] Thakkalai M.S.Baseer, *Sirapuranam*, Kumaran Publishers, Chennai. 2005.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# மூன்றாம் திருமுறையில் மூன்று திருத்தலங்கள்

## The Three Temples in the Third Thirumurai

**திருமதி. சே. பிரேமா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பூசாகோ அர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி, கோவை-04
**Mrs. S. Prema,** Assistant Professor, Department of Tamil, PSGR Krishnammal College for Women, Coimbatore-04.
ORCiD: https://orcid.org/0000-0002-3550-2380
**DOI: 10.5281/zenodo.5111284**

## Abstract

*Panniru Thirumurai is composed of 27 Sivanadiyars (the disciples of Shiva). These hymns glorify the Lord and have lots of rituals. They lead people from darkness to the light of wisdom. Thirumuraigal is distinguished by the innate teaching of lord shiva. The first three verses are sung by Thirugnana Sampanthar sung on Lord Shiva and Parvathi and he has sung on Lord with dedicated words due to his immense devotion to Shiva. Sambandar, who has dedicated devotion to lord shiva, has sung a song calling him in various names to exemplify his omniscient and omnipotent nature. In the third Thirumurai, it is sweet to hear the form, grace, fame of the place, setting, character and devotion to Lord Shiva by his disciples that ultimately has arisen in the three revisions of Thiruppuntarai, Thirukkollam Pudur and Thiruppukali. The image of Lord Shiva and the Splendor of the carnival can also be found in this article. The article evinces the rare facts to the glorious historical records.*

**Keywords:** *Panniru Thirumuraigal*, Lord Shiva, Disciples, Thiruppuntarai, Thirukkollam Pudur and Thiruppukali.

**முன்னுரை**

**தென்னாடுடைய சிவனே போற்றி**

**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி**

பன்னிரு திருமுறைகள் சைவ நூல்களில் தனிச்சிறப்புப் பெற்றதாகும். மண்ணுலகத்தவர்கள், வானுலகை ஆள்பவர்கள், பாதாள உலகத்தினர் ஆகியோரது இன்பம் கெடக் கொடிய அசுரர்கள் புரியும் தீமைகளை அழிக்குமாரு, நெடிய திருமாலுக்குச் சக்ராயுதத்தை அளித்த சிவபெருமானின் இன்னருளைப் போற்றிப்பாடியதன் அடிப்படையில் சம்பந்தரால் பாடப்பட்ட **மூன்றாம் திருமுறையில்** 127 திருத்தலங்களின் வரிசையில் **மூன்று** திருத்தலங்களில் பாடப்பட்ட பாடல்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com


மட்டும் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டு அப்பாடலில் பொதிந்துள்ள சிவபெருமானின் திருவுருவம், அடியவர்களின் துயரம் நீக்கும் பொருட்டு சிவபெருமான் எடுத்த அவதாரம் முதலாக திருத்தலத்தின் அமைவுகள், ஆறு, வளங்கள், போற்றி வணங்கியவர்கள், வீடுபேறு வரையான செய்திகளும் பிற நூலகளில் இத்திருத்தலங்கள் சார்ந்த செய்திகள் எடித்துக்காட்டியும் இவ்வாய்வு ஆராயப்படுகின்றன.

**திருமுறை**

திரு என்பது மேன்மை மிக்க எனப் பொருள்படும். முறை என்பது நெறியான வாழ்வு என்றும் பொருள்படும். ஆகவே திருமுறை என்பதற்கு தெய்வீக நூல் என்பது பொருளாகும். இத்திருமுறைகள் மொத்தம் இருபத்தேழு சிவனடியார்களால் சிவபெருமானின் மீது பாடப்பெற்றவை ஆகும். பக்தர்களை அஞ்ஞானம் என்ற "இருளிலிருந்து ஞானம் என்கிற வெளிச்சத்திற்குக் கொண்டு வருபவை இப்பதிகங்கள்" ஆகும் (பன்னிரு திருமுறைகள் 23). குறுகிய காலமே வாழ்ந்து இறைவனைச் சேர்ந்த திருஞானசம்பந்தரால் எவ்வாறு இப்பதிகங்களின் வாயிலாக சிவபெருமானின் இன்னருளைப் பாடமுடிந்திருக்கும் என்பது வியக்கத்தக்கதாகும். "இவர் 22 பண்களில் 385 பதிகங்களும், 4169 பாடல்களில் 220 திருத்தலங்களையும் நேரடியாக அடைந்து இறைவனை தரிசித்துப் பாடியுள்ளார்." (மூன்றாம் திருமுறை 16). பன்னிரு திருமுறையில் முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்றவை. அத்திருமுறைகளில் மூன்றாம் திருமுறையும், அவற்றில் பாடப்பெற்ற திருத்தலங்களில் மூன்று தலங்களைப் பற்றியும், அதனுள் சம்பந்தர் எடுத்துக்காட்டிய செய்திகளும் இக்கட்டுரையில் தனியிடம் பெறுகின்றன.

**சம்பந்தர் சிவபெருமானை அழைக்கும் பெயர்கள்**

திருஞானசம்பந்தர் இத்தலங்களில் பாடல் பாடுகையில் சிவபெருமானைத் தனது அதீத பக்தியின் காரணமாக விகிரதன், பிஞ்ஞகன், நம்பன் மற்றும் நிமலன் என அழைத்துப் பாடல் பாடியுள்ளார். **(மூன்றாம் திருமுறை - 2846, 2850, 2860 ப - 107, 115)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**ஆய்விற்கு எடுத்துக்கொண்ட மூன்று திருத்தலங்கள் முறையே,**

1) **திருப்பூந்தராய் (2845 – 2855)**
2) **திருக்கொள்ளம்புதூர் (2856 – 2866)**
3) **திருப்புகலி (2867 – 2877) ஆகும்.**

### 1) திருப்பூந்தராய்

திருப்பூந்தராய் எனும் இத்திருத்தலம் தமிழ்நாட்டில் மயிலாடுதுறை மாவட்டத்திலுள்ள சீர்காழி எனும் வட்டத்தில் அமைந்த ஓர் ஊராகும். நகர அமைப்பினைச் சுற்றிலும் வடக்கே கொள்ளிடமும் (ஆறு), கிளை நதியான கழுமலை ஆறு ஊரின் நடுவிலும், தெற்கே உப்பனாறு எனும் நதிகளும் ஓடுவதால் வளம் கொண்ட இடமாக அமையப் பெற்றுள்ளது.

**மூலநாதர்**

சிவபெருமான் இத்திருத்தலத்தில் மூலநாதராக சட்டைநாதர் எனும் பெயரில் அழைக்கப்படுகிறார். தாயார் திருமலை நாயகி என அழைக்கப்படுகிறாள்.

**தலத்தின் வேறு பெயர்களும் அவற்றின் காரணங்களும்**

சிவபெருமானை வராகமூர்த்தி வணங்கியதால் பூந்தராய் எனவும், பிரம்மன் தன் படைக்கும் தொழில் தடையின்றி நடைபெற வழிபட்டதால் பிரம்மபுரம் எனவும், பிரம்மன் வந்து வழிபட்டதால் இத்தல மூலனாதர் பிரம்மபுரீஸ்வரர் என வழங்கப்படுவதாகவும், கழுமலை எனும் சிற்றாறு கலப்பதால் கழுமல வளநாதர் எனவும், பிரளய காலத்தில் சீர்காழி தோணி போல் மிதந்ததால் தோணிபுரம் எனவும், சிபிச் சக்கரவர்த்தி பேறு பெற்றதால் புறவம் என்றும், பத்ரகாளி, காளிங்கன் பாம்பு வேண்டியதால் ஸ்ரீ காளிபுரம் எனவும், வயல்களின் வளமையினைக் கண்டு கண்ணபிரான் போற்றி வணங்கியதால் சண்பை எனவும் அழைக்கப்படுகின்றன.

சண்பை என அழைக்கப்படும் இத்திருத்தலம் இருக்கும் சீர்காழியின் சிறப்பு குறித்தும் நிலத்தின் வளமை குறித்தும் மணிமேகலை காப்பியத்தில் விளக்கம் காணப்படுகின்றன.

**ஈங்கிந் நகரத் தியான்வருங் காரணம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**பாரா வாரம் பல்வளம் பழுநிய**

**காராளர் சண்பை (மணிமேகலை 3: ப 27, 29)**

**காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே**

**மாருத வேகனோ டிந்நகர் (மணிமேகலை 7: ப 102, 109)**

**(ந. மு.வேங்கடசாமி நாட்டார், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை ப - 605)**

எனும் வரிகள் இச்செய்தியினை எடித்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன. மேலும், ராகு பூசித்ததால் சிரபுரம் என்றும், மூங்கில் வடிவமாக சிவன் உருவெடுத்து இந்திரதேவனுக்கு அருள் வழங்கியதால் வேணுபுரம் (வேணு – மூங்கில்) எனவும் சிறப்புடன் இத்திருத்தலம் அழைக்கப்பெறுகின்றன.

இத்தகு சிறப்புகளை அறிந்த சம்பந்தர் இத்திருத்தலத்தின் பெருமைகளும், அங்கு எழுந்தருளியிருக்கும் பெருமானின் சக்தியும் அறிந்தே இச்சிறப்பு நிகழ்வுகள் உரைத்தவாறு தமது பாடல்களில் செய்திகளைப் பதிவு செய்து காட்டியுள்ளார் என்பது மேற்கண்ட செய்திகளின் வழி அறியமுடிகின்றன.

**திருத்தலத்தின் சிறப்புகளும், வரங்களும்**

**தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்**

**மிக்க செம்மை விமலன் வியங்கழல்**

**சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி**

**நன்ற தாகிய நம்பன் தானே! (மூன்றான் திருமுறை - 2845 ப - 105)**

இப்பூவுலகில் உயர்வடைய எண்ணுபவர்கள் இறைவனின் திருவடிகளைப் போற்றுதலே சிறப்பானதாகும். பறவையினங்கள் புகழ்ந்து போற்றும் திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவன் கங்கையினைத் தலையில் தாங்கியவன், சந்திரனை அணிந்த நீண்ட சடையினை உடையவன், எலும்பு மாலைகளைத் தன் திருமேனியில் அணிந்து இத்திருத்தலத்தில் வீற்றிருப்பவன், தமது கால எல்லைகளை நீங்கிய திருமால், பிரம்மன் இவர்களுக்கும் முதன்மையான சிவனின் அநாதி நித்தத் தன்மையையும், யாவருக்கும் முதல்வனாம் தன்மையையும் உணர்த்துவனவாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**பூதம் சூழப் பொலிந்தவன் பூந்தராய்**

**நாதன் சேவடி நாளும் நவீன்றிட**

**நல்கும் நாள்தொறும் இன்பம் நளிர் புனல்**

**பில்கு வார்சடைப் பிஞ்ஞகனே! (மூன்றான் திருமுறை – 2850 ப - 108)**

உள்ளத்தால் மிக நல்ல சிவனடியார்கள் வாழ்கின்ற திருத்தலத்தில் பூத கணங்கள் சூழவும், எண்ணித் தொழும் அடியவர்களுக்கு நாள்தொறும் இன்பம் தருபவனுமாகிய இறைவன் என்கிற கூற்றினையும் எடுத்துரைக்கிறார் சம்பந்தர்.

**புற்றின் நாகம் அணிந்தவன் பூந்தராய்**

**பற்றிவாழும் பரமனைப் பாடிடப்**

**பாவம் ஆயின தீரப் பணிந்திடுஞ்**

**சேவ தேறிய செல்வன் தானே! (மூன்றான் திருமுறை – 2851 ப - 108)**

புற்றில் வாழும் பாம்பை ஆபரணமாக அணிந்தும், யானையின் தோலை உரித்துப் போர்த்தியும் திருப்பூந்தராய் எனும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள எம்பிரானை எண்ணித்தொழும் அனைத்துயிர்களுக்கும் நன்மையைச் செய்து வீடுபேறுதனை அருளுபவன். மன்னராகி உலகாள விரும்பினால் இப்பூந்தராய் எனும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் பெருமானின் பொன்னான திருவடிகளை வழிபடுங்கள். விண்ணவர்கள் அனைவரும் வணங்கும்படி தனது கையில் மாங்கன்றை ஏந்தி திருப்பூந்தராய் என்னும் இவ்விடத்தில் அருளும் சிவனின் அருளைப்பெற்றால் மக்களைத் தொடர்ந்து நின்ற வினைகள் யாவும் நீங்கி மேல் நிலையை அடைந்து, வீடுபேறுதனை அடையளாம் எனும் மேற்கண்ட பதிவுகளனைத்தையும் திருஞானசம்பந்தர் இத்திருத்தலம் சார்ந்து பாடியுள்ளார். செம்மை வாய்ந்த திருவடிகளைத் துதித்து இறைஞ்சிட மனக்கவலைகளைப் போக்கி, முன்பு ஈட்டிய தீராத வினைகளைப் போக்குவதோடல்லாமல் இனிவரும் தீவினைகளும் வாராதபடி நம் மனம், வாக்கு, காலத்தால் செய்த பாவங்களனைத்தையும் நீக்கி, நாள்தோறும் பேரின்பம் அடையும் நிலையினையும் பெறலாம். மேலும்,

**தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**மணிமிடற் றண்ணல் (பரிபாடல் – 9, ப - 6 – 7)**

என்ற பரிபாடல் வரிகளும்,

**கடிந்தெறற் செந்தீ வேட்டுப்**

**புறந்தாழ் புரிசடை புலர்த்துவோனே (புறநானூறு – 251)**

எனும் புறனானூறு வரிகளும் சிவபெருமானின் அருளினை இவ்வுலகம் பெற சிவவழிபாடு முக்கியத்துவம் பெற்றது என்பதனை உணர்த்துகின்றன. சிவவழிபாடு மேற்கொள்பவர் சிவனுலகம் செல்வர் என்பது உண்மையே.

**சம்பந்தருக்கு சிறப்பு செய்த திருத்தலம்**

இத்திருத்தலமானது நகரின் மையப்பகுதியில் அமைந்தும், கோபுர அமைப்பானது நான்கு புறமும் உயர்ந்த சுற்று மதில் சுவர்களுடனும் அமைந்துள்ளது. கோவிலின் வெளிப்பிரகாரத்தில் வடமேற்கு திசையில் சம்பந்தருக்கென திருக்கோவிலும் அமைந்துள்ள பெறுமை கொண்டது இத்திருத்தலம். மேலும் தெற்கு உட்பிரகாரத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் சிலை உருவக்காட்சிகளையும் காணலாம்.

**2) திருக்கொள்ளம்புதூர்**

திருக்கொள்ளம்புதூர் எனும் இத்திருத்தலம் திருவாரூர் மாவட்டத்தில் உள்ள ஊராகும். குடவாசல் வட்டம் கொரடாச்சேரியிலிருந்து 7.5 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. கும்பகோணத்தின் தெற்கு பகுதியில் இருந்து 20 கிலோ மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது.

**தலத்தின் வேறு பெயர்கள்**

இவ்வூரானது திருக்களம்பூர், பிரம வனம், கூவிள வனம், பஞ்சாக்ஷரபுரம், காண்டீப வனம் எனவும் வேறு வேறு பெயர்கள் கொண்டு சிறப்புடன் விளங்குகிறது.

**மூலநாதர்**

சிவபெருமான் இத்திருத்தலத்தில் மூலநாதராக வில்வாரண்யேஸ்வரர் எனும் பெயரில் அழைக்கப்படுகிறார். தாயார் சௌந்தரநாயகி அழகு நாச்சியார் எனும் பெயரில் அழைக்கப்படுகிறாள்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**தலத்தின் சிறப்பு**

இவ்வூரில் முள்ளியாறும், அகத்திய காவேரி எனும் கிளை ஆறுகளும் இத்திருத்தலத்தின் மேற்கு முகமாக பாய்கிறது. சோழ நாடு சென்று பல தலங்களைத் தரிசித்த சம்பந்தர் காவிரி நதியை அடைந்து ஓடத்தில் ஏறிய பின்,

**கொட்ட மேகம ழுங்கொள்ளம் புதூர்**

**நட்டம் ஆடிய நம்பனை யுள்கச் (மூன்றாம் திருமுறை - 2856 ப - 109)**

என்று தொடங்கும் பதிகம் பாட ஓடம், படகோட்டி இல்லாமல் தானாகவே திருக்கொள்ளம்புதூரை அடைந்தது. சம்பந்தர் பதிகம் பாடியதும் ஓடம் சென்றதால் இத்திருத்தலத்தில் ஓட விழா எனும் பெயரில் ஐப்பசி மாத அமாவாசையில் சிறப்பாக நிகழ்த்தப்படுகிறது. இத்திருத்தலத்தின் சிறப்பான விழாவாகவும் கருதப்படுகின்றது.

இன்றைய காலக்கட்ட தொழில் நுட்பங்களின் வளர்ச்சியில் பயணம் என்பது அதீத வளர்ச்சி அடைந்த நிலையில், அறிவியல் வளர்ச்சிக்குச் சவாலாக அமைந்தபடி திருஞானசம்பந்தரின் இத்தகு பயணம் தொழில்நுட்ப வசதியில்லாத ஏழாம் நூற்றாண்டிலேயே இறையருளால் நடந்திருக்கிறது என்று அறியும்போது வியப்பிற்குறியதாக உள்ளது.

இறைவனின் இத்தகு செயலில் உளம் கரைந்த சம்பந்தரோ, தன் பொருட்டு வேண்டாமல்,

**செல்ல வுந்துக சிந்தை யார்தொழ**

**நல்ல மாறருள் நம்பனே (மூன்றாம் திருமுறை – 2857 ப – 110)**

எனப்பாடினார். அதாவது, மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வணங்க அருள்புரிவாயாக! என வேண்டினார்.

'செல்ல வுந்துக' என்று மேற்குறிப்பிட்ட இருவரிகளும் இத்திருத்தலம் சார்ந்து பாடிய ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் இடம் பெற்ற வரிகளாகும். மொத்தம் நான்கு அடிகளில் மேல் இரண்டு அடிகளில் திருத்தலத்தின் பெருமையை உணர்த்திய பின்பு, இவ்விரண்டு வரிகள் சேர்த்துப் பாடியுள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இத்திருத்தலத்தில் விநாயகர் மற்றும் பிருகு முனிவர், கண்வ முனிவர், அகத்திய முனிவர், வசிட்ட முனிவர், வாமதேவர், கங்கை, காவிரி, ஆதிசேடன் போன்றவர்களும் வரகுண பாண்டியன், கோச்செங்கட்சோழன் போன்றோரும் வழிபட்ட பெருமைக்குறியத் தலமாகும்.

**திருத்தலத்தின் பாடல் சிறப்புகளும், வரங்களும்**

**குலையி னார்தெங்கு சூழ்கொள்ளம் புதூர்**
**விலையி லாட்கொண்ட விகிர்தனை யுள்கச்**
**செல்ல வுந்துக சிந்தை யார் தொழ**
**நல்கு மாறருள் நம்பனே! (மூன்றாம் திருமுறை – 2858 ப - 110)**

நீர்நிலைகளும், வயல்களும் கொண்டு குலைகளோடு கூடிய தென்னை மரங்களும், பெண்களின் கண்களைப் போன்று மலர்ந்த குவளை மலர்களும், பொன் வண்ணம் ஒத்த பூக்கள் நிறைந்த கொன்றை மரங்களும், அத்தகு மரங்களில் குரங்குகள் ஆடி மகிழ்வதால் உண்டாகும் ஒலியும், அங்குள்ள நீர்ப்பகுதிகளில் நன்கு வளர்ந்த வரால் மீன்களும் குவிந்து காணப்படும் திருக்கொள்ளம்புதூர் என்று தலத்தின் பெருமையினையும் , வளங்களையும் பாடல்வரிகளில் எடித்துக்காட்டியுள்ளார்.

**கொன்றை சேர்சடை யாங்கொள்ளம் புதூர்**
**நன்று காழியுள் ஞானசம் பந்தன்**
**இன்றுசொன் மாலைகொண் டேத்த வல்லார்போய்**
**என்றும் வானவ ரோடிருப் பாரே! (மூன்றாம் திருமுறை - 2866 ப – 112)**

திருநடனம் ஆடும் தலைவனான சிவபெருமான் கொன்றை மலர்களை அணிந்து சடாமுடியுடன் எழுந்தருளியிருப்பார். இத்திருக்கோயிலில் இறைவனைக் கண்ணாரக்கண்டு வணங்க வரும் மக்களுக்கு அகத்தளவில் மட்டுமல்லாது புறத்தேயும் கண்டு வழிபடும் அருள் பெறுவர். இதனுடன் எப்பொழுதும் தேவர்களோடு கூடி மகிழ்வர் என்று சம்பந்தர் பாடியுள்ளார்.

**3) திருப்புகலி**

திருப்புகலி எனும் இத்திருத்தலம் தமிழ்நாட்டில் மயிலாடுதுறை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

மாவட்டத்திலுள்ள சீர்காழி எனும் வட்டத்தில் அமைந்த ஓர் ஊராகும். நகர அமைப்பினைச் சுற்றிலும் வடக்குப்பகுதியில் அகண்ட காவிரி பாய்ந்து வளமடையச் செய்கின்றது.

**மூலநாதர்**

சிவபெருமான் இத்திருத்தலத்தில் மூலநாதராக பிரமபுரீசர் எனும் பெயரில் அழைக்கப்படுகிறார். தாயார் திருநிலை நாயகி எனும் பெயரில் அழைக்கப்படுகிறாள்.

**தலத்தின் சிறப்பு**

இத்திருத்தலம் குருபகவான், திருமால், பிரம்மா, முருகப்பெருமான், பராசர முனிவர், உரோமச முனிவர், வியாசமுனிவர் போன்றோர் வணங்கி, சிவபெருமானின் அருளினைப் பெற்றதாகவும், சம்பந்தர் மட்டுமல்லாது அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோரும் பதிகங்கள் பாடிப் போற்றியுள்ளனர்.

**போற்கால்வெஞ் சூலப் படையார் பிரம புரத்திறைவர்**
**சீர்கான் முகத்திரு நோக்குள் வலத்துச் செறிகணிய (சீகாழிக் கோவை – நூ - 4)**

எனும் வரிகளில் திருப்புகலியின் மூலநாதரான பிரமபுரீசரை திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். மேலும், இத்திருத்தலத்திற்குச் சென்று இறைவனை வணங்கினால் நல்லின்பம் வாழ்வில் பெறலாம் எனும் செய்தியினையும்,

**செல்லார் பொழிற்பு கலியார் பொதியச் சிலம்பமரிந்**
**நல்லா ரடியடைந் தேயிரப் பாமின்ப நாம் பெறவே (சீகாழிக் கோவை – நூ- 7)**

இப்பாடல்வரிகளில் மீனாட்சி சுந்தரம் பிள்ளை நூலில் பதிவு செய்துள்ளார்.

**திருத்தலத்தின் பாடல் சிறப்புகளும், வரங்களும்**

**கன்னெடு மால்வரைக் கீழரக் கன்னிடர் கண்டானும்**
**வின்னெடும் போர்விறல் வேடனா கிவிச யற்கொரு**

**(மூன்றாம் திருமுறை -2874, ப – 114)**

எனும் அடிகளில் மும்மூர்த்திகளில் முதன்மையானவனாய் கழல் அணியைக் காலில் அணிந்தவனின் திருவடிப் பெருமையையும், திருமுடியையும் தேடி நின்றபோது, அளவிட இயலாது நீண்டு எரிவது போன்று நீண்டவனும், சினம் தனிய பாலால்

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

அபிடேகம் செய்யப் பெற்றவனும் அழகிய புகலி என்று திருப்புகலி அழைக்கப்பெறும் திருத்தலத்தில் ஆடி உறைபவன் சிவபெருமான் என்று பாடியுள்ளார்.

நெற்றிக் கண்ணையுடையவனும், திருவெண்ணீற்றினைப் பூசியுள்ளவனும், திருவடிகளில் கழல்கள் ஒழிக்கப் பண்ணுடன் இசைபாட நடனம் ஆடுபவனும், சோதிவடிவாக விளங்கி, மலர்ப் பொய்கையில் இளவாளை மீன்கள் துள்ளிப் பாய்கின்ற திருப்புகழி நகரில் புன்னை மரங்கள் பொன் போன்ற தாதுக்களை உதிர்க்க, தாமரை மலர்களும் சூழ்ந்த பொய்கையில் உமாதேவியோடு வீற்றிருந்து அருளுபவன்.

மலைகள் போன்று உயர்ந்து விளங்கும் அழகிய மாடங்களையுடைய திருப்புகலி நகரில் பூக்கள் நிறைந்த சோலைகளும், குளிர்ச்சியும் நிலைபெற்றிருக்கும். இத்தலத்தில் தேவர்கள் சிவன்பால் திருநாமங்களை உரைத்தும், அனலினை உள்ளங்கையில் ஏந்தியவனும், மக்கள் சூழ ஆழ்ந்து வணங்கித் தலைவனாக ஏற்றுக்கொண்டவனும், குற்றமெனில் நெற்றிக்கண் கொண்டு விழித்துக்காட்டுபவனுமாகிய சிவபெருமான், திண்ணிய கயிலை மலையை விரும்பி இருப்பிடமாகக் கொண்டவன், பொன்னிறப் பிரம்மனால் கூடத் தான் இன்னானெனக் காண்பதற்கியலாதபடி அழற்பிழம்பாய் நின்றவன்.

இவ்வாறெல்லாம் காட்சிதந்து அருள் வழங்கும் திருப்புகலி நகர் இறைவனைத் தமிழ்பாக்கள் கொண்டு இன்னிசையுடன் ஓதித்துதிக்க வல்லவர்கள் பெருமையுடைய சிவனுலகம் செல்வர் என்பது உண்மையே எனும் கூற்றினை,

**பூங்கமழ் கோதையொ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்**
**பாங்கனை ஞானம்சம் பந்தன்சொன் நதமிழ் பத்திவை**
**ஆங்கமர் வெய்திய வாதிய கவிசை வல்லவர்**
**ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வது முண்மையே**

**(மூன்றாம் திருமுறை - 2877 ப – 115)**

என்ற வரிகளில் திருஞானசம்பந்தர் பதிவுசெய்துள்ளார்.

**திருத்தலங்களும் வரலாற்றுப் பதிவுகளும்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

மேற்காணும் மூன்று திருத்தலங்களிலும் ஞானசம்பந்தர் சிவனைப் போற்றிப்பாடிய பாடல்களில் சிவபெருமானைக் குறித்தும் அவரது திருவிளையாடல்கள் குறித்தும், அற்புதச் செயல்கள் குறித்தும் பாடல்களினூடே செய்திகளைப் பதிவுசெய்துள்ளார். அவ்வாறான அற்புதச்செயல்கள் குறித்த பதிவுகள் பின்வறுமாறு,

அனைவரும் அறிந்த செய்திகளான அடிமுடி தேடுதல், பாற்கடலில் வந்த விடத்தை சிவன் ஏற்றல், முப்புறம் எரித்தல், தக்கன் யாகம், மன்மதனை எரித்தல் இவை போன்ற தகவல்கள் விடுத்து, பலரால் அறியப்படாத வரலாற்றுச் செய்திகள் மட்டும் இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**கஜாரி உருவம்**

திருப்பூந்தராய் எனும் திருத்தலப்பாடலில்,

**போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்**
**காத லித்தான் கழல்விரல் ஒன்றனால்**
**அரக்கன் ஆற்றல் அழிக்கவே நுக்கருள்**
**பெருக்கி நின்றஎம் பிஞ்ஞ கனே (மூன்றாம் திருமுறை 2852, ப – 108)**

எனும் பாடல் வாயிலாக திருஞானசம்பந்தர் உரைக்கும் வரலாற்றுச் செய்தி பின்வருமாறு,

தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தினை அடக்குவதற்காக, சிவபெருமான் பிச்சாண்டவ வடிவினை ஏற்றுச் சென்றார். கானகத்தில் இருந்த முனிவர்களின் பத்தினிகள் பிச்சாண்டவரைக் கண்டதும், வந்திருப்பது சிவன் என்பதை அறியாது கற்புநெறி தவறி உடன் சென்றனர். இச்செய்தியினை அறிந்த முனிவர்கள் பிச்சாண்டவரை எதிர்த்து தனது தவ வலிமையினைக் காட்டினர். அச்சமூட்டக்கூடிய விலங்கினங்களை ஏவினர். பொருள்கள், கொடிய உயிரினங்கள் தொடர்ந்து மதம் கொண்ட யானையையும் கொண்டு தாக்கினர். “சிவபெருமான் அட்டமாசித்திகளுள் ஒன்றான அணிமா சக்தியால் மிகவும் சிறியதாக மாறி, யானையின் வயிற்றுக்குள் சென்றார். பின் உள்ளிருந்து அகண்ட வடிவம் எடுத்து மதயானையின் வயிற்றைக்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கிழித்து முனிவர்களின் முன் நின்றார். யானையின் தோலைத் தன்னுடைய ஆடையாகப் போற்றிக் கொண்டார். இந்த வடிவத்தினை கஜாரி வடிவம் என்கின்றனர்." **(64 – சிவ வடிவங்களும் தத்துவ விளக்கங்களும் – ப – 256)**

கஜாரி வடிவம் சிவபெருமானின் எண்ணற்ற வடிவங்களில் ஒன்றாகும். இவ்வடிவம் பெருமானின் வீரத்தினை விளக்கும் எட்டு வடிவங்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது.

**இராவணனை மலையின் கீழ் நெருக்கியவன்**

குரங்குக் கூட்டங்கள் மரங்களில் ஆடிக்கொண்டிருக்கும் திருக்கொள்ளம் புதூரில் இவ்வினம் குறித்து சம்பந்தரால் பதிவு செய்யப்பட்ட வரலாற்றுச் செய்தி பின்வருமாறு,

**குரக்கி னம்பயி லுங்கொள்ளம் பூதூர்**

**அரக்க னைச்செற்ற ஆதியை யுள்கச் (மூன்றாம் திருமுறை – 2863, ப – 111)**

எனும் வரிகளில், இராவணன் சிவனைச் சந்திக்கச் சென்றபோது, சிவனும் உமையும் பேசிக்கொண்டிருந்த காரணத்தால் நந்தி தேவர் இராவணனை உள்ளே விட மறுத்தார். இதனால் ஆத்திரமடைந்த இராவணன் அவரோடு சண்டையிட ஆரம்பிக்கவே, குரங்குகளால் இலங்கை அழியும் என்று நந்தி சாபம் கொடுத்தார். அப்போதும் நிற்காமல் கயிலை மலையை இராவணன் தூக்க முயன்றபோது, சிவன் தன் கால் கட்டை விரலால் மலையை அழுத்தினார். மலையின் அடியில் இராவணன் சிக்கிக்கொண்டான். தவறினை அறிந்த இராவணன் தன் உடல் நரம்புகளை அறுத்து அதனைக்கொண்டு சாமகானம் இசைத்து, எம்பிரானை வணங்கி விடைபெற்றான் எனும் செய்தி இத்தலத்தில் பாடிய பாடல்களில் பதிவு செய்துள்ளார் சம்பந்தர்.

**மகாசங்கார காலம்**

மகாசங்கார காலம் என்பது மிகப்பெரும் பிரளயம் அல்லது பெரும் அழிவுக்காலம் எனப்படும். பெருமான் சினம் கொண்டு, இருள் நிறைந்த ஊழிக்காலத்தில் ஓர் ஒளிப்பிழம்பாய் தாண்டவ நடனம் ஆடி உலகங்களைப் படிப்படியாக அழித்து தன்னுள் அடக்கிக் கொள்ளும் நிலையாக மக்கள்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

எடுத்துக்கொள்வர். இத்தகு “மகாபிரளய காலத்தில் உலகம் அனைத்தும் பராசக்தியில் ஒடுங்க, பராசக்தி பரமசிவத்தில் ஒடுங்க, பரமசிவன் ஒருவரே தனியாக இருந்து ஆடியது” என்பர். **(மஹாபிரளய வைபவத் திருக்காட்சி – ஸ்ரீ அகத்திய விஜயம் – இதழ்- 9 ப – 6)**

இச்செய்தியினைத் திருஞானசம்பந்தர் திருப்புகலி எனும் திருத்தலத்தில் பாடிய கீழ்காணும் பாடலில் பதிவு செய்துள்ளார்.

**சாம்பலோ டுந்தழ லாடினா னுஞ்சடை யின்மிசைப்**
**பாம்பினோ டும்மதி சூடினா நும்பசு வேறியும்**
**பூம்படு கல்லிள வாளைபா யும்புக லிந்நகர்க்**
**காம்பன தோளியொ டும்மிருந் தகட வுளன்றே**

**(மூன்றாம் திருமுறை – பா –2868, ப – 112)**

**சிவன் பாசுபத அம்பினை அர்ச்சுனனுக்கு வழங்கல்**

போரில் எதிரிகளை வென்று மீண்டும் சகோதரர்கள் இராஜ்ஜியம் ஆளும் நிலையினைப் பெற என்ன செய்ய வேண்டும் என்று இந்திரனிடம் அர்ச்சுனன் வேண்டினான். சிவபெருமானின் அருளால் பாசுபதத்தைப் பெற்றுவிட்டால் உன்னை வெல்ல எவராலும் இயலாது என்றார். உடனே அர்ச்சுனன், இந்திரன் உரைத்தபடியே பாசுபத அம்பினைப் பெற கைலாச பர்வதம் நோக்கி நடந்தான். பல மாதங்கள் கடந்தன. காடும், மழையும், வனமும், என பல இடையூறுகளையும் கடந்தான். இமகிரியின் கானகத்தில் சிவனை நோக்கி தவமிருந்தான். நெடுநாள் ஆகாரமின்றி கடுந்தவம் புரிந்தான். பின் சிவபெருமான் நிலையினை அறிந்து வேடன் உருவமெடுத்து, தேவியும் உடன்வர (வேட்டுவப்பெண் உருவில்) சிவபெருமான் ஒரு காட்டுப்பன்றியைத் துரத்தி வந்தார். அப்பன்றியோ மூகன் எனும் இராட்சசன். அர்ச்சுனனை மாய்க்கக் காட்டுப்பன்றியாக உருமாறி அங்கு வந்தவன்.

சிவபெருமானும், அர்ச்சுனனும் ஒரே நேரத்தில் காண்டிபத்தைக் கொண்டு தாக்கியதும் இராட்சசன் இறந்தான். இருவரில் யார் இட்ட அம்பு பன்றியைக்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கொன்றது என்ற நோக்கில் வேடன் உருவில் வந்த சிவனைக் கண்ட அர்ச்சுனன் சினம் கொள்ள இருவரிடத்தும் போட்டி மேலோங்கியது.

வேடனின் பலத்தினையும், ஆயுதப் பிரயோகங்களையும் கண்ட அர்ச்சுனன், அவ்வேடனின் அசாத்திய சக்தியினைப் புரிந்து பல கோணங்களில் போட்டியிட்டு, உடலெலாம் இரத்தக்காயங்களோடு மயக்கம் தெளிந்த அர்ச்சுனன் மண்ணில் ஒரு சிவலிங்கம் செய்து மலர் மாலையிட்டு வணங்கினான். தலை நிமிர்ந்தவன் பார்க்கையில், தான் மண் லிங்கத்திற்கு இட்ட மலர்மாலை எதிரே நின்ற வேடனின் சிரசில் சூட்டப்பட்டிருப்பதைக் கண்டதும், இருகை கூப்பினான், தொழுதான். உனது பக்தியைச் சோதிக்கவே இத்தகு திருவிளையாடலைச் செய்தேன் என்றார் பெருமான். உடனே அர்ச்சுனன் எதிர்நோக்கிய பாசுபத அம்பினை வழங்கி மறைந்தார். இத்தகு வரலாற்றுச் செய்தியினை சம்பந்தர்,

**கன்னெடு மால்வரைக் கீழரக் கன்னிடர் கண்டானும்**
**வின்னெடும் போர்விறல் வேடனா கிவிச யற்கொரு**
**பொன்னெடுங் கோல் கொடுத் தானும்ந் தண்புக லிந்நகர்”**

**(மூன்றாம் திருமுறை – பா – 2868, ப – 112)**

எனும் வரிகளில் பதிவு செய்துள்ளார்.

இவ்வரலாற்றினை எடுத்துரைக்கும் விதமாக கடலூர் மாவட்டம் “திருவேட்களம்” எனும் ஊரில் இந்த அம்பின் பெயரிலேயே (பாசுபதேஸ்வரர்) மூல இறைவன் அமைந்திருப்பது இவ்வுண்மையினை அறிந்து கொள்ள முடிகிறது. **(பு.மா.ஜெயசெந்தில்நாதன் ,திருமுறைத்தலங்கள் – ப -10-13)**

**முடிவுரை**

திருக்குறள், சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், இக்கால இலக்கியம் என அனைத்திலும் சிவபெருமானின் இன்னருள் என்பது பரவலாக உணர்த்தப்பட்டனவே. அவற்றுள் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர், வாழ்ந்தது பதினாறு ஆண்டு காலம், ஆயினும் இவரது பாடல்களில் பொதிந்த ஆன்மீக நோக்கும் அறிவியல் சிந்தனையும் காலம் கடந்தும் நிலைத்து நிற்கக்கூடியவையாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

முதல் மூன்று திருமுறைகளைப் பாடிய திருஞானசம்பந்தரின் பாடல்களில் அவரது பக்தியும், அவற்றின் சிறப்பும் அறிவதோடு மட்டுமல்லாமல், எக்காலக்கட்ட அறிவியல் வளர்ச்சிக்கும் எட்டாத இறையின் செயல்பாடுகளும், திருத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருவுருவக்காட்சி, வடிவம், அருள்தரும் வல்லமை, திருத்தலப்பெருமை, திருத்தலத்தின் அமைவு இவற்றுடன் வரலாற்றுப் பதிவுகளையும் சிறப்புற எடுத்தியம்பிய பாங்கும் ஆய்வுக்கட்டுரையின் வழி ஆராய்ந்து அறிய முடிகின்றன. இம்மூன்று திருத்தளத்திற்குச் சென்று வழிபட்டால் மட்டுமே இத்தனை சிறப்புகள் உளதென்றால் இவர் பாடிய மொத்தம் 220 திருத்தங்களுக்கும் சென்று அவற்றின் சிறப்புகள் அறிந்து ஒப்பு நோக்குவோமெனில் ஒரு தலைமுறை மட்டுமல்லாது மூவேழு தலைமுறைக்கும் இன்னருள் பெற இயலும் என்பது சத்தியமே!

**துணைநூற்பட்டியல்**

[1] இரா.இராமகிருட்டிணன். *64 சிவ வடிவங்களும் தத்துவ விளக்கங்களும்*, விகடன் பிரசுரம், 2009.

[2] எம்.நாராயண வேலுப்பிள்ளை. *பன்னிரு திருமுறைகள்*. நர்மதா பதிப்பகம், 2011.

[3] சிவ திருச்சிற்றம்பலம். *சிவன் திருவடிவங்கள்*. கங்கை புத்தக நிலையம், முதற்பதிப்பு, தி.நகர், சென்னை-17, 2004.

[4] டாக்டர் இராச.வசந்தகுமார். *மூன்றாம் திருமுறை*, (வேந்தர், கற்பகம் பல்கலைக்கழகம்), செஞ்சுடர் அச்சகம், கோவை, 2015.

[5] புலியூர்க் கேசிகன். *பரிபாடல்* (அகமும் புறமும்). சாரதா பதிப்பகம், சென்னை, 2009.

[6] புலியூர்க் கேசிகன். *புறநானூறு* (மூலமும் உரையும்). சாரதா பதிப்பகம், சென்னை 2010.

[7] பு.மா.ஜெயசெந்தில்நாதன். *திருமுறைத்தலங்கள்*. வர்த்தமானன் பதிப்பகம், 5 ஆம் பதிப்பு, சென்னை, 2009.

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[8] திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை. *சீகாழிக்கோவை*. உ.வே.சாமிநாதையர் பதிப்பு, 1903.

[9] ந. மு. வேங்கடசாமி நாட்டார், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. *மணிமேகலை*. தென்னிந்திய சைவசித்தந்த நூற்பதிப்புக் கழகம், திருநல்வேலி, 1994.

**References in English**

[1] Ira Ramakrishnan. *64 Shiva Forms and Philosophical Explanations*, Vikatan Publication, 2009.
[2] M. Narayana Velupillai. *Twelve Times*. Narmada Publishing, 2011.
[3] Shiva Tiruchirambalam, *Shiva Statues*. Ganga Book Center, First Edition, T. Nagar, Chennai-17, 2004.
[4] Dr. Raja.Vasanthakumar. *Mundran Thirumurai* . (Vander, Karbagam University), Centurion Press, Coimbatore, 2015.
[5] Puliyoor Kesikan. *Paripaadal* (Akamum Puramum). Saaratha Pathippagam, Chennai, 2009.
[6] Puliyoor Kesikan. *Puranaanooru* (Moolamum Uraiyum). Saaratha Pathippagam, Chennai, 2010.
[7] M. Jeyasenthilnathan. *Thirumuraiththalangal*, Varthamaanan Pathipagam, Part – V, Chennai, 2009.
[8] Thirisirapuram Sri Meenakshi Suntharam Pillai. *Seekaalik Kovai*, U.Ve. Saminaathaiyar Pathippagam, 1903.
[9] N. M – Venkadasaamy Naattaar, Ovvai.S. Thuraisamippillai, Manimegalai Urai, Thenninthiya Saiva Sidhaantha Nool Pathippu Kazhagam, 1994, Thirunalveli.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# அப்துல்ரகுமான் கவிதைகளில் பெண்ணியச் சிந்தனைகள்
# Feminist Thoughts in Abdul Rahman's Poems

**செ. மகாலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர், ஏ.பி.சி மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி -628 002.
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி – 627012.
**C. Mahalakshmi**, Research Scholar, Tamil Department, A.P.C.Mahalaxmi College for Women, Thoothukudi-628002.
Manonmaniam Sundaranar University, Tirunelveli -627012.
**ORCiD: https://orcid.org/0000-0003-0517-896X**
**முனைவர் ச.மல்லிகா,** இணைப்பேராசியர், தமிழ்த்துறை, ஏ.பி.சி மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி – 628002.
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி – 627012.
**Dr.S. Malika,** Associate Professor, Tamil Department, A.P.C.Mahalaxmi College for Women, Thoothukudi-628002.
Manonmaniam Sundaranar University, Tirunelveli -627012.
**ORCiD: https://orcid.org/0000-0002-5262-5219**
**DOI: 10.5281/zenodo.5105983**

## Abstract

*Feminism can be defined as the lighthouse of the day for women's rights. It is the way to wipe out the emotional state of women regarding oppression and exploitation of women in society, the workplace, and even in the family, and the emotional actions that women and men take to change this situation. No matter how many laws are put in place, it is very difficult to preserve feminism if there is no awareness among the people. It is the duty of poets to effectively nurture this difficult service for the sake of women. Many poets have done it so in a good manner. One such poet is Abdul Rahman. His poems portray the needed rights to be given to women. The purpose of this article is to examine how Kaviko Abdulraguman expressed feminism in his poems in that order.*

**Keywords:** Feminism, Equality, Respect for Women, Abdul Rahman's Poems.

## முன்னுரை

சமுதாயத்திலும், வேலைப் பார்க்கும் இடங்களிலும் மற்றும் குடும்பங்களிலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் மன உணர்வு நிலைகளும், இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப் பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியத்தின் வரையறையாகக் கொள்ளலாம். குடும்பத்திற்கு உள்ளேயும் வெளியிலும், சாதி, மதம், மொழி, அரசியல், பண்பாடு, பொருளாதாரம் போன்ற சமூகக் காரணிகளால் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களைக் கண்டறிந்து அவற்றிலிருந்து பெண்ணை மீட்டெடுத்து, ஆண் பெண்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பாகுபாடற்ற அனைத்திலும் சமநிலையான ஒரு சமூகத்தை உருவாக்க எடுக்கப்படும் சமூக முயற்சியைப் பெண்ணியம் எனலாம்.

தனி மனிதன், சமூகம், பண்பாடு போன்ற தளங்களில் உள்ள கொள்கை வேறுபாடுகள் காரணமாகப் பெண்ணியமும் பல வகைகளாக அமைக்கப் பெற்றுள்ளன. முக்கியத்துவமாகக் கருதப்படும் மூன்று கோட்பாடுகள் நிதானமான பார்வைக் கொண்டவள், போராளி மனப்பான்மை கொண்டவள் மற்றும் சமூக அக்கறை உடையவள் என வகைப்படுத்த முடியும். எவ்வளவுதான் சட்டங்கள் போட்டாலும் மக்கள் மத்தியில் விழிப்புணர்வு இல்லை என்றால் பெண்ணியத்தை பேணி காப்பது மிகவும் கடினம் ஆகும். இந்த கடினமான சேவையை திறம்பட வளர்ப்பது கவிஞர்களின் கடமையாகும். "ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்" (பாரதியார் கவிதைகள், பா 213) எனத் தங்களின் படைப்புக்கள் மூலம் பெண்ணியத்தைச் சமஉரிமையை வளர்த்து பேணிக்காத்தார்கள். அந்த வகையில் அப்துல் ரகுமானின் கவிதை படைப்புகளில் பெண்ணியத்தை எப்படிக் கையாண்டுள்ளார் என்பதை ஆய்வதே இந்தக் கட்டுரையின் நோக்கமான உள்ளது.

**மகளிரை மதித்தல் வேண்டும்:**

பெண்களை மதிப்பது பண்பாட்டுக் கூறுகளில் ஒன்று. "ஈன்றாலோடு எண்ணக் கடவுளும் இல்'' (நான்மணிக்கடிகை - பா 57) எனப் பெண்ணைத் தெய்வம் எனப் போற்றுவதும் பேய் எனத் தூற்றுவதும் வேண்டாம். மனிதம் என்பதனுள் பெண்ணை அடக்கி மதிப்பதே பண்பாடு என்கிறார் கவிக்கோ.

**பெண்ணே**

**துருவங்களிடையே**

**ஊஞ்சலாக உருவாக்கப்படுகிறவளே**

**ஒன்று தெய்வமாகிறாய்**

**இல்லையென்றால்**

**பேயாகிறாய்**

**மனிதம் உனக்கு**

**எப்போது வாய்க்கும் (ராப்பிச்சை, கவியரங்கக் கவிதைகள் தொகுதி-2, ப 95)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என்ற வினா வழி பெண்களையும் ஆண்களுக்கு இணையாக சமதளத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் என்கிறார். மகளிரை எந்த நாடு போற்றுகிறதோ அந்த நாடே முன்னேறிய நாடாகக் கருதப்படுகிறது. அந்நாட்டு மக்களே சமுதாய வளர்ச்சி அடைந்தவர்கள் ஆவர். 'ஆண்மகனைச் சாந்தமாக்கவே அழகான பெண்ணை இறைவன் படைத்திருக்கிறான் பெண்கள் இல்லாவிடில் ஆண்கள் வெறும் மிருகங்கள்' என்கிறார் தாமஸ் ஆட்வே.

**ஈகைப்பண்பு**

இயல்பாகவே ஈகைக்குணம் கொண்டவர்கள் பெண்கள்

**என் பிச்சைப்**

**பாத்திரத்தில்**

**ஒரு புன்னகையை**

**நீ போட்டால் போதும்**

**அதை வைத்துப்**

**பிழைத்துக் கொள்வேன் (அப்துல்ரகுமான், ரகசியபூ, தொகுதி-2, ப. 83)**

பெண்களின் சிறப்பைப் பெண்ணின் புன்னகை மூலம் விளக்குகிறார். பிச்சை என்பவரின் கொடுத்து வாழ வேண்டும் எனும் பண்பினைப் பெண்ணின் செயலை முன்னிறுத்தி விளக்குகிறார்.

சதி என்னும் சொல் என்பது உடன்கட்டை ஏறும் வழக்கத்தைக் காட்டுகிறது. 'சுட்டுவிரல்' கவிதை நூலில் அப்துல் ரகுமான் இத்தலைப்பில் பெண் படும் துயரத்தையும் அத்துன்ப நீக்கத்தில் நீதி கூட உதவவில்லை என்பதை ராமாயணம் சிலப்பதிகாரம் கூறும் நிகழ்வுகளைச் சுட்டிக் காட்டி விளக்குவதில் விடுகதைப் பாங்கு உள்ளது.

**நெருப்புக்குள் அவள்**

**அவளுக்குள் நெருப்பு**

**விளக்காக**

**அடுப்பாக**

**எந்த வீட்டிலும்**

**அவளை நீங்கள் காணலாம் (அப்துல் ரகுமான், சுட்டு விரல், ப. 9)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

என மனைக்கு விளக்காக விளங்கும் மடவார்களைக் காட்டுகிறார். கவிக்கோ இலங்கையில் அனுமனின் வாதம் மதுரையில் கண்ணகி வாதம் இரண்டினையும் கவிதை வரிகளில் அமைக்கிறார்.

**இலங்கையில் ஒருமுறை**

**அவளுக்காக**

**வாதாடிப் பார்த்தது**

**மதுரையில் ஒரு முறை**

**நீதிபதியானது (அப்துல் ரகுமான், சுட்டு விரல், ப. 10)**

இலக்கியக் கலைவழிப் பெண்ணியக் கருத்தியல் விளக்கப்படுவதும் பண்பாட்டுக் கூறே. உடன்கட்டை ஏறும் வழக்கம் ஒரு காலத்திய பண்பாட்டு நிலையை விளக்கும் 'தேசிய நீரோட்டம்' எனும் தலைப்பில் கங்கை குறித்துப் பேசும் பண்பாட்டுச் செய்தி இது.

**பெண்மை போற்றும் பண்புக் கூ று**

தாய், தாரம், சகோதரி, மகள், எனப் பல முகம் கொண்டவள் பெண். மானிட ஜனனமும் அவள் வாயிலாகவே நடைபெற்று வருகிறது. 'அனைத்து வளர்ப்பவளும் தாய் அல்லவா; அன்பில் அடங்குபவளும் அவளல்லவா' என்கிறார் திரையிசைக் கவிஞர்

**நாம் காணாமல் போவதும்**

**அவளிடமே**

**நம்மைக் கண்டெடுப்பதும்**

**அவளிடமே (ரகசியபூ, கவியரங்கக்கவிதைகள்தொகுதி-2, ப.89)**

எனப் பெண்கள் காதலியாகவும், தாயாகவும் அவதாரம் எடுப்பதனை எடுத்துரைக்கிறார். பெண்மை என்பது பேச்சில் கனிவு, பண்பில் சிகரம், அன்பில் தெய்வம், பொறுமையில் பூமி என மகளிருக்கு மாண்பு அமைந்திருந்தும் ஆடவர்கள் அவர்களைக் கைப்பாவையாக்கி வைத்திருந்ததை,

**அம்மா சகோதரி காதலி மகள்**

**வைப்பாட்டி வேசி என்று**

**எங்கள் விளையாட்டிற்கான பொம்மையாகவே**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**உன்னை ஆக்கினோம் (ரகசியபூ, கவியரங்கக்கவிதைகள் தொகுதி-2, ப.90)**

ஆண்மகன் தன் வாழ்வை நலம் பெற நடத்த அவனது பருவத்திற்கு ஏற்ப பெண்களை மாற்றிக் கொண்டு சுயநலமாக வாழ்வதனைக் காட்டுகின்றார்.

மகளிரை மாண்புடன் நடத்துவதும் பண்பாட்டின் கூறேயாகும். சிறந்த குடும்ப வாழ்விற்கு அச்சாணி பெண் என்பதால் பேணிக் காக்கப்பட வேண்டியவளாகிறாள். பண்பட்ட மனிதப் பாங்கே பண்பாடு நல நோக்கம் ஒழுக்க நெறிப் பண்பாட்டின் உள்ளடக்கம் வளர்வது அதன் நிலைப்பாடு.

**அமுதம் அடைதல்**

அமுதும் தேனும் எதற்கு நீ அருகில் இருக்கையில் எனத் திரைப்பட நாயகன் தலைவியை நோக்கிப் பாடுகின்றான். தொடக்கக்காலத்தில் அமுதமாக இனித்த பெண் நாட்கள் கடந்துச் செல்லச் செல்ல அவனுக்குக் கசப்பாகி விடுகிறாள். "அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு" என்ற பழமொழிக்கு ஏற்ப நஞ்சாகத் தோன்றுகின்றாள். ஆனால் பெண்கள் மட்டும் ஆடவர்களை அமிழ்தமாகவேப் பார்க்கும் பார்வை வேண்டும் .

தேவாசுரர் மந்திர மலையை மத்தாக்கி வாசுகிப் பாம்பினைக் கயிறாக்கி அமிழ்தம் பெற, பாற்கடலைக் கடைந்தனர் என்பது புராணம். அப்துல்லாரின் அர்த்தச் செழுமைக்கு இத்தொன்மம் விடுகதைப் பண்பாக வெளிப்படலை இக்கவிதை உணர்த்துகிறது.

**உன் மனம் ஒரு பாற் கடல்**

**அதைக் கடைந்தால்**

**அமுதம் மட்டுமல்ல**

**வெளிப்படும் என்பதை**

**நீ அறிவாய் அல்லவா? (அப்துல்ரகுமான், நேயர் விருப்பம், ப. 37)**

பாற்கடலைக் கடைந்ததால் அமுதுடன் சேர்ந்து நஞ்சும் தோன்றியது. அதைப் போன்றே பெண் சில நேரங்களில் அமுதமாகவும் சில நேரங்களில் நஞ்சாக மாறி ஆண்களை வருத்துவதாகப் பாடுகிறார்.

**காப்பிய நிகழ்வு**

சிலப்பதிகாரக் காப்பியத் தலைவி கண்ணகி தன் கணவன் கோவலனைக் கொன்றதற்காகப் பாண்டியன் சபையில் தன் கணவன் கள்வன் அல்லன் என

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

வழக்குரைத்து வெற்றி கண்டாள். ஆனால் இன்றோ கோவலனோடு சேர்த்து கண்ணகியையும் சம்பலாகிவிடுகிறார்கள்.

**கோவலன் படுகொலையை**

**மறைக்க உயிரோடு**

**கொளுத்தப்படும் கண்ணகிகள் (அப்துல்ரகுமான், பால்வீதி, ப. 57)**
அநீதியைத் தட்டிக் கேட்கப் பெண்களின் நிலையை வெளிப்படுத்த கவிக்கோ இதழை நடத்திய அப்துல்ரகுமான் ஒரு வெளிப்பாட்டு உத்தியாகக் காப்பிய பாத்திரத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

**பாரதக் குறிப்பு**

மகாபாரதத்தில் பாஞ்சாலி பாவி துச்சாதனன் செயலால் அவையில் அவமானம் அடைகிறாள். அதனைக் கவிஞர் தமது கற்பனைத் திறத்தால் மாற்றியமைத்து தற்காலத்தில் மகளிர் அவையில் அரை குறை ஆடையுடன் காபரே நடனம் ஆடுவதாகப் பாடுகிறார்.

**அவர்கள் விருந்து மண்டபத்தில்**

**காபரே ஆடுகிறாள் பாஞ்சாலி' (அப்துல்ரகுமான், பால்வீதி, ப. 51)**
நடனமாடுவதைத் தொழிலாகக்கொண்டுள்ள பெண்களைத் தவறாகப் பார்பது ஆடவரின் கீழ்த்தரமான மனநிலையைக் காட்டுகிறது. காலந்தோறும் பெண்கள் ஆண்களுக்குக் கீழ், கட்டுப்பட்டு வாழ்ந்து வருவதைப் பாஞ்சாலி மூலம் விளக்கியுள்ளார்.

**புதுமை நோக்கங்கள்**

கவிதைகள் காலத்திற்கேற்ப புதுக்கோலங்கள் காண்கின்றன. மனிதனின் அகவுளைச்சலையும், சமூக நிலைகளையும், மானுடத்தையும், பொதுவுடைமையையும், தத்துவார்ந்த நிலைகளையும், அங்கத நிலைகளையும் கொண்டு புதுக்கவிதைகள் புவியில் உருப்பெருகின்றன. அப்துல்ரகுமானின் கவிதைகள் விடுகதைப் பண்பு நிறைந்தது. புராணங்கள் மூலமாகப்புதுமை திணிக்கப்பட்டு இருப்பதைக் காணமுடிகிறது.

**கவிஞனின் மனக்கொதிப்பு**

ஆடம்பர வாழ்க்கை மோகத்தில் சோரம் போகும் பெண்களின் நிலையை இராமாயண, மகாபாரதக்கதை வழி வெளிப்படுத்தியுள்ளார். ஆடவன் புரியும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

வல்லறவைக் கண்ணடிப்பதும் ஆண்மகனே என்பதை ஒப்புதல் வாக்கு மூலத்தில் கவிக்கோ புராண மாந்தர் செயல் வழி விளக்குகிறார்.

இந்திரன் வேடம் அணிந்து பெண்களின் மானத்தைச் சுறையாடுவதும் ஆண்கள் தான். கணவன் என்ற போர்வையில் அவர்களை அடக்கி வைப்பதும் ஆண்கள் தான். இரண்டும் வேண்டாம் பெண் பாலார் பெருமை வாய்ந்தவர்கள். மேன்மை, அறிவு முதலிய குணங்கள் இயற்கையில் பெற்றவர்கள். இயற்கை அறிவுடன் செயற்கை அறிவும் சேர்ந்துவிடின், அவர்களுடைய பெருமை அளவிட முடியாதது. பெண்கள் தமக்குள்ள ஆற்றலை உணர்ந்து இருவரும் இணைந்து உலகியலை நடத்துவதே சிறப்பாகும்.

**பெண்மை போற்றும் பண்புக் கூறே**

தாய், தாரம், சகோதரி, மகள், எனப் பல முகம் கொண்டவள் பெண். மானிட ஜனனமும் அவள் வாயிலாகவே நடைபெற்று வருகிறது.

**நாம் காணாமல் போவதும்**

**அவளிடமே**

**நம்மைக் கண்டெடுப்பதும்**

**அவளிடமே (அப்துல்ரகுமான், கவிக்கோகவிதைகள், ப. 123)**

என மகளிர் மாண்பு அமைந்திருந்தும் ஆடவர்கள் அவர்களைக் கைப்பாவையாக்கி வைத்திருந்ததை,

**அம்மா சகோதரி காதலி மகள்**

**வைப்பாட்டி வேசி என்று**

**எங்கள் விளையாட்டிற்கான பொம்மையாகவே**

**உன்னை ஆக்கினோம் (அப்துல் ரகுமான், கவிக்கோ கவிதைகள், ப. 123)**

என்று சமநிலையின்மையையும் விளக்கினார் கவிக்கோ. மகளிர் மாண்பைப் பாதுகாப்பதும் பண்பாட்டின் கூறேயாகும். சிறப்பான உயர்ந்த குடும்ப வாழ்விற்கு அச்சாணியாக பெண் விளங்குவதால் என்பதால் அவர்கள் பேணிக் காக்கப்பட வேண்டியவர்கள் ஆகிறார்கள். பண்பட்ட மனிதப் பாங்கே பண்பாடு நல நோக்கம் ஒழுக்க நெறிப் பண்பாட்டின் உள்ளடக்கம் வளர்வது அதன் நிலைப்பாடு.

**முடிவுரை**

கவிக்கோ அப்துல் ரகுமான் தனது கவிதைகளின் மூலம் சமத்துவ சமுதாய பெண்ணியத்தை வலியுறுகின்றார். பெண், தாய் ,சகோதரி, தாரம் ,மகள் எனப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பன்முகம் கொண்டவள் அப்பெண்ணைக் கைப்பாவையாக நடத்தாமல் ஒத்த உரிமை கொடுத்து உலகியலை நடத்த வேண்டும் எனக் கவிதைகள் வழி; சமத்துவ பெண்ணிய கருத்துக்களைப் பதிவு செய்துள்ளார். பெண்களைத் தெய்வமாக,ஈகையின் சிகரமாக, நீதி தேவதையாக, சமாதான தேவதையாக, அநீதியைத் தட்டிக் கேட்கும் போராளியாக உருவகித்துள்ளார். அழகு என்பது மனிதப் பண்புகளில் ஒன்று. பெண் உலக அழகின் உச்சம். அதுதான் தெய்விகப் பண்பின் வெளிப்பாடு, பெண் உருவத்தின் குறியீட்டு நிலையைப் புரிந்து கொள்வதன் மூலமாக ஆன்மிக நிலையை அடைய முடியும் என்கிறார்.பெண் மென்மையுடையவளாக இருக்கிறாள், கருணையும் இரக்கமும் அவள் பண்புகளாக இருக்கின்றன. படைப்பதும், காப்பதும், அழிப்பதும் அவள் செயல்களாக இருக்கின்றன இவை அனைத்தும் இறைவனின் பண்புகளாகும் . உண்மையில் இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் இடையிலுள்ள அன்பே ஆண் பெண் காதலாகக் கசிகிறது. 'உலகியல் காதலை இகழாதே. அது உண்மையான காதலின் குறியீடு அதன் உதவியால் நீ இலட்சியத்தை அடைய முடியும் ! "என்கிறார்.

**துணை நூற்பட்டியல்**

[1] அப்துல்ரகுமான், *இது சிறகுகளின் நேரம்*, நேஷனல் பப்ளிஷர்ஸ், சென்னை – 17, ஜூன் 2005.

[2] அப்துல்ரகுமான், *கவியரங்கக் கவிதைகள் தொகுதி – 2,* நேஷனல் பப்ளிஷர்ஸ், சென்னை – 17, ஜுன் 2015.

[3] அப்துல்ரகுமான், *சுட்டு விரல்,* நேஷனல் பப்ளிஷர்ஸ், சென்னை – 17, 1989.

[4] அப்துல் ரகுமான், *ராப்பிச்சை*, நேஷனல் பப்ளிஷர்ஸ், சென்னை – 17, 2016.

[5] *பாரதியார் கவிதைகள்*, லியோ புக் பப்ளிஷர்ஸ், சென்னை – 600106, ஜூன் 2006.

[6] விளம்பிநாகனார், *நான்மணிக்கடிகை மூலமும் உரையும்*, தஞ்சாவூர் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 2001.

**References**

[1] AbdulRaguman, *Ethu sirukukalin neram*, National Publishers, Chennai-17, June 2005.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

[2] AbdulRaguman, *Kaviaranga Kavithaigal Thoguthi-2*, National Publishers, Chennai -17, First Edition June 2015.

[3] AbdulRaguman, *Sutuviral*, National Publishers, Chennai-17, 1989.

[4] AbdulRaguman, *Rapitchai*, National Publishers, Chennai-17, 2016.

[5] *Paratiyar kavitaikai*, Leo Book Publishers, Chennai - 600106, 2006 June.

[7] Vilampinakanar, *Nanmanikkadikai Mulamum palaiya uraiyum*, Tamil University, Tanjavur, 2001.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# வெ.இறையன்புவின் "வையத் தலைமை கொள்" நூலில் தனிமனித அறங்கள்

## Individual Ethics in V.Iraiyanbu's "Vaiyath Thalamai Kol"

**முனைவர் இரா.மணிமேகலை,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பசும்பொன் திருமுத்துராமலிங்கத்தேவர் நினைவுக்கல்லூரி, கமுதி, இராமநாதபுரம்.

**Dr R. Manimegalai,** Assistant Professor, Departmen of Tamil, Pasupon Thiru Muthuramalinga Thevar Nianivu College, Kamuthi, Ramanathapuram.

ORCiD: https://orcid.org/0000-0003-4732-3758

**DOI: 10.5281/zenodo.5105992**

## Abstract

*In Social development, human beings subject themselves to norms and definitions through culture and civilization. There must be a conflict between human beings that is natural when living socially. That is why they make restrictions in all walks of life to make it better and have been called morals, ethics in the voice of philosophy. Humans become disciplined by becoming orderly and may be useful to the development of society. Virtues are formed and based on how society teaches its subjects. Various literature has insisted on the need for virtues to make a benevolent state. Many comments on individual virtues can be found in the book on the development of leadership qualities, philosophical books and literature. Divine scriptures are also insisting every man become individual. Tamil literature is also a moral source of literature that points out the ultimate need for individuality. V. Iraianbu is an IAS officer known for his good administration and is now the Tamil Nadu Chief Secretary, a noted writer, orator and a multi-faceted personality. His works are always commendable that could develop the spirit of Individuality. This paper focuses on the need of individual ethics and the literary evidence in V.Iraiyanbu's "Vaiyath Thalamai Kol".*

**Keywords:** Society, Individual Ethics, V.Iraiyanbu, "Vaiyath Thalamai Kol.

## முன்னுரை

மனிதச் சமூகம் படிமலர்ச்சியில் மாற்றங்களைச் சந்தித்து வந்திருக்கிறது. பண்பாடும் நாகரிகமும் வளர்ச்சி பெற வளர்ச்சி பெற மனித நடத்தைகளும் ஒழுங்குக்குள் வந்திருக்கின்றன. விலங்கு நிலையில் காய், கனி, கிழங்குகளை அப்படியே தின்று பசியைப் போக்கிய மனிதர்கள் அவற்றை பக்குவப்படுத்தி சமைத்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

சாப்பிடும் நிலைக்கு உயர்ந்த போது சமூகம் நாகரிக நிலையில் வளர்ந்திருந்தது. சமூகக் கட்டுப்பாடுகள், நியதிகள், சடங்காச்சாரங்கள் போன்றன உருவாகிய நிலையில் அவற்றைக் கடைபிடித்து வாழும் மனிதர்கள் சமூகத்தில் வாழ அனுமதிக்கப்பட்டனர். சமூகக் கட்டுப்பாடுகளை மீறுபவர்கள் சமூகத்திற்கு விரோதமானவர்களாகக் கருதப்பட்டார்கள். குடும்பம், அரசு ஆகியவற்றின் தோற்றங்களும் மனிதர்களை மேலும் ஒழுங்குபடுத்தின. தன்னையும், தன் உணர்வுகளையும் அற நியதிகளுக்கு உட்படுத்திக் கொள்ளும் மனிதர்களே சமூகத்தில் மதிப்பு மிக்கோராகக் கருதப்பட்டனர். சமூக மதிப்பென்பது மனிதர்களின் நடத்தைகளை அடிப்படையாகக் கொண்டது. தமிழில் தோன்றிய இலக்கியங்கள் மனிதர்களையும் சமூகத்தையும் சீர்படுத்தும் நோக்கில் உருவானவையாக அற இலக்கியங்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு சமூகத்தின் இயங்கியலும் அச்சமூக மனிதர்களின் செயல்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே அமைகிறது.

ஒரு சமூகத்தில் வாழும் மனிதர்களில் சிலர் செய்யும் தவறுகள் கூட அச்சமூகத்தைப் பற்றிய தவறான எண்ணத்தை ஏற்படுத்தவல்லவையாகும். எனவே அறங்களைக் கடைபிடித்து வாழும் மனிதர்களை உலகோர் புகழுவர். அச்சமூகமும் புகழ்பெறும். மனிதர்கள் கடைபிடித்தொழுகும் அறங்கள் இலக்கியங்கள் காலந்தோறும் கற்பித்து வந்திருக்கின்றன. இப்போதும் கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு தனிமனிதரின் வாழ்வும் அவரவர் செயல்களால் மதிப்பிடப்படுகின்றன. எனவே தனிமனித அறங்கள் இன்றியமையாதனவாகக் காணப்படுகின்றன. அறங்களைத் தற்கால இலக்கியங்கள் பல்வேறு வழிகளில் எடுத்துரைக்கின்றன. இலக்கியத்திலும், தன்னம்பிக்கை கட்டுரைகளிலும் பல உயரிய கருத்துக்களை எடுத்துரைத்த ஆட்சிப்பணியாளர் பணியிலும் சிறந்து விளங்கக் கூடிய இறையன்புவின் நூல்களில் ஒன்றான வையத் தலைமை கொள் என்னும் நூல் பல்வேறு வரலாற்று மனிதர்களின் வாழ்விலிருந்து மனிதர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய அறங்களை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இக்கட்டுரை அந்நூலிலிருந்து தனிமனித அறங்கள் சிலவற்றை கூறுவதாக அமைகிறது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**அறங்கள்**

மனிதர்கள் சூழலைக் கட்படுத்தித் தமக்கு இயைபானதாக மாற்றினர். சமூகத்தில் மனிதர்கள் நடத்தை சார்ந்து பல்வேறு ஒழுங்குகளை ஏற்படுத்திக் கொள்வது பண்பாட்டு அமைப்பில் இன்றியமையாததாகும். ஒவ்வொரு செயலும் ஓர் ஒழுங்கிற்குள் கொண்டு வரப்படும் போது அச்செயல்கள் அனைவரும் கடைபிடிக்கத் தக்கதாக மாறுகிறது. இவை காலப் போக்கில் பழக்கங்களாகவும், வழக்கங்களாகவும் தவிர்க்க முடியாத செயல்களாயின் அறங்களாகவும் வடிவுறுகின்றன. அறம் என்பது கட்டுக் கோப்பினை உருவாக்கிக் கொள்ளுதல் என்னும் பொருளை உடையதாகும்.

“அறம் என்னும் சொல்லிற்குரிய நேரான பொருள் அறுத்துச் செல்வது, வழியை உண்டாக்குவது என்பவையாகும். மனித இனத்தின் நலத்திற்காகவும் முன்னேற்றத்திற்காகவும் மனித சமுதாயம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறியே அறம் என்பது இதனால் பெறப்படுகிறது” (க.த.திருநாவுக்கரசு (க.ஆ), கு.பகவதி (ப,ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.40) என்ற கூற்றின் மூலம் அறம் என்பது மனிதர்கள் தம்மை கட்டுப்படுத்திக் கொள்வதற்காக ஏற்படுத்திக் கொண்ட ஒழுக்க நெறி என்பது புலப்படுகிறது. மேலும், இதனை வாழ்க்கை நெறி என்றும் குறிப்பிடுவர். “இப்படித்தான் செய்ய வேண்டும். இப்படித்தான் வாழ வேண்டும், இன்னாருடன்தான் சேர வேண்டும், இவ்விவற்றைத் தள்ள வேண்டும் என்ற ஒரு வரையறுத்த வரையறையை கட்டுப்பாட்டைக் கற்பிப்பதே அறம்” (பெ.மாதையன், செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.187) என்று வாழும் நெறிகளைக் கூறுவதை அறம் என்கிறார் பெ.மாதையன். இவ்வறங்களைக் கடைபிடிக்க வேண்டிய தேவை மனிதனுக்கும் அவனை கண்காணித்து நல்வழியில் நடத்த வேண்டிய தேவை சமூகத்திற்கும் இருக்கிறதெனலாம்.

**தனிமனித அறங்கள்**

சமூக வாழ்வில் ஒவ்வொரு மனிதரும் தனித்தனித் தீவாகவே கருதப்படுகின்றனர். ஒவ்வொருவருக்கும் உள்ள மனநிலைக்கேற்றவாறு அவர்தம் செயல்கள் அமைகின்றன. சமூக அமைப்பில் பொதுவான அறங்கள் காணப்படுவதைப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

போல தனிமனிதர் ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டிய அறங்கள் காணப்படுகின்றன. தனிமனித அறங்கள் ஒரு மனிதனின் மதிப்பினை உணரச் செய்வனவாகும். சமூகத்தில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் ஒரே மாதிரி சிந்திப்பதோ செயல்படுவதோ இல்லை. சிலர் மாறுபடும் புள்ளிகள் ஏற்படுகின்றன.

"சமுதாயம் எதிர்பார்க்குமளவிற்கு முழுவதுமாக மக்கள் நன்னிலையில் செயல்படுவதில்லை. அதற்குக் காரணம் சில சூழல்களில் தனி மனிதரின் விழுமியங்கள் அல்லது சமுதாய நெறிமுறைகள் அவருக்கு முரண்பட்டதாக அமைந்து விடும்" (பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.163) என்ற கூற்று தனிமனிதர் சமூகத்தோடு முரண்படும் சூழல்களை எடுத்துக் கூறுகிறது. இவ்வாறு தனிமனிதர் தமக்கான அறங்களைக் கடைபிடித்தொழுகும் போதுதான் சமூகத்தோடு அவர் இணக்கமான நிலையில் செல்ல முடியும் எனலாம். எனவே தனிமனிதரும் சமூகமும் ஒன்றிணைந்து செல்வதற்கான சூழல்களை ஒவ்வொரு தனிமனிரின் நடத்தையும் தீர்மானிக்கின்றது எனலாம்.

**வையத் தலைமைகொள் நூலில் அறங்கள்**

வெ.இறையன்பு பல்வேறு தன்னம்பிக்கை நூல்களையும், மேலாண்மை சார்ந்த நூல்களையும், ஆட்சிப்பணித் தேர்வுக்கான வழிகாட்டி நூல்களையும், நாவல்களையும், கவிதைகளையும் எழுதியுள்ளார். இதில் வையத் தலைமை கொள் என்னும் தலைமைப் பண்பினை வளர்த்துக் கொள்வதற்கான சிந்தனைகளை வெளிப்படுத்திய நூலாக விளங்குவதாகும். இந்நூலில் ஒவ்வொரு மனிதரும் கற்றுக் கொள்ள வேண்டிய தனிமனித அறங்கள் பலவற்றை வரலாற்று நிகழ்வுகளோடும் இலக்கியச் செய்திகளோடும் எடுத்துரைக்கிறார்.

**வாய்மை**

உண்மையாயிருத்தலே மனிதர்க்கழகு மானுடம் தழைப்பதும் இத்தகைய உயரிய பண்புகளால்தான். ஒருவரை அளவிடும் போது அவருடைய செயல்களில் உண்மைத் தன்மை இருக்கும் என்பதைக் கொண்டே அளவிடுகின்றனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பொய்மையைத் தன் நடவடிக்கையாகக் கொண்டவரை உலகோர் தூற்றுவர் எனவே தனிமனித அறங்களில் இன்றியமையாதது வாய்மையாகும்.

"சொல்லிலும் செயலிலும் உண்மையையும் கிறிஸ்து போற்றினார் உள்ளத்தில் உண்மையில்லாது வெளியே வழிபாட்டையும் அறங்களையும் செய்வதைக் கண்டித்தார். வள்ளுவரும் மனத்தோடு வாய்மை மொழிதலையும் உள்ளத்தாற் பொய்யாதொழுகுதலையும் போற்றினார்" (காமாட்சி சீனிவாசன், திருக்குறளும் விவிலியமும், ப.282) என்ற கூற்றானது பொய்மைத் தவிர்த்து உண்மையைக் கடைபிடித்தொழுவதன் இன்றியமையாமையை வெளிப்படுத்தி அமைகிறது. வாய்மையோடு இருத்தல் அல்லது உள்ளத்தில் உண்மையோடு இருத்தல் தன்னை நம்பியவர்களுக்கு நேர்மையாக இருத்தல் என்பதை தலைமைப் பண்பின் ஒரு கூறாக எடுத்துக் கூறுகிறார் இறையன்பு. முகம்மது நபியின் வாழ்வை அதற்கு சான்றாக வெளிக்காட்டுகிறார்.

> **நபிகள் நாயகமாக ஆவதற்கு முன்பே அவர் தூய்மையுடன் துலங்கியவர். சிரியா சென்று வாணிபம் செய்துவர கதீஜா அம்மையார் அனுப்பிய போது அவர் பொருட்களை விற்று முதல் பணத்தை ஒரு காசும் பாக்கியில்லாமல் அவரிடம் ஒப்படைத்து வரவு செலவு கணக்கும் ஒழுங்காகச் சமர்ப்பித்து அவருடைய அன்பையும் மதிப்பையும் பெற்றவர். வறுமையிலும் செம்மை அவர் வாழ்வில் எப்போது நெறியாகத் தழைத்தோங்கியது (வெ.இறையன்பு, வையத் தலைமைகொள், ப.196)**

என்ற கதை மூலம் உண்மையுடன் நடந்துகொள்வது வாழ்விற்கு பெரிதும் துணை செய்வதாகக் கூறுகிறார். வாய்மை என்பது உள்ளத்துத் தீமையில்லாத செயலைச் செய்தலாகும். "ஒரு தடவை அண்ணல் அவர்களை ஒருவர் அன்னமளித்து உதவுமாறு வேண்டினார். அண்ணல் அவர்களின் வீட்டில் அன்றிரவு உண்ணவில்லை. அவர் ஓர் ஆதரவாளரை அழைத்து அவரை வீட்டிற்கு அழைத்துச் செல்லுமாறும், அங்கு உணவளிக்குமாறும் கூறினார். அவரும் அழைத்துச் சென்றார். வீட்டிலுள்ள குழந்தைகளுக்கு மட்டும் போதுமானதாகவே அங்கு உணவு இருந்தது. அவர் விளக்க

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

அணைத்து விட்டு அதனை விருந்தினர் முன் கொண்டு வந்து வைத்துச் சாப்பிடுமாறு கூறி அவரும் அவருடைய மனைவியும் அவ்விருந்தினருடன் இருந்து உணவருந்துவது போலப் பாசாங்கு செய்து வெறும் வாயை மென்று கொண்டிருந்தார்கள்" (வெ.இறையன்பு, மேலது, ப.197) இந்நிகழ்வில் அவர்கள் உண்மையில் உண்ணவில்லை. ஆனால் ஆனால் வாய்மை என்பது பொய்மை இடத்தும் பொய்மை தீர்ந்த நன்மை பயக்குமெனனின் என்னும் வள்ளுவரின் கூற்றினை இந்நிகழ்விற்கு சான்றாகக் கொள்ளலாம். ஒருவருக்கு நன்மை பயக்குமெனனில் பொய்யாய் நடிப்பதில் தவறில்லை. அதுவும் வாய்மையெனவே கொள்ளப்படும் என்பதை வெளிப்படுத்துவதாக நபிகளின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சி உண்மையாய் இருத்தலை வெளிப்படுத்துவதற்குச் சான்றாக அமைகிறது. உண்மையாக நடந்து கொள்ளுதலே மனிதர்க்கு சிறந்த மதிப்பைப் பெற்றுத்தரும் என்பதை கதைகள் மூலம் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

**பிறர்க்கு உதவுதல்**

செல்வ வளம் கொண்டிருந்தால் அதனைப் பிறர்க்கு அளிப்பதில் தான் நன்மை இருக்கிறது. ஊர்நடுவில் உள்ள மரம் பழுத்தது போல (குறள்.216) என்னும் வள்ளுவப் பெருந்தகையின் கூற்றிற்கிணங்க செல்வத்தைச் சேர்த்துக் கொண்டே பிறர்க்கு அளிக்காமல் இருப்பதால் அச்செல்வம் பயனற்றுப் போகும் என்பதை அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. செல்வத்துப் பயனே ஈதல் (புறம்.189) என்னும் புறநானூற்று அடியும் இதனை வெளிப்படுத்துகிறது. பிறர்க்குப் பயன்தரும் வகையில் செல்வத்தைப் பகிர்ந்தளித்தலை நூல்கள் பறைசாற்றுகின்றன. பிறர்க்கீயாத செல்வம் பண்பில்லாதன் பெற்ற செல்வத்திற்கு ஈடானது என்பதை, "பண்பில்லா மக்களிடத்துச் சேர்ந்துள்ள பெருஞ்செல்வமே கெடும் எனின்" (கி.ஆ.பெ.விசுவநாதன், திருக்குறள் கட்டுரைகள், ப.54) என்னும் கூற்று வெளிப்படுத்துகிறது. பிறர்க்கு உதவுதல் என்பதை விருந்தோம்பல் வழியாகவும் துயர்படும் காலத்தில் உதவி செய்தலாகவும் மனிதர்கள் பின்பற்ற வேண்டும் என அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. இயேசுவின் பொன்மொழிகளில் ஒன்று எதை பிறரிடம் எதிர்பார்க்கிறாயோ அதையே பிறர்க்கும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

செய் என்பதாகும். இதனையே தனது நூலில் இயேசுவைப் பற்றிய செய்திகளைக் கூறும் போது வெளிப்படுத்துகிறார்.

“மற்றவர்களிடம் எதை எதிர்பார்க்கிறாயோ அதையே அவர்களுக்கும் செய் என்பது தங்க விதி. அது ராபி ஹில்லெல் மூலம் யூதர்களிடமும் கன்ஃபூசியஸ் மூலம் சீனர்களிடமும் மகாபாரதம் மூலம் இந்திய மரபிலும் புழங்கி வந்த ஆற்றுப்படுத்தும் செய்திதான்” (வெ.இறையன்பு.117) என்று பிறர்க்கு உதவுதல் அல்லது பிறர் நலனை விரும்புதல் என்பது ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறு இறைத்தூதுவர்களால் சொல்லப்பட்டுள்ளது என்கிறார். இது போல் பிறர்க்கு உதவி செய்யும் போது விளம்பரம் கூடாது என்பதையும் இயேசு வழி எடுத்துரைக்கிறார். “நீங்கள் தர்மம் செய்யும் போது உங்கள் வலக்கை செய்வது இடக்கைக்குத் தெரியாதிருக்கட்டும் என்கிறார் இயேசு.” (வெ.இறையன்பு, ப.177) என்ற கூற்றும் பிறர் அறியாமல் உதவிகள் செய்ய வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுவதாக அமைகிறது. பிறர்நலன் பாராட்டுதல் தம்மைப் போல் பிறரை நேசித்தல் என்பதன் ஒரு பகுதியாகும் எனக் குறிப்பிடுகிறார்.

**துணிவுடைமை**

மனிதர்கள் தம் வாழ்வில் கடைபிடிக்கும் செயல்பாடுகளில் அச்சத்தோடு செயல்பட்டால் அது தோல்வியில்தான் முடியும். ஒவ்வொரு மனிதனுக்கும் துணிவு மிக இன்றியமையாததாகும். தோல்வியே நேரிடினும் துணிவுடன் செயலில் இறங்க வேண்டும். துணிவுடைமை அதிகாரத்தில் வள்ளுவர் தனிமனிதப் பண்புகளில் ஒன்றாக துணிவினை எடுத்துரைக்கிறார். இதனை தூக்கம் கடிந்து செயல் (குறள்.668) என்ற குறள் கூறுகிறது. “மனங்கலங்காமல் துணிந்து ஏற்றத்தொழிலைச் சோர்வில்லாமல் காலந்தாழ்த்தாமல் செய்துமுடிக்க” (செ.கணேசலிங்கன், பகவத்கீதையும் திருக்குறளும், ப.81) என்று செ.கணேசலிங்கன் எடுத்துக்காட்டுகிறார்.

துணிச்சலான செயல்களைத் தம் வாழ்வில் கடைபிடித்தவர்கள் பற்றி நூலில் குறிப்பிடுகிறார். இந்தியாவின் வடபகுதியை ஆட்சி செய்தவர்களான மௌரியப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பேரரசர்களில் ஒருவரான சந்திர குப்தர் அவருடைய காலத்திய சூழலை எதிர்கொள்வதில் அசாத்தியத் துணிச்சலை வெளிப்படுத்தினார் எனக் கூறப்படுகிறார்.

**அப்போது சட்டத்தின் ஆட்சி நடந்து கொண்டிருந்ததாகவும் மக்கள் விதிகளை மதித்து நடந்ததாகவும் மெகஸ்தனீஸ் எழுதினார். ஆயினும் சந்திர குப்தர் அவருடைய பாதுகாவல் பகுதியில் பெண்களை மட்டுமே அனுமதித்தார். படுக்கும் அறைகளைப் பாதுகாப்புக் கருதி ஒவ்வோர் இரவும் மாற்றிக் கொண்டே இருந்தார்….ஒரு நாடு பேரரசாக விரிந்திருக்கும் போது பல முன்னேற்றங்கள் சாத்தியம். நிர்வாகம், திட்டம், மேம்பாடு, சட்டம், ஒழுங்கு, வர்த்தகம், போக்குவரத்து போன்றவற்றில் முழுவீச்சில் கவனத்தை செலுத்த முடியும். குறு நாடுகளாக பிரிந்திருக்கும் போது கூட்டணிக் கட்சி ஆட்சியைப் போல சகர நேரமும் இருப்பைக் காப்பாற்றிக் கொள்வதே இலக்காக சமரசங்கள் செய்ய வேண்டியிருக்கும். அவ்வகையில் அதற்கான முதற் கல்லை எடுத்து வைத்தவர் மெரியர்… சந்திர குப்தர் இவ்வளவு சாதனைகளை செய்ததற்கு அவருடைய துணிச்சலும் அசையாத வைராக்கியமுமே காரணம்…. ரோமாபுரி சரித்திர ஆசிரியர் ஜஸ்டின் அலெக்ஸாண்டரின் தளபதிகளோடு சந்திரகுப்தர் படையெடுத்துச் சென்ற போது காட்டுக் களிறு ஒன்று திடீரென்று அவர் முன்னே வந்து நின்றது. அதை சந்திர குப்தர் அடக்கி, அதன் மீது கம்பீரமாக ஏறி அமர்ந்து போருக்குச் சென்றார் (வெ.இறையன்பு, ப. 65)**

என்று சந்திரகுப்தரது காலத்திய சூழலில் அவர் பல இன்னல்களையும் எதிரிகளையும் கடந்து வந்திருக்கிறார் என்றும் அவரது அசாத்திய துணிச்சலே அவரது வெற்றிக்குக் காரணமென்றும் குறிப்பிடுகிறார்.

சீனாவில் ஜாவா என்ற நாட்டின் மன்னர் வூலிங். அவருடைய ஆட்சியின் போது பெரும் பிரச்சினைகளைச் சந்தித்தார். நாடோடிக் குதிரை வீரர்கள் அட்டகாசம் மிகுதியாக இருந்தது. அவர்களை எதிர்த்து ஜாவா நாட்டு ராணுவம் எதுவும் செய்ய முடியவில்லை. வூலிங் இப்பிரச்சினைக்கு என்ன செய்வதென்று யோசித்தார். ராணுவ வீரர்கள் வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு சண்டையிடப் போனார்கள். இது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

குதிரைகளுக்குக் கூட ஏற்க முடியாத விசயமாக இருந்தது. எனவே துணிச்சலும் கம்பீரமும் உடைய உடைகளைத் தைத்து ராணுவ வீரர்களுக்குக் கொடுத்தார். "துணிச்சலும் கூர்மையும் கொண்ட குதிரை வீரர்களைத் தயார் செய்தார். குதிரையின் வேகத்திற்கு அசைந்து கொடுத்து, ஆனால் அபரிதமாகக் குறி தவறாமல் அம்பு எய்யும் பயிற்சியை அவர்களுக்கு அளித்தார்..." (வெ.இறையன்பு, ப.74) என்று உடையை மாற்றி வீரர்களுக்கு அச்சத்தைப் போக்கி பயிற்சி அளித்து பின்பு நாடோடிக் குதிரை வீரர்களை வெற்றி கொண்டார். எதிரிகளை வெல்வதற்கு அதற்குரிய வகையிலான துணிச்சல் வேண்டும் என்பதையே இக்கதை கூறுகிறது.

ரோமாபுரியை ஆண்ட மன்னர்கள் அங்காரத்தால் கொக்கரித்தனர். அவர்களை அடக்க வேண்டும் என துணிச்சல் கொண்டார் ஹான்னிபாலின் தந்தை ஹாமில்கர். ஹான்னிபால் ஒருபோதும் ரோமாபுரியிடம் அடிபணியக் கூடாது என்று கூறி வளர்த்தார். ஹான்னிபால் பல்வேறு நாடுகளுடனான வெற்றியடைந்தான். அவனது செயல்கள் மக்களிடம் அச்சத்தை உருவாக்கும் அளவிற்கு இருந்தது. "சிறுவனாக இருக்கும் போதே போரோடு வளர்ந்தவன் ஹான்னிபால். அவனுக்கு வாளின் ஓசையே பூபாளம், ஈட்டியின் வீச்சே கல்யாணி, முரசு ஒலியே முகாரி, புரவிகளின் கனைப்பே புல்லாங்குழல் ஓசை. அவன் சின்ன வயதில் கத்தார்ஜைச் சுற்றியிருக்கும் மலைகளில் வேட்டையாடச் சென்றான். அப்போது கழுகு ஒன்றின் கூட்டைக் கண்டான். அந்தக் கழுகை எடுத்து நெஞ்சோடு அணைத்தான். அந்த ராட்சதக் கழுகு அவன் நெஞ்சைக் கூரிய நகங்களால் கீறியது. அந்த வலியை அவன் சட்டை செய்யவில்லை. உடனே அது அலகால் குத்தியது, கொத்தியது, வழியும் ரத்தத்திலும் அவன் பிடியைத் தளர்த்தவில்லை. வேறு வழியின்றி கழுகு பணிந்தது. பின்னர், அவன் அதை விடுவித்தான். அசராத துணிச்சலும் அசையாத மனமுமே தலைமையைத் தழைக்க வைக்கின்றன" (வெ.இறையன்பு, ப.89) என்ற கூற்றின் வழி ஹான்னிபாலின் அளப்பரிய வெற்றிக்கு அவனுடைய துணிச்சல் மிக்க செயல்பாடுகளே காரணம் என்பதைக் கூறுகிறது. துணிச்சல்தான் ஒரு மனிதனை வாழ்வில் வெற்றி பெறச் செய்யும் கருவியாகும் என்பதை கூறுகிறார் ஆசிரியர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com


**அன்புடைமை**

மனித உயிர்களை உணர்வால் பிணிக்கவல்லது அன்பாகும். ஒருவருக்கொருவர் அன்பு கொள்வதால்தான் உலகில் மனிதர்களிடையே நல்ல பண்புகள் மேம்படைகின்றன. அன்பினை செலுத்துவதற்கு காரணம் தேடக் கூடாது. அன்பில்லாதவரை என்புதோல் போர்த்திய உடம்பு என்று வள்ளும் குறிப்பிடுகிறது. அன்பு எப்போதும் பிறரை ஈர்க்கவல்லது. "ஒத்த அன்புடையவர்களால் உருவாகும் அன்பு வாழ்க்கை அன்புடைமையாகும். இருப்பினும் இவ் அன்பு வாழ்க்கைக்கு மட்டுமின்றி அதனையும் தாண்டிச் செலுத்தப்பட வேண்டிய ஒன்று" (தி.மகாலட்சுமி (க.ஆ), சா.கிருட்டிணமூர்த்தி (ப.ஆ), இக்கால உலகிற்குத் திருக்குறள், ப.287) என்று அன்பானது குடும்பத்திற்குள் மட்டுமின்றி அதனையும் தாண்டிச் செல்லும் ஆற்றலுடையது.

உலக மக்களை ஒரே கண்ணியில் இணைக்கக் கூடியது எனக் கொள்ளலாம். பௌத்தத் தருமத்தை ஏற்றுக் கொண்டு நாட்டில் பல்வேறு சீர்திருத்தங்களைச் செய்து மக்களை அன்புடன் காத்துக் கொண்டவர் வரலாற்றில் அசோகர் என்னும் பேரரசர். அவர் போதி மரத்தின் மீது அன்பாக இருக்கக் கண்டு அவருடைய மனைவி அந்த மரத்திற்கு விஷம் வைத்து வாடி இறந்து போகச் செய்தாள். பின்பு அரசர் அதனைக் கண்டு பிடித்து அவளைத் தண்டித்தார் என்பதாகக் கூறப்படுவதுண்டு இதனை,

> **அசோகரின் மனைவியரில் ஒருத்தி நித்யரக்ஷிதா தந்திரமும் குயுக்தியும் கொண்டவள். போதி மரத்தின் மீது அசோகருக்கிருந்த அன்பைப் பார்த்து பொறாமை கொண்டு அதற்கு விஷம் வைக்க முயன்றாள். அம்மரம் வாடி இறந்ததாகவும், அவளை அசோகர் கடுமையாக தண்டித்ததாகவும் வரலாற்றுப் பக்கங்கள் விவரிக்கின்றன" (வெ.இறையன்பு, ப.84)**

என்று அன்பினைக் கண்டு பொறாமை கொள்ளும் அளவிற்கு அசோகர் ஒரு மரத்தின் மீது அன்பு செலுத்தினார் என்பது மனித நிலைக்கு மேலான உணர்வைக்காட்டுகிறது. "அவரைப் போல மனிதர்களை, மரங்களை, விலங்குகளை, தருமத்தை நேசித்த ஒருவர் இந்திய வரலாற்றில் என்று அல்ல, உலக வரலாற்றிலேயே உதயமானது கிடையாது"

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

(வெ.இறையன்பு, ப.85) என்று சக உயிர்களை நேசித்த அசோகரின் அன்பு வெளிப்படுத்தப்படுகிறது.

சரித்திர நாயகர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பண்பு மேலோங்கியிருக்கும் அதில் அசோகருக்குக் கருணை உணர்வு மேலோங்கியிருக்கிறது என்கிறார் (வெ.இறையன்பு, ப.87). ஜூலியஸ் சீசரின் நேசத்திற்குரிய இரண்டாவது மனைவி கர்னீலியா. சின்னா என்பவரின் மகளான கர்னீலியாவை விவாகரத்து செய்தால் அரச பதவி தருவதாகக் கூறிய சுல்லாவின் பேச்சிற்கு இணங்காமல் வேறு படையில் இணைந்து கொண்டான். நேசத்திற்குரிய மனைவியை பதவிக்காக பிரியாத அன்பினை உடையவன் என்பதைக் கூறுவதாக அமைகிறது. இதனை,

> **ஸீஸரின் இரண்டாவது மனைவி கர்னீலியா. சின்னா என்ற முக்கியப் பிரமுகரின் மகள். அவளை உயிருக்கு உயிராக நேசித்தான் ஸீஸர். சின்னாவை வீழ்த்தி, சுல்லா என்பவன் ரோமாபுரியின் சர்வாதிகாரியாக ஆனான். அவன் ஸீஸருக்கு முக்கியப் பொறுப்பை ஒப்படைக்க நிபந்தனையொன்றை விதித்தான். அது கர்னீலியாவை விவாகரத்து செய்ய வேண்டும் என்பதுதான். ஆனால் அதற்கு சம்மதிக்காத ஸீஸர் ரோமன் ஆசியாவின் மார்கஸ், தெர்ம்ஸ் என்பவனுடைய படையில் இணைந்தான் (வெ.இறையன்பு, ப.99)**

என்ற கதை அன்பினை எத்துனை விலைகொடுத்தாலும் பிரித்து விட முடியாது என்பதற்கு சான்றாக அமைகிறது. அன்பினை செலுத்தும் மனிதர்கள் உயர்வானவர்களாக மாறி விடுகிறார்கள் என்பதை வரலாற்றுச் சம்பவங்கள் வழி எடுத்துரைக்கிறார்.

**இன்னா செய்யாதிருத்தல்**

பிறர்க்குத் தீங்கிழைக்காத மனிதரே உலகில் போற்றுதற்குரியவராவார். பொருளுக்காகவோ தம் இன்பம் கருதியோ பிறருக்குத் துன்பத்தை ஏற்படுத்தக் கூடாது. "பொருட்பயன் கருதியோ, உள்ள மகிழ்வு கருதியோ எந்தவொரு உயிர்க்கும் இன்னா செய்யாமலிருத்தலே இன்னா செய்யாமை ஆகும்" (சு.மாதவன், தமிழில் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.128) என்ற கூற்றிற்கிணங்க

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

பிறர்க்குத் தமது மகிழ்வு கருதி துன்பமிழைக்காதிருத்தல் வேண்டும் மனிதப் பண்புகளில் சிறந்தவொன்றாக இது கூறப்படுகிறது. பிற உயிர்களுக்குத் துன்பம் தருவதை தவிர்த்தல் வேண்டும். போர்கள் வீரர்களுக்கு இடையில் நடைபெறும் ஒன்றானதால் பலம் உள்ளவர் வெல்வர். ஆனால் அதனால் பொதுமக்கள் துன்புறுதல் கூடாது என்பதை வலியுறுத்தும் போர் முறைகள் உள்ளன. ஆனால் போர்களே கூடாது என்ற முடிவினை வரலாற்றில் எடுத்தவராக அசோகர் காணப்படுகிறார். பௌத்த மதத்தின்பால் பற்று கொண்டு அகிம்சையை முன்னெடுத்தார்.

கலிங்கத்துப் போருக்கு முன்னதாகவே பௌத்த தர்மத்தை கண்டடைந்தார் என்பதைக் கூறுகிறார் வெ.இறையன்பு. சந்தகிரிகா என்னும் சித்திரவதை செய்துகொல்லும் ஒருவனுக்காக ஒரு கட்டிடத்தை கட்டித் தருகிறார். தண்டனைக்குரிய கைதிகளை அந்த கட்டிடத்தில் வைத்து சித்திரவதை செய்து கொல்வதுதான் அவனது வேலை. அப்போது அந்தக் கட்டிடத்தின் அருகே ஒரு பௌத்தத் துறவி வருகிறார். அதனுள் நுழைந்து விடுகிறார். அவரை கொதிக்கும் சட்டியில் போட்டு விடுகிறான்.

> **அவரோ தியான நிலையை அடைய எந்தப் பாதிப்புமின்றி உச்சபட்ச பரவசத்தை அடைகிறார். பத்மாசனத்தில் அமர்ந்து ஏதோ குளிர்ந்த தடாகத்தில் இருப்பது போன்று சலனமின்றி இருக்கிறார். பிறகு அவர் அங்கு வந்த அசோகரை மனம் மாற்ற உயரே எழுந்து அந்தரத்தில் புவியீர்ப்பு விசையை மீறித் தோன்றுகிறார். இது போன்ற சித்ரவதைக் கூடத்தை அமைத்திருக்கிறாயே என்று கண்டிக்கிறார். கசப்பாக இருந்தாலும் உண்மை கதிகலங்க வைத்து விடுகிறது. அசோகர் மனம் மாறி பௌத்தத்தில் இணைகிறார். சமுத்ராவை விடுவிக்கிறார். கூடத்தை அழிக்க உத்தரவிடுகிறார்" (வெ.இறையன்பு, ப. 83)**

என்று மனிதர்களை சித்ரவதைக்கு உட்படுத்தும் செயலுக்கு முடிவு ஏற்பட்டு பௌத்த நெறி தழுவி பிற உயிர்களை துன்புறத்தாத நெறி நின்று ஆட்சி புரிகிறார். மக்களிடம் வரி வசூலிக்கும் போது அவர்களை வருத்தாமல் வசூலிக்க வேண்டும் என புறநானூறு கூறுவதை எடுத்துரைக்கிறார் "பெரிய திட்டங்களை செய்படுத்தப் பணம் வேண்டும். அதற்கு மக்களிடம் வருத்தாமல் வரி வசூலிக்க வேண்டும்"

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

(வெ.இறையன்பு.127) என்று பிறரைத் துன்புறுத்துவதை ஒவ்வொரு மனிதரும் கைவிட வேண்டும் என தன் நூலில் பல கதைகள் வழி எடுத்துரைக்கிறார்.

**சினம் பாராட்டாமை**

மனிதரைக் கொல்லும் கொடிய நோய்களுள் சினமும் ஒன்றாகும். தன்னை மட்டுமல்லாது தன்னைச் சார்ந்தவர்களையும் கொல்லக் கூடியது என இதனை திருக்குறள் குறிப்பிடுகிறது. அறிவுடையோர் சினம் கொள்ள மாட்டார்கள் என நாலடியா குறிப்பிடுகிறது. "ஆய்ந்து அமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும் காய்ந்து அமைந்த சொல்லர் கறுத்து" (நாலடி.7-3) என்ற பாடல் இதனைக் குறித்து அமைகிறது. "அறிவில்லாத ஒருவன் நா காக்காமல் பேசும் கடுஞ்சொல் அவனையே விடாமல் தேடிச் சென்று சுடும். இடைவிடாமல் அரிய நூல்களை ஆராய்ந்து கேள்வி அறிவால் உயர்ந்து நிற்போர் சினமுற்றுச் சினமொழிகளை மற்றவர் மேல் எச்சமயத்தும் சொல்லார்" (க.ப.அறவாணன் (உ.ஆ), நாலடியார், ப. 97) என்ற கூற்று சினம் கொள்ளாதவர்கள் பற்றிய நன்மதிப்பைப் பற்றிக் கூறுகிறது. சினம் மனிதர்க்கு விரோதி என்பதால் பழிக்குப் பழி என்னும் மனப்பான்மை கூடாது,

> **கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் எனக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். உங்களை வலது கன்னத்தில் அறைபவருக்கு மறு கன்னத்தையும் காட்டுங்கள் என்கிற அவருடைய இந்த வாசகம் காந்தியடிகளிடம் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. அவருடைய அகிம்சைக் கோட்பாட்டை வடிவமைக்க உதவியது. (வெ.இறையன்பு, ப. 117)**

என்று சினத்தினால் ஏற்படும் அழிவினை மையமாகக் கொண்டே பிறரை நேசித்தல் என்னும் செயல்பாட்டை பெரியோர் முன்னெடுத்தனர் எனக் குறித்துக் காட்டுகிறார். சினம் ஒருவருடைய புகழை மங்கச் செய்து விடும். "ஒரு தேநீரைக் கூட அடுத்தவர் காசில் அருந்தாதவர்கள், ஒரு போதும் விளம்பரம் தேடாத விற்பன்னர்கள், இத்தனையும் இருந்தாலும் அவர்கள் அதிகம் பேசப்படாததற்குக் காரணம் அவர்கள் அதிகம் பேசியதுதான். கோபம் வரும் போது குற்றால அருவி போல கொட்டுகிற கோபச் சொற்களே அதற்குக் காரணம்" (வெ.இறையன்பு, ப.119) என்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கோபத்தினால் புகழ் இழப்பதைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கோபம் மனிதரின் நிம்மதியையும், புகழையும், உயிரையும் கூட கொல்லக் கூடியது என்பதை சுட்டுகிறார் வெ.இறையன்பு.

**முடிவுரை**

பண்பாட்டுவாழ்வில் மனிதர்கள் அறத்தைக் கடைபிடித்து வாழ வேண்டியது இன்றியமையாததாகும். ஒவ்வொரு மனிதரும் சமூகத்தோடு இயைந்து வாழ சமூகம் விதிக்கின்ற நியதிகளைக் கடைபிடித்தே ஆக வேண்டியுள்ளது. அறங்கள் சமூக வாழ்வில் படிப்படியாக வளர்ச்சி பெற்ற மனித நடத்தைகளை ஒழுங்குபடுத்தும் சிந்தனைகளாகும். ஒவ்வொரு தனிமனிதரும் கடைபிடித்தொழுகும் முக்கியமான அறங்களில் சிலவற்றினைக் குறித்து இறையன்புவின் நூலில் உள்ள தலைமைப் பண்புகளை வளர்த்துக் கொள்வதற்கான கதைகள் மூலம் அறிந்து கொள்ள முடிந்தது. வரலாற்றின் மனிதர்கள் பல்வேறு அறச் செயல்களின் மூலம் தங்களை வெளிப்படுத்திக் கொண்டார்கள். வாய்மையைப் போற்றுதல் என்பது மனிதர்களின் இன்றியமையாத நடத்தையாகும். பிறர்க்கு உதவுதல் அதாவது பிறர் நலன் பாராட்டுதல், தம்மைப் போல் பிறரை நேசித்தல் என்பதன் அடிப்படையைக் கொண்டது. துணிச்சலான நடவடிக்கைகள் கொண்டிருத்தல்தான் ஒருவருக்கு வெற்றியைத் தேடித் தரும் என்பதை வரலாற்றிலிருந்து விளங்கச் செய்கிறார். அன்பு மனிதர்கள் அனைவருக்கும் இணைப்புச் சங்கிலியாக இருக்கிறது. அன்பினை யாரும் விலைகொடுத்து வாங்கிட முடியாது. ஒவ்வொரு உயிர் மீதும் அன்பினை வெளிப்படுத்த வேண்டும். அது போல சினம் பாராட்டக் கூடாது. அது மனிதரின் நிம்மதியையும் புகழையும் கெடுத்து விடும் என்பன போன்ற அறங்களுக்கான கதைகளையும் கருத்துக்களையும் நூல் முழுவதும் எடுத்துரைக்கிறார் வெ.இறையன்பும்.

**துணைநூற்பட்டியல்**

[1] வெ.இறையன்பு, *வையத் தலைமைகொள்*, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

சென்னை, 2018.

[2] க.த.திருநாவுக்கரசு (க. ஆ), கு.பகவதி (ப. ஆ), *திறனாய்வு அணுகுமுறைகள்*, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2007.

[3] பெ.மாதையன், *செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும்*, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2011.

[4] பக்தவத்சலபாரதி, *பண்பாட்டு மானிடவியல்*, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2009.

[5] காமாட்சி சீனிவாசன், *திருக்குறளும் விவிலியமும்,* பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1988.

[6] கி.ஆ.பெ.விசுவநாதன், *திருக்குறள் கட்டுரைகள்,* பாரி நிலையம், சென்னை, 1999.

[7] செ.கணேசலிங்கன், *பகவத்கீதையும் திருக்குறளும்,* குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, 2003.

[8] தி.மகாலட்சுமி (க.ஆ), சா.கிருட்டிணமூர்த்தி (ப.ஆ), *இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி -3,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

[9] சு.மாதவன், *தமிழில் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும்*, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2017.

[10] க.ப.அறவாணன் (உ.ஆ), *நாலடியார்*, தமிழ்க்கோட்டம், அமைந்தகரை, சென்னை, 2010.

## References in English

[1] V.Iraiyanpu, *Vaiaththalaimai kol*, New Century Book House (P) Ltd, Chennai, 2018.

[2] K.D. Thirunavukarasu (Author of Artifcle.), K. Bhagwati (Ed.), *Thiranaivu Aunugumuraikal*, Ulaga Tamilaraichi Niruvanam , Chennai, 2007.

[3] P. Madhayan, *Classical Literature Period and Concept*, New Century Book House (P) Ltd, Chennai, 2011.

[4] Bhagwatsalabharati, *Cultural Anthropology*, Meyyappan Publication, Chidambaram, 2009.

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[5] Kamatchi Srinivasan, *Thirukkuralum Biblelum,* Publishing Department, Madurai Kamaraj University, Madurai, 1988.

[6] K.A.P. Viswanathan, *Thirukkural Essays*, Paari Nilayam, Chennai, 1999.

[7] S. Ganesalingan, *Bhagavad Gitaiyum Thirukkuralum*, Kumaran Publishers, Chennai, 2003.

[8] T.Mahalakshmi (Author of Article), S.Kiruttinamoorthy (Ed), *Ikkala Ulakirku Thirukkural Volume-3*, Ulaga Tamilaraichi Niruvanam, Chennai, 2004.

[9] S. Madhavan, Tamil Ara Ilakkiangalum Buddhis and Jains Arangalum, New Century Book House (P) Ltd, Chennai, 2017.

[10] K.P. Aravanan (U.A.), *Naladiyar*, Tamilkottam, Aminthakarai, Chennai, 2010.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியத்தில் அரசர்களின் முரண் மரபுகள்

## Kings and their Contradictory Traditions in Sangam Literature

**ல.கு.சு.இராஜ்குமார்,** முனைவர்பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்-632115.
**L.K.S.Rajkumar, Ph.D**. Research Scholar, Department of Tamil**,** Thiruvalluvar University**,** Vellore – 632115.
ORCiD: https://orcid.org/0000-0003-3819-8959
**முனைவர் ம.செந்தில்குமார்,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர் -632115.
**Dr.M.Senthilkumar,** Associate Professor, Department of Tamil, Thiruvalluvar University, Vellore – 632 115.
ORCiD: https://orcid.org/0000-0003-0760-8046
**DOI: 10.5281/zenodo.5106024**

## Abstract

*During the Sangam period, Tamil Nadu was ruled by many kings. Among them were the three triumvirate kings; the Cheras, the Cholas and the Pandyas. The king has a oath of doing his duty to protect his country and his people. Although there are various special systems in the reign of the king there are a few contradictions with the neighbouring countries. There are lots of wars among the Tamil kings and are registered by the Sangam poets in Sangam Literature. From the sources, one can find that they have followed certain traditions with the aim of understanding the war and destroying the hostile country and plundering their resources to mitigate their power or to destroy them completely. Hence, the study is set to explore the issues through the facts from the literary evidences.*

**Keywords:** Kings, Contradiction, Destroyment, Sangam Literature

சங்க காலத்தில் தமிழ்நாட்டை பல்வேறு அரசர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்களில் மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்கள் ஆட்சியின் கீழ் மன்னர்கன், குறுநில மன்னர்கள், சிற்றரசர்கள், குடித்தலைவர்கள் உள்ளிட்டவர்கள் ஆட்சிபுரிந்துள்ளனர். அரசன் தன் நாட்டையும், தன் நாட்டு மக்களையும் பாதுகாக்கும் கடமையை செய்யும் மரபுடையவன். அரசனின் ஆட்சியில் பல்வேறு சிறப்பான முறைமைகள் இருந்தாலும் ஒரு சில முரண்பாடுகள் உண்டு. போர் நிகழும் போது எதிர்பாராத விதமாக பல உயிர்ச் சேதம், பொருட் சேதம் ஏற்படுகிறது. எதிர் நாட்டை வெல்லும் முயற்சியில் ஊர்களின் வளங்களை அழித்தல், பொருட்களைக்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கொள்ளையிடுதல், தீயிடுதல் போன்ற முரண்பாடான செயல்களில் அரசரும் படையும் ஈடுபடுகின்றனர். அம்முரண்களை ஆராயும் விதமாக இவ்வாய்வு அமைகிறது.

இயல்பாய் நிகழக்கூடிய செயல்களுக்கு மாற்றாக செயல்படும் நிகழ்வுகள் முரணாகிறது. மனித நடத்தை பிறர் மீதும் உடைமைகள் மீதும் செலுத்தும் அதிகாரம் உரிமை, வலிமை, மற்றும் அன்பை கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. வீரம் அரசன் முதல் படை வீரர் வரை அறத்தை காக்கவும், மக்களைப் பாதுகாக்கவும் வெளிப்படுத்த வேண்டும். பிற நாட்டு வளங்களை கவருவதற்காகவும், நாட்டை சேதப்படுத்தவும் பயன்படுத்தப்பட்டால் முரண் மரபாகிறது.

**மரபு என்பதன் பொருள்**

மக்களால் தொடர்ந்து பின்பற்றக் கூடிய சில பழக்க வழக்கங்கள் நிலைத்து நின்று, பரம்பரைப் பரம்பரையாக தொடர்ந்து பின்பற்றப்படுவது மரபாகிறது. தொல்காப்பியம் ‘மாற்றருஞ் சிறப்பின் மரபு’ எனக் குறிப்பிடுகிறது. மாற்றம் என்பது மானுடத் தத்துவம் என்றாலும் சான்றோர்களால் தெரிவு செய்யப்பட்டு, சமூகம் உள்ள வரை நிலைத்து நின்று பயன்தரக்கூடிய கருத்துக்கள் மாற்றம் பெறுவதற்கு உரியவை அல்ல. மரபு என்ற சொல்லுக்கு “குணம், பழமை, பரம்பரை, வழிபாடு, முறைமை” (கழகத்தமிழ் அகராதி, ப.742) ஆகிய பொருள்களைத் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

**முரண்**

முரண் என்பதற்கு அகராதிகள் தரும் விளக்கம், “முரண் – வலி; மாறுபாடு; அறியாமை; முரணென்னேவல்; முரண்டொடை” (கழகப் புலவர் குழு(தொகுப்பு), கழகத் தமிழ் அகராதி, ப.778), “முரண்-ஒன்றுக்கு எதிரானதாகவோ மாறுபட்டதாகவே அமைவது முரண்பாடு” (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1088) என்னும் பொருள் தருகிறது.

**அரசரின் சின்னங்கள்**

படை, குதிரை, யானை, தேர், கொடி, குடை, முரசு, முடி, தார், கவரி, அரியணை என்பன அரசர்க்குரிய சின்னங்களாகப் பொருளதிகாரத்தில் மரபியல்.நூ.71-ல் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இப்பத்து அடையாளச் சின்னங்கள் அதிகாரத்தின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

புற வெளிப்பாடாக அமைந்தது. போர்க்கு முன் நாட்டையும் நாட்டில் உள்ள மக்களை பாதுகாப்பது அரசனின் கடமையாகிறது. அவை,

**ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின் (புறநானூறு.9:1-6)**

ஆநிரைகளை துன்பப்படுத்தக் கூடாது என்பதாலும், அவை செல்வமாகக் கருதப்பட்டதாலும் வீரர்கள் இரவில் ஆநிரைகளை கவர்ந்து வரும் மரபு இருந்துள்ளது. போர் பகலில் நடத்தினர். போரில் அஞ்சி ஒடுபவரைத் தாக்கக்கூடாது. எதிர்த்து புாரிட கையில் ஆயுதமின்றி உள்ள வீரனை எதிர் வீரன் தாக்கக் கூடாது. போருக்கு அஞ்சி தரையில் வீழ்ந்தவனையும் தாக்கக் கூடாது. நோய்வாய் பட்டவர்களையும், பெண்களையும், அந்தணர்களையும் துன்பப்படுத்தமல் பாதுகாத்தனர்.

**போருக்கான காரணங்கள்**

பகைமை, ஆசை (மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை), போட்டி, நாடுபிடிக்கும் கொள்கை, வெற்றிப் புகழ், ஆதிக்க விரிவாக்கம் போன்றவை இதில் அடங்கும்.

**அரசியல் முரண்கள்**

மக்கள் நலனுக்காக குடி வழியே தோன்றியது அரசு முறை. முதலில் தன்னுடைய குழு, இனம், மக்கள், நாடு என்ற தன்னையும் தன்னைச் சார்ந்தவரையும் காக்கும் வல்லமையுடைய ஆண்களே அரசனாக தேர்ந்தெடுக்கப்பட்டு ஆண்டு வந்தனர். பின்னாளில் மக்களின் பாதுகாப்பிற்காகவும், நாடு விரிவாக்கம் மற்றும் பொருளாதாரத் தேவைக்காகவும் போர் புரியத் துவங்கினர்.

**முரண் மரபுகள்**

போரில் வென்ற அரசன் தோற்ற அரசனை அவமானப்படுத்த, முரணான பல

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

போர் மரபுகளை கடைப்பிடித்தனர். பகைவர் முரசு கவர்தல், பகைவரின் காவல் மரத்தை வெட்டி அதில் முரசு செய்தல், முடிப்பொன்னால் கழல் செய்தணிதல், காவல் மரம் தடித்தல், பகைவரின் நிலத்தில் வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்தல், கழுதை பூட்டி நிலத்தை உழுதல், கதவில் தோற்றோர் பல்லைப் பதித்து வைத்தல், கண்ணைப் பிடுங்குதல், களிற்றினைக் கயம்படிவித்தல், வென்றோர் குடைக்குப்பின் தோற்றோர் குடைபிடித்தல், எரியூட்டுதல், தம் கோட்டை வாயிலில் பகைவரை இகழுவதற்கு அடையாளமாகப் பெண்டிர்க்குரிய பொருட்களான பந்தும் பாவையும் தூக்கல், சிலம்பும் தழையும் தூக்கல், பகைவரின் இலச்சினையை நீக்கித் தமது அடையாளத்தைப் பொறிக்கச் செய்தல், பகையரசனது பட்டத்து யானையின் தந்தத்தை அறுத்துக் கட்டில் செய்தல், பகைவர் மகளிரைச் சிறைப்பிடித்தல், போரில் பகைவர் முரசும் குடையும் கொள்ளுதல் ஆகியவை குறிப்பிடத் தக்க முரண் மரபுகளாகும்.

**ஆநிரைகளை கவர்ந்து வருதல்**

போர்க்கு மிக முக்கிய காரணங்களுள் ஒன்றான ஆநிரைகளை கவர்தல். சங்க காலத்தில் ஆநிரைகள் செல்வமாக மதிக்கப்பட்டது. அதிக ஆநிறைகள் உள்ளவரை செல்வந்தராக மதிக்கும் முறைமை இருந்தது. பகை நாட்டில் உள்ள பசுக்கூட்டங்களை கவர்ந்து வந்து கள் விற்பவரிடம் தந்து விட்டு அதற்கு மாற்றாக கள்ளை பருகுவர் இச்செய்தியை,

**கேளா மன்னர் கடிபுலம் புக்கு**
**நாள்ஆ தந்து நறவுநொடை தொலைச்சி (பெரும்பாணாற்றுப்படை.140-141)**

என்னும் பெரும்பாணாற்றுப்படை வரிகள் புலப்படுத்துகிறது.

**முடிகவர்தல்**

முடி கவர்தல் என்பது மன்னன் தலையில் அணியும் மகுடம். இம்மகுடத்தை நாட்டை ஆளும் அரசன் தன்தலையில் சூடுவது மரபாகும். பகைவரை வென்று அவருடைய முடிபொன்னை எடுத்து காலில் அணியும் கழலை செய்து அணிவது தோற்ற மன்னனை இழிவுபடுத்தி, வென்ற மன்னனை புகழும் செயலாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**முடிபுனைந்த பசும்பொன்னின்**

**அடிபொலியக் கழறைஇய (புறநானூறு.40:3-4)**

இப்பாடலில் பகை மன்னரை வெள்றதன் அடையாளமாக அவர்தம் பொன்முடியின் பசும் பொன்னினால் அடி அழகுறக் கழலை அணியும் மரபு வெளிப்படுகிறது.

**காவல் மரத்தை அழித்தல்**

நெடுஞ்சேரலாதன், பழையன் என்னும் குறுநில மன்னன் காத்து வந்ததும் கரிய கிளைகளை உடையதுமாகிய வேம்பினது முழவு போன்ற அடிமரத்தை வெட்டியச் செய்தியைப் பதிற்றுப்பத்து.பதிகம்.5:13-14 குறிப்பிடுகிறது. பகைவரது காவல் மரத்தை வெட்டி, அம்மரத்தினால் முரசு செய்வது வென்ற மன்னனது இயல்பாகும். இதனை,

**பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்**

**கடியுடை முழுமுத றுமிய வேஎய்**

**வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர் (பதிற்றுப்பத்து.11:12-14)**

பகை மன்னனது காவல் மரத்தைச் சுற்றிலும் வீரர்கள் சேர்ந்து கடம்ப மரத்தை காவல் காப்பர். அம்மரத்தை வெட்டிக் கொண்டு வந்து, அம்மரத்தின் அடிப்பகுதியில் முழுங்குகின்ற முரசை செய்து கொள்ளும் மரபு இருந்தது.

**பட்டத்து யானையின் தந்தைத்தை அறுத்தல்**

உருவத்தில் பெரியதும், வலிமை மிக்கதுமான யானை போரிலே பயன்படுத்தப்பட்டது. நாட்டின் பட்டத்து யானையை அரச மரியாதையுடன் பாதுகாக்காத்தனர்.போரிலே தோற்ற மன்னனின் பட்டத்து யானையின் கோட்டினை அறுத்து அதில் கட்டில் செய்து பயன்படுத்துவது வென்ற அரசனின் வெற்றியின் அடையாளமாகவும், தோற்ற மன்னனுக்கு இழுக்கவும் அமையும்.

**அரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய**

**அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து (பதிற்றுப்பத்து.79:13-14)**

எதிர் நாட்டை வென்று அவனுடைய பட்டத்து யானையின் தந்தத்தை அறுப்பது தேற்ற மன்னனை இழிவு படுத்தும் செயலைக் குறிக்கும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**சங்கிலியால் பிணைத்தல்**

தோற்ற அரசனை சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய்போல் பிணித்து ஊர் அறிய இழுத்து வந்து அம்மன்னனுக்கு பெரும் துன்பத்தைச் செய்வர். "தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுந் திரீஇய" (புறநானூறு.74:7) வென்ற அரசனின் வெற்றியும் தோற்ற அரசனின் இயலாமையும் வெளிப்படுத்தும் விதமாக, தோற்ற அரசனை சங்கிலியால் பிணைக்கும் முரண் மரபு இருந்தது. வென்ற அரசனுக்கு அச்செயல் இன்பத்தை தருவதாக அமைந்தது.

**போரில் தோற்ற மன்னனது பல்லைப் பறித்தல்**

போரில் தோற்ற மன்னனை இழிவு படுத்தும் செயல்களில் ஒன்று அவனுடைய பல்லைப் பறித்தல். அப்பல்லை வாயிற் கதவில் பதிப்பதால் வென்ற அரசனின் வீரமும், பகை மன்னனின் தோல்வியும் மக்களுக்கு அறிவிக்கும் முகமாக இச்செயல் அமைகிறது.

**கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய**
**வன்கண் கதவின் வெண்மணி வாயில்**
**மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை (அகநானூறு.211:13-15)**

யானை வேட்டையின் போது உதவிக்கு எழினி என்பவன் வராததால் சினம் அடைந்தன் சோழன், எமினியைப் பிடித்துவர மத்தி என்பவனை ஏவினான். போரில் எழினியை வென்று அவனுடைய பல்லைப் பறித்து வந்து வெண்மணி ஊரினுடைய வாயிற் கதவில் பதித்தான் மத்தி.

**எதிரி நாட்டை அழித்தல்**

பகை நாட்டை அழிக்க எண்ணி அவர்கின் வயல்வெளியில் தேர்களைச் செலுத்தியதால் விளைபுலங்கள் ஏர்பூட்டி உழுததைப் போன்று மாறின. பன்றிகள் தம் கொம்பால் குத்திக் கிளறிய விளைநிலங்கள் பின் கலப்பையால் உழ வேண்டாதனவாயின. தயிர் கடையும் மத்துக்கள் ஒலித்த வீடுகளில் இனி மங்கல இசைகள் ஒலிக்காது.

**தேஎர்பரந்தபுல மேஎர்பரவா**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**களிறாடியபுல நாஞ்சிலாடா**

**மத்துரறியமனை யின்னியமிழா (பதிற்றுப்பத்து.3.26:1-3)**

மேலும், அழகிய பீர்க்கங்கொடிகள் வீடுகளுக்கு வேலியாக இருந்தன. வீரர்களால் நாடு அழிந்த பின், அவை பாழ் பட்டு மனைகள் பொலிவிழந்தன. நெருஞ்சி முட்செடிகள் படர்ந்து வழிகள் நடந்து செல்வதற்கு அரிய கடுமையான காடு போன்று காட்சியளித்ததைப் பதிற்றுப்பத்து.3.26:10-12-ஆம் பாடல் புலப்படுத்துகிறது. மேலும், பதிற்றுப்பத்து.பதிகம்.5:11-12-ஆம் வரிகள் நெடுஞ்சேரலாதன் தன் படை வலிமையால் சிறிய பூங்கொத்துகள் பொருந்திய நெய்தற் கொடியுடைய வியலூரை அழித்த செய்தியை சுட்டிக்காட்டுகிறது.

**தீ வைத்தல்**

போருக்குச் செல்லும் வழியில் எதிர்பட்ட ஊர்களை எல்லாம் தீ வைத்து அழித்ததை,

**ஊரெரி கவர வுருத்ழுந் துரைஇப்**

**போர்சுடு கமழ்பகை மாதிர மறைப்ப (பதிற்றப்பத்து, 8.71:9-10)**

அவ்வாறு பகைவர் ஊர்களைச் சுடுவதால் உண்டான புகை திசைகளை மறைக்கும் என்பதால் போரில் பகை ஊர்களை அழிக்கும் முரண் மரபு இருந்தது தெளிவாகிறது.

**...பகைவர்**

**ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலை (புறநானூறு.7:7-8)**

கரிகாற் பெருவளத்தான் பகைவரது ஊரைச் சுடுகின்ற தீயினது ஒளி எல்லாத் திசைகளிலும் பரவியது. கலித்தொகை.13:1-2 என்னம் பாடலில் சினமுடைய அரசன் பகை நாட்டின் மீது படையெடுத்துச் சென்றால் அந்நாடு தீயில் வெந்த சுரம் போல காட்சியளிக்கும். பகை நாட்டை வென்ற பின் வெற்றி பெற்ற மன்னன், பகை வேந்தனின் ஊரை தீப்படுத்தும் முரண் மரபு இருந்ததை, புறநானூறு.16:5-8 பாடல் குறிப்பிடுகிறது. வளம் மிக்க வயல்வெளிகளை அழித்து அவர்தம் பொருளாதாரத்தையே சிதைத்தனர். வீடுகளை இடித்து வீட்டில் பொருந்திய மரங்களே விறகாகத் தீ மூட்டிய அழித்தனர். பகைவர்கள் மூட்டிய தீயால் எரியும் நாடானது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

சூரியனைப் போன்று காட்சியளித்தது என்று புறநானூறு.16:16-17 பாடல் குறிப்பிடுகிறது.

நாட்டைக் காக்கும் காவலர்கள் இருக்க அவர்களை வென்ற அரசன், தோற்ற நாட்டைத் தீயிட்டு அழிக்கும் முறை இருந்தது. போர் நிகழும் காலத்தில் இச்செயல் பெரிதும் பின்பற்றப்பட்டுள்ளது என்பதை, “நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே” (புறநானூறு.6:22) என்னும் வரிகளில் நாட்டை எரிப்பதால் உண்டாகும் புகை அரசன் தனது கழுத்தில் அணிந்திருக்கும் மலர் மலை வாடும் படிச் செய்யுமாம்.

**கழுதை பூட்டி ஏர் உழுதல்**

பகையரசனுடைய கோட்டையை அழித்து கழுதைழையப் பூட்டி ஏர் உழும் மரபு சங்க காலத்தில் இருந்தது. இம்முறையைப் பற்றித் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினயர் புறத்திணையில் கூறியுள்ளார். பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப்பெருவழுதி தன் பகைவருடைய அரண்களை வென்று இடித்துத் தகர்த்திக் கழுதைகளைப் பூட்டிய ஏரினால் உழுதச் செய்தியினை புறநானூற்றுச் செய்யுள் கூறுகின்றது.

**கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்**
**பாழ்செய்தனை யவர் நனந்தலை நல்லெயில் (புறநானூறு.15:1-3)**

என்னும் பாடல் மூலம் அறியலாகிறது. அதியமானுடைய மகன் பொருட்டெழினி, பகைவருடைய கோட்டையை அழித்துக் குருதி ஈரத்தோடு இருந்த அந்த இடத்தைக் கழுதைகள் பூட்டிய ஏரினால் உழுது வரகும் கொள்ளும் விதைத்த செய்தியை, புறநானூறு.392:6-11 என்னும் ஔையார் பாடலால் அறியமுடிகிறது. வென்ற அரசர் பகையரசனின் கோட்டைகளை அழித்து கழுதைக் கொண்டு பூட்டிய ஏரினால் உழுதல் என்பது பண்டையக்கால மரபாக இருந்தது.

**பெண்களை கவர்ந்து வருதல்**

போரில் தோற்ற நாட்டில் உள்ள பெண்களை வென்ற நாட்டிற்கு கொண்டு செல்வது மரபாக இருந்தது. “கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி”

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

(பட்டினப்பாலை.246) பகைவரை வென்று அந்நாட்டு மகளிரைச் சிறைப் பிடித்து (கவர்ந்து) வருவது மரபாகும்.

**பெண்களின் கூந்தலை அறுத்து கயிறாகப் பயன்படுத்தல்**

போரில் கணவன் இறந்தமையால் அவன் மனைவியராகிய நல்ல பல பெண்கள் தூய அணிகலன்களையும் முத்தாரத்தையும் நீக்கினர். அப்பெணிகளின் பலவாகிய கரிய கூந்தலைக் கொண்டு திரிக்கப்பட்ட கயிற்றினால் யானைகளை வண்டியில் பூட்டும் மரபு இருந்ததை,

**வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்**

**பல்லிருங் கூந்தன் முரற்சியாற்**

**குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல் (பதிற்றுப்பத்து.பதிகம்.5:15-17)**

அறியலாகிறது. கற்புடைய பெண்களின் கூந்தலை தொடும் உரிமை கணவனுக்கு மட்டுமே உண்டு. போரில் கணவர்களை இழந்த பெண்களின் கூந்தலை அறுத்து கயிறாக பயன்படுத்தியது தோற்ற நாட்டின் பெண்களை அவமானப்படுத்தும் செயல். இது வென்ற அரசனுக்கு பெருமை, வீரத்தின் அடையாளமாக கருதினான்.

**தொகுப்புரை**

- ❖ தன் நாட்டில் உள்ள பசுக்களை பாதுகாத்தல் – எதிர் நாட்டு பசுக்களை கவர்ந்து வருதல்.
- ❖ தன் நாட்டு காவல் மரத்தை பாதுகாத்தல் – பகை நாட்டு காவல் மரங்களை அழித்தல். அம்மரத்தைக் கொண்டு முரசு செய்தல்.
- ❖ தன் நாட்டு வேளாண் பொருட்களை பாதுகாத்தல் – பகை நாட்டு வளங்களை அழித்து தீ வைத்தல். வளங்களை சூரையாடுதல்.
- ❖ தன்னுடைய நாட்டை பாதுகாத்தல் - பகை நாட்டை தீயிட்டு அழித்தல் ஆகிய இருமை முரண்பாடுகள் அந்நாளில் அரசர்களிடையே பெரும்பாண்மையாக பின்பற்றப்பட்டுள்ளதை இக்கட்டுரை விரிவாக எடுத்துரைத்தது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**

[1] இளம்பூரணனார் உரை. *தொல்காப்பியம் பொருளதிகாரம்*, சாரதா பதிப்பகம், சென்னை – 14, 2005.

[2] *க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.* தமிழ்-தமிழ்-ஆங்கிலம் விரிவாக்கித் திருத்திய பதிப்பு, 2020.

[3] கழகப் புலவர் குழுவினர், தொகுத்தது, *கழகத் தமிழ் அகராதி*, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை, 2017.

[4] சாமிநாதையர்.உ.வே. *பத்துப்பாட்டு*, டாக்டர் உ.வே.சாமிநாதையர், நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 2017.

[5] சாமிநாதையர்.உ.வே. *புறநானூறு* (மூலமும் உரையும்), டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 2014.

[6] சாமிநாதையர். உ.வே. *பதிற்றுப்பத்து* (மூலமும் பழைய உரையும்), டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 2018.

[7] சாமிநாதையர்.உ.வே. *சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்,* டாக்டர் உ.வே.சாமிநாதையர், நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 2013.

[8] சுப்பிரமணியன், ச.வே. - *சங்க இலக்கியம் பத்துப்பாட்டு* (முழுவதும்) தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2018.

[9] வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா. *அகநானூறு* திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட், சென்னை, 2009.

**References in English**

[1] Ilampooranar Urai. *Tholkappiyam Porul Athikaram*, Saratha Pathippagam, Chennai, 2005.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

[2] *Kiriyavin Tharkala Thamizh Aakarathi*. Tamizh-Thamizh-English Dictionary, 2020.
[3] Kazhakap Pulavar Kuzhuvinar Thokuththathu, *Kazhagam Tamil-Tamil Dictonary*, Thirunalveli \thenniththiya Saivasiththntha Noorpathippu kazhagam, Chennai, 2017.
[4] Saminathaiyar, U. Va., (Urai Aasiriyar), *Paththuppattu*, Doctor U.Va. Saminathaiyar Noolnilaiyam, Pesen Nagar, Chennai, 2017.
[5] Saminathaiyar, U. Va., (Urai Aasiriyar), *Purnanooru*, Molamum Uraium, Doctor U.Va. Saminathaiyar Noolnilaiyam, Pesen Nagar, Chennai, 2014.
[6] Saminathaiyar, U. Va., (Urai Aasiriyar), *Pathitrupaththu*, Mulamum Pazhaiya Uraium, Doctor U. Va. Saminathaiyar Noolnilaiyam, Pesen Nagar, Chennai, 2018.
[7] Saminathaiyar, U. Va., (Urai Aasiriyar), *Silppathikaram Mulamum*, *Arumpatha Uraium Adiyarkku Nallar Uraium*, Doctor U.Va. Saminathaiyar Noolnilaiyam, Pesen Nagar, Chennai, 2014.
[8] Suppiramaniyan. Sa.Va. *Sanga Ilakkiyam Paththuppattu Muzhuvathum Thelivurai*, Manivasagar Pathippagam, Chennai, 2018.
[9] Vengatasami Nattar. N. M., Vengatasalam Pillai.Ra. *Agananoor*u, Thirunalveli thenniththiya Saivasiththntha Noorpathippu kazhagam, Chennai, 2009.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021
Available at: www.ijtlls.com

# கீழடி அகழாய்வுகள் – ஒரு கூர்நோக்கு ஆய்வு

## Keezhadi Excavations – A Perspective Study

**முனைவர் ஆ.ராஜா,** தலைவர், அருங்காட்சியகத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் – 613 010
**Dr.A.Raja,** Head, Dept.of Museum, Tamil University, Thanjavur-613 010
**ORCiD: https://orcid.org/0000-0001-8820-2413**
**DOI: 10.5281/zenodo.5111416**

## Abstract

*Archaeological Survey of India and State Archaeological Department of Tamil Nadu had conducted a number of field researches at Keeladi in Sivagangai district to find the presence of Sangam Age cultural similarities. The two institutes, which began to focus on that, have been carrying out excavations since 2014. More than 15000 artefacts were discovered through this. If they have become the talk of the world today, it is the result of 2600 years of cultural age. In addition, there is more architectural evidence found in the excavations below than the brick architectural evidence found so far in Tamil Nadu. Archaeological excavations have shown that urban civilization flourished here as it is habitation to ancient Tamils. In this excavation, brick structures, ring wells, roof tiles, terracotta pipes, dye tanks, iron, copperware, beads, earrings, circular sports chips, black and red potteries, symbols, and pottery with Tamil Brahmi (Tamil) engravings were found. Archaeological evidence suggests that the early Tamils of this period were well versed in literacy, agriculture, industry, architecture, and urban civilization. Since this culture is two thousand six hundred years old, the lower Tamil urban civilization can be considered as parallel to the Indus Valley Civilization. Images of the excavations are fixed for evidence. Furthermore, if many more excavations are carried out here to shed light on this cultural civilization, the many cultural pieces of evidence available in it will reinforce the above hypothesis.*

**Keywords:** Tamil Civilization, Ancient Keezhadi, Artifats, Brick Architecture

மதுரைக்கு அருகே சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள கீழடி என்ற இடத்தில் இந்திய தொல்லியல் துறையும், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையும் கள ஆய்வுகள் மேற்கொண்டனர். இதன்வாயிலாக வரலாற்றுத் தொடக்கக் கால தொல்லியல் எச்சங்கள், அதாவது சங்ககாலப் பண்பாட்டுக் கூறுகள் இருப்பதை அடையாளம் கண்டனர். அதன் பொருட்டு இங்கு கவனம் செலுத்தத் தொடங்கிய இரு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

நிறுவனங்களும், 2014ஆம் ஆண்டு முதல் அகழாய்வுப் பணிகளை மேற்கொண்டு வருகின்றனர். இவ்வகழாய்வுகளில் கிடைத்த தொல்பொருட்கள், இன்று உலகளவில் பேசும் பொருளாக மாறியுள்ளது. ஏனென்றால் பண்பாட்டின் காலம் கி.மு.6ஆம் நூற்றாண்டுக்கு பின்னோக்கிச் சென்றதே எனலாம். எனவே, கீழடியானது சங்க கால மக்கள் வாழ்ந்த வாழ்விடப்பகுதி கிடைத்தச் சான்றுகளின் வாயிலாக விளக்குகின்றது இக்கட்டுரை.

தமிழரின் தொன்மைப் பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டுள்ள கீழடி தற்போது சுமார் 110 ஏக்கர் நிலப்பரப்பளவில் தென்னை மரங்கள் நிறைந்து காட்சியளிக்கிறது. (படம்.1). இம்மரங்கள் நமது சங்ககாலப் பண்பாட்டு எச்சங்களைப் பாதுகாக்கும் ஒரு அரணாக அமைந்துள்ளது என்றால் அது மிகையாகாது. தனியாருக்குச் சொந்தமான இந்த நிலங்களில் மத்திய, மாநிலத் தொல்லியல் துறையினர் தனித் தனியாகக் கள ஆய்வுகளையும், அகழாய்வுகளையும் மேற்கொண்டனர். இவற்றில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையானது தனது அகழாய்வு அறிக்கையினை அண்மையில் வெளியிட்டது. அவ்வறிக்கையின்படி வைகை ஆற்றங்கரையில் அமைந்துள்ள கீழடி என்ற இடத்தில், 2600 ஆண்டுகளுக்கு முன்பே ஒரு நாகரிகம் வளம்பெற்றிருந்தது என்பதை உறுதிசெய்துள்ளது.

மத்திய தொல்லியல் துறையினர் 2014ஆம் ஆண்டு முதல் 2017ஆம் ஆண்டு வரை கீழடியில் அகழாய்வுப் பணிகளை மேற்கொண்டனர். அவற்றைத் தொடர்ந்து தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினர் 2018ஆம் ஆண்டிலிருந்து (நான்காம் கட்டம்) அகழாய்வுப் பணிகளை செய்து வருகின்றனர். தற்போது ஐந்தாம் கட்டத்தை நிறைவு செய்து, ஆறாம் கட்ட அழாய்வுப் பணிகள் தொடர்ந்து மேற்கொண்டு வருகின்றனர். இந்த நான்காம் கட்ட அகழாய்வில் மட்டும் 5820 தொல்லியல் எச்சங்களும், இதுவரை மேற்கொள்ளப்பட்ட மொத்த அகழாய்வுகளில் 15000க்கும் மேற்பட்ட தொல்பொருட்களும் கிடைத்துள்ளன (எம்.சேரன், ஆர்.சிவானந்தம், *“கீழடி” – வைகை நதிக்கரையில் சங்க கால நகர நாகரிகம்*: 2019). மேலும், சங்ககாலப் பண்பாட்டை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

உணர்த்தும் செங்கற் கட்டுமானங்கள், வீட்டு கூரை ஓடுகள், உறைக் கிணறுகள் (படம்.2), போன்றவைகள் அகழாய்வுகளில் வெளிக்கொணரப்பட்டுள்ளன.

மேலும், சுடுமண் வகையைச் சார்ந்த வட்ட வடிவச் சில்லுகளும், காதணிகளும், விலை உயர்ந்த தங்க அணிகலன்களும் (படம்.3), அகேட் சூதுபவளம், கார்னீலியன், ஸ்படிகம் வகையைச் சார்ந்த மதிப்புயர்ந்த மணிகளும், கருப்பு-சிவப்பு நிற பானை ஓடுகளும், கருப்பு நிற மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகளும், ரௌலட்டட் பானை ஓடுகளும், அரிட்டின் வகை பானை ஓடுகளும் கண்டறியப்பட்டுள்ளன. கீறல் குறியீடுகளுடன் கூடிய பானை ஓடுகளும் கிடைத்துள்ளன (படம்.4). இவ்வகழாய்வில் 50க்கும் மேற்பட்ட தமிழ் பிராமி (தமிழி) எழுத்துப் பொறித்தப் பானை ஓடுகளும் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பழமை வாய்ந்த கீழடி**

நான்காம் கட்ட அகழாய்வில் அகழப்பட்டக் குழிகளில், மண்ணடுக்கு வாரியாகச் சேகரிக்கப்பட்ட ஆறு கரிம மாதிரிகள் அமெரிக்காவிலுள்ள புளோரிடா மாகாணம், மியாமி நகரில் அமைந்துள்ள பீட்டா பகுப்பாய்வுக் கூடத்திற்கு அனுப்பப்பட்டு ஆய்வுகள் செய்யப்பட்டன. இதில் அதிகப்பட்டசமாக 353 செ.மீ ஆழத்தில் கிடைத்த கரிம மாதிகளைப் பகுப்பாய்வு செய்ததில் இதன் காலம் கி.மு 580 என கணக்கீடு செய்யப்பட்டுள்ளது (எம்.சேரன், ஆர்.சிவானந்தம், 2019: 2). இந்த பீட்டா ஆய்வறிக்கையை கவனமாக ஆய்வு செய்த தொல்லியல் அறிஞர் பேராசிரியர் கா.இராஜன் பழந்தமிழரின் தொன்மை தொடர்பாக இதுவரை நிலவிவந்த சில கேள்விகளுக்கு உறுதியானச் சான்றுகள் தற்போது கிடைத்துள்ளதாகக் கருதுகிறார் (எம்.சேரன், ஆர்.சிவானந்தம், *"கீழடி" – வைகை நதிக்கரையில் சங்க கால நகர நாகரிகம்*: 2019:2).

தமிழகத்தில் அழகன்குளம், கொடுமணல், பொருந்தல் ஆகிய இடங்களில் மேற்கொண்ட அகழாய்வுகளில் கிடைத்த எழுத்துச் சான்றுகளான தமிழ் பிராமி எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளின் காலம் கி.மு.5ஆம் நூற்றாண்டு என உறுதிசெய்யப்பட்டிருந்த நிலையில் (கா.இராஜன், 2018:255-272) தற்போது கீழடி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

அகழாய்வில் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துப் பொறித்தப் பானை ஓடுகளின் காலமானது, தமிழரின் எழுத்தறிவு தோற்றுவாய் சற்று 100 ஆண்டுகள் பின்னோக்கி சென்று கி.மு 6ஆம் நூற்றாண்டு என அறிவியல் முறைப்படியிலான காலக்கணிப்பு நமக்கு புதிய வெளுச்சத்தைக் காட்டியுள்ளது என்றால் அது மிகையல்ல.

தமிழகத்தில் இதுவரை 100 இடங்களில் அகழாய்வுகள் நடந்துள்ளன. அவற்றில் 15 இடங்களில் மட்கல எழுத்துகளும், மிகுதியாக கொடுமணல், அழகன்குளம், அரிக்கமேடு, உறையூர் ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன (எ.சுப்பராயலு, 2007: 189-221). சங்க இலக்கியங்களில் வருகிற கூல அந்தைய் சாம்பன் அகல், கண்ணன் ஆதன், பண்ணன், குவிரன் அதன், அந்தவன் அதன், 'விஸகன் அதன்' போன்ற தமிழ் பிராமி எழுத்துப் பொறித்தப் பானை ஓடுகள் கொடுமணல் அகழாய்வுகளில் கிடைத்திருப்பதை இங்கு குறிப்பிடுவது ஏற்றதாகும்.

இதேபோன்று இலங்கையில் அணைக்கோட்டை, அநுராதபுரம் ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும் தமிழ் பிராமி எழுத்து மட்கலம் கிடைத்துள்ளன (ஆ.ராஜா, 2019) என்பதன் மூலம் நம் பழந்தமிழர்களின் எழுத்தறிவினையும் பண்பாட்டு பரவலையும் நன்கு அறியமுடிகிறது. தமிழ்ச் சமூகம் சங்க காலத்திலேயே எழுத்தறிவுப் பெற்ற சமூகமாகத் திகழ்ந்துள்ளது என்பதற்கு மேற்குறிப்பிட்ட இடங்களில் கிடைத்தச் சான்றுகளோடு கீழடி அகழாய்வுகளில் கண்டறியப்பட்ட எழுத்துப் பொறித்த மட்கல ஓடுகளும் முக்கியச் சான்றாக அமைகின்றன.

**வேளாண் சமூகமும் கால்நடை வளர்ப்பும்**

கீழடி அகழாய்வில் கிடைத்த 70 எலும்புத் துண்டுகளின் மாதிரிகள், அறிவியல் அடிப்படையில் பகுப்பாய்வு செய்வதற்கு புனேவிலுள்ள முதுகலை மற்றும் ஆராய்ச்சி நிறுவனமான டெக்கான் கல்லூரிக்கு அனுப்பப்பட்டன. இந்த எலும்புத் துண்டுகளை பகுப்பாய்வு செய்ததில் திமிலுள்ள காளை, எருமை, வெள்ளாடு, கலைமான், காட்டுப்பன்றி மற்றும் மயில் ஆகிய உயிரங்களுக்குரியவை என அடையாளம் காணப்பட்டுள்ளன. இதில் திமிலுள்ள காளை, எருமை, வெள்ளாடு 53 சதவீதம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

இடம்பெற்றுள்ளமையால் இவ்விலங்கினங்கள் வேளாண்மைக்கு உறுதுணை செய்யும் வகையில் கால்நடைகளாக வளர்க்கப்பட்டுள்ளன எனவும், சங்காலச் சமூகம், வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்ததோடு கால்நடை வளர்ப்பையும் மேற்கொண்டிருந்தது என்பதை பகுப்பாய்வின் முடிவுகள் புலப்படுத்துகின்றது (எம்.சேரன், ஆர்.சிவானந்தம், 2019: 4).

**தமிழர் நகர நாகரிகம்**

இந்தியாவின் பழமையான நாகரிகமாககச் சிந்துச்சமவெளி நாகரிகம் கருதப்பட்டுவந்த நிலையில் தற்போது தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் கீழடி என்ற இடத்தில் மேற்கொண்ட அகழாய்வுகளில் கிடைத்தச் சான்றுகள் நகர நாகரிகத்தை வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளன. ஒரு நகர நாகரிகம் என்பது நீர் ஆதாரம், திட்டமிடப்பட்ட கட்டடமைப்புகள் (இருப்பிடம்), கட்டமைக்கப்பட்ட தெருக்கள், சுகாதார வாழ்க்கை (கழிவுநீர் வெளியேற்றம் திட்டமிடல்) ஆகியவைகளை முதன்மையான அடிப்படைத் தேவைகளாகக் கொண்டிருக்க வேண்டும். இவற்றில் நீர் மேலாண்மை என்பது மிக இன்றியமையாத ஒன்று. இதற்கு ஏற்ற வகையில்தான் வைகை நதிக்கரை அருகில் கீழடி அமைந்திருந்தமையால் இப்பகுதி நாகரிகத்தில் வளம்பெற்ற இடமாக இருந்துள்ளது.

இலக்கியங்கள் நகரமைப்பு பற்றி சில குறிப்புகளைத் தருகின்றன. குறிப்பாகப் பூம்பூகார் நகரமைப்பு எவ்வாறு இருந்தது என்பதை நோக்கச் சிலப்பதிகாரத்தில் வரும் இந்திரவிழாவூரெடுத்த காதையில் பூம்புகாரில் உள்ள நிலா முற்றமுள்ள கட்டடங்கள், பல அறையணிகளைக் கொண்டு வீடுகள் நிறைந்திருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது (ந.அதியமான், 2019: 16). எனவே, உயர்குடியைச் சார்ந்த மக்கள் செழுமையான வீடுகளைக் கொண்டோராகவும், அப்பகுதி விரிந்த தெருக்கள் கொண்ட பகுதியாகவும் இருந்துள்ளதை அறியமுடிகிறது. தொன்மையானத் தமிழ் சமூகத்தின் நீர் மேலாண்மைக்குச் சிறந்த காட்டாகக் கீழடியில் அகழப்பட்ட குழிகளில் கிடைத்த உறைக் கிணறுகளைக் குறிப்பிடலாம். இதன் வாயிலாகதான் மக்கள் தங்களின் அடிப்படைத் தேவைக்கு இன்றியமையாத நீர் ஆதாரத்தைப் பெற்றார்கள்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com


**தமிழகத்தின் பிற இடங்களில் செங்கற் கட்டடமைப்பு**

வரலாற்றுக்கு முற்பட்ட காலமாகிய பெருங்கற்காலத்தில் புதைகுழி அமைத்து இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் ஏற்பட்டது. அவ்வாறு புதைக்கப்பட்ட சில நினைவிடங்களின் மேல் பெரிய பலகைக் கற்களாலும் கருங்கற்களாலும் கல்வட்டம், கல்லரண், குடைக்கல், தொப்பிக்கல், குத்துக்கல், நடுகல் போன்ற நினைவுச் சின்னங்களை உருவாக்கும் மரபு வழக்கத்திற்கு வந்தன. (பொ. இராசேந்திரன், சொ. சாந்தலிங்கம், 2014:3). இதற்கு காட்டாகக் கொடுமணல் அகழாய்வைக் குறிப்பிடலாம். கொடுமணலில் பெரிய பலகைக் கற்களைக் கொண்டு நினைவுச்சின்னங்கள் அமைத்துள்ளனர் என்பதை அகழாய்வுகள் வாயிலாக அறியமுடிகிறது (தி.ஸ்ரீ.ஸ்ரீதர், *கொடுமணல் அகழாய்வு,* 2011: 15-22). இதன் பிற்பகுதியில் வரலாற்றுத் தொடக்கக் காலத்தில் மண்சுவர் மற்றும் செங்கற்சுவர் கொண்ட கட்டுமானத்தைக் கட்டமைக்கும் வழக்கம் ஏற்பட்டது.

இதுவரை தமிழகத்தில் இறந்தவர்களை அடக்கம் செய்த தொன்மையான நினைவுச்சின்னங்கள் இருக்கின்ற பகுதிகளே மிகுதியாக அகழாய்வுகள் செய்யப்பட்டன. ஆனால் அண்மை காலங்களில் தொன்மைத் தமிழர்கள் வாழ்ந்த வாழ்விடப் பகுதிகளையும் கவனம் செலுத்தி அங்கு மிகச் சிறந்த அகழாய்வுகளையும் மேற்கொண்டுவருகின்றனர் தொல்லியல் துறையினர். அதில் குறிப்பிடத்தக்கக் கருப்பொருள் நிறைந்த அகழாய்வாகக் கீழடி அகழாய்வுகள் அமைகின்றது. சங்க காலத்தில் மக்கள் தங்கள் குடியிருப்புகளை மண்சுவர்களாலும், சுட்ட செங்கற்களைக் கொண்டும் கட்டமைத்துக் கொண்டனர். அவ்வாறு கட்டமைத்துக்கொண்ட வாழ்விடப்பகுதியாகக் கீழடி இருந்துள்ளது.

இந்தியாவில் சிந்துச்சமவெளி நாகரிகத்தில்தான் சுட்டச் செங்கற்களைக் கொண்டு முதலில் குடியேற்றங்களை அமைத்துள்ளனர் (மா.இராசமாணிக்கனார், *மொஹஞ்சொ-தரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்*, 2018: 62-63). அதேபோன்று தமிழகத்தில் குறிப்பாகப் பூம்பூகாரில் 1960ஆம் ஆண்டில் மைய அரசின் தொல்லியல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

துறையினர் நிகழ்த்திய அகழாய்வில் கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்த செங்கற்கட்டுமான படகுத்துறை ஒன்றை கண்டறிந்தனர். மேலும், 1963ஆம் ஆண்டிலிருந்து 1973ஆம் ஆண்டு வரை பூம்புகார் பகுதியில் தொல்லியல் அகழாய்வுகளை நிகழ்த்தியபோது மூன்று இடங்களில் செங்கற் கட்டட அமைப்புகள் கண்டறியப்பட்டன. அதில் கீழையூர் என்னும் இடத்தில் கிடைத்த படகுத்துறை செங்கற் கட்டுமான அளவை நோக்கும்போது கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக அறிஞர்கள் கருத்து தெரிவிக்கின்றனர் (ந.அதியமான், 2019: 19-20).

இதே போன்று கீழையூர் என்னுமிடத்தில் “ட” வடிவில் இரு சுவர்கள் எழுப்பப்பட்டு இடையே வாய்க்கால் போன்ற பகுதி கட்டமைக்கப்பட்டுள்ள செங்கற்கட்டுமானம் ஒன்று அகழ்வு செய்யப்பட்டது (Soundara Rajan, *Kaveripattinam Excavations 1963-73* (A port City of Tamil Nadu Coast), 1994: 25-26). இக்கட்டுமானம் பல காலங்களில் சீர்செய்யப்பட்டுள்ளது என்பதைத் தொல்லியல் ஆய்வுகள் சுட்டுகின்றன. இவ்வாய்க்கால் பகுதியின் இரு புறமும் இரண்டு மரங்கள் ஐந்து வரிசைகளில் நடப்பட்டுள்ளன. இம்மரங்களை அறிவியல் முறையில் கரிமக்காலக் கணக்கீடு செய்ததில் கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இதில் பயன் படுத்தப்பட்டுள்ள செங்கற் கட்டுமானங்களும் சங்க காலத்திற்கு உரித்தானவை (ந.அதியமான், *தொல்லியல் நோக்கில் இரட்டைக் காப்பியங்கள்*, 2019:21).

சங்க காலச் சோழர்களின் தலைநகரமாக விளங்கிய உறையூரில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகளிலும், காஞ்சிபுரம், அரிக்கமேடு, சாளுவான்குப்பம் போன்ற இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும் சங்க காலத்தைச் சார்ந்த செங்கற் கட்டுமானங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இதேபோன்று ஆந்திராவிலுள்ள நாகர்ச்சுனகொண்டா, கர்நாடகத்திலுள்ள பணவாசி ஆகிய இடங்களிலும் சாதவாகனர் மற்றும் சங்க காலச் சுவர் கட்டுமானங்கள் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்(சு.இராசவேலு, *தொல்லியல் சுடர்கள்,* 2007:86). 1945ஆம் ஆண்டு அரிக்கமேட்டில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் செங்கற் கட்டமைப்புகள் மற்றும் சாயத்தொட்டிகள் கண்டறியப்பட்டன

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

(ந.வெங்கடேசன், *வரலாற்றில் அரிக்கமேடு,* 2009:32). மேற்குறித்த அகழாய்வுகளில் கிடைத்தச் சான்றுகள் மூலம் சங்க காலத் தமிழரின் மரபு சார்ந்த கட்டடக்கலையையும் நகர அமைப்புகளுக்காக அடித்தள திட்டமிடல்களையும் நன்கு உணரமுடிகிறது. இவ்வாறு பல்வேறு இடங்களில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகளில் சங்க கால செங்கற் கட்டட அமைப்புகள் கிடைத்திருந்தாலும் கீழடி அகழாய்வுகளில் மிகுதியான செங்கற் கட்டட கட்டுமானங்களைக் காணமுடிகிறது. ஆகையால் தான் கீழடியானது ஒரு நகர நாகரிகமாக இருந்துள்ளது என கருத முடிகிறது.

**கீழடி செங்கற் கட்டடமைப்பு**

கீழடி என்னும் இடத்தில் சமீப காலங்களில் மேற்கொண்ட அகழாய்வுகளில் மிகுதியாகச் செங்கற்கட்டடமைப்பு பகுதிகள் கண்டறியப்பட்டுள்ளன. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் இரண்டாம் கட்ட அகழாய்வில் 13 மீட்டர் நீளம் கொண்ட சுவர் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது. இச்சுவரில் 38 செ.மீ நீளமும், 23 செ.மீ அகலமும், 6 செ.மீ தடிமனும் (38 x 23 x 6) மற்றும் இச்சுவரில் 38 செ.மீ நீளமும், 26 செ.மீ அகலமும், 6 செ.மீ தடிமனும் (38 x 26 x 6) அளவு கொண்ட இரண்டு விதமான செங்கற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன (எம்.சேரன், ஆர்.சிவானந்தம், "*கீழடி" – வைகை நதிக்கரையில் சங்க கால நகர நாகரிகம்*, 2019:6 படம்.5). இக்கட்டடமைப்புகளில் மிகுதியாகச் சுண்ணாம்புச் சாந்துகளைக் கொண்டு பூச்சு பூசியுள்ளனர். இதுவே கட்டுமானம் மிகவும் உறுதியாக இருப்பதற்குக் காரணமாக இருக்கலாம். இதேபோன்று பூம்புகார், உறையூர், அரிக்கமேடு, காஞ்சிபுரம், சாளுவான்குப்பம் போன்ற அகழாய்வுகளிலும் சங்க கால செங்கற் கட்டடமைப்புகள் வெளிக்கொணரப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இந்த மரபு சார்ந்த கட்டட அமைப்பானது நன்கு திட்டமிடப்பட்டவை எனலாம். இக்கட்டமைப்பு பகுதிகளில் கழிவு நீர் வெளியேற்றுவதற்கெனத் தனியாகச் சுடுமண்குழாய்கள் அமைக்கப்பட்டுள்ளன. பழந்தமிழரின் திட்டமிடலுக்கும், நுட்பமான கட்டடக்கலைத் திறனுக்கும், சான்றாக மேற்ச்சுட்டிய கட்டடக் கலை புலமையைக் குறிப்பிடலாம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com


கீழடியின் தொடக்ககாலம் அதாவது பண்பாட்டின் தொடக்ககாலம் கி.மு.1000 என கணிக்கலாம் என்று கணியன் பாலன் குறிப்பிடுகிறார். தமிழகத்தில் கி.மு.1000க்கு முன்னரே நகரமயமாகுதல் தொடங்கிவிட்டது எனவும் கருதுகிறார். அதேபோன்று வட இந்தியாவில் சிந்துவெளி நாகரிகத்திற்குப்பின் கி.மு.750இல் 16 சனபதங்கள் எனப்படும் இனக்குழு அரசுகள் தோன்றுகின்றன. ஆனால் அங்கு கி.மு.6ஆம் நூற்றாண்டில்தான் நகர நாகரிகம் தோன்றுகிறது. அதற்கு முன்னரே தமிழகத்தில் நகர அரசுகள் இருந்தன. அதாவது கி.மு.750க்கு முன்பே சேர,சோழ,பாண்டிய அரசுகள் நன்கு வளர்ச்சி பெற்ற அரசுகளாகவும், மூவேந்தர்களாகவும் இருந்துள்ளனர். ஆகவேதான் வரலாற்றில் நகர அரசுகள்தான் முதலில் தோன்றின என கணியன் பாலன் குறிப்பிடுகிறார் (கணியன் பாலன், பழந்தமிழக (கீழடி) நகர நாகரிகமும் அதன் அழிவும், *பெயல் ஆய்விதழ் 6*, 2020:6-7).

எனவே, மேற்குறிப்பிட்ட பல ஆதாரங்களை முன்வைத்து நோக்கும்போது கி.மு.1000வாக்கில் கீழடி நகர நாகரிகம் தோன்றிருக்க வேண்டும் என்றும், அதுவே பழமையான நகரமயமாகுதலின் தோற்றுவாயாக இருந்தாலும், கீழடியில் அண்மை காலம் வரை நடைபெற்ற அகழாய்வுகளின் அறிவியல் பூர்வமான காலக்கணிப்பு அறிக்கைகள் கி.மு.6ஆம் நூற்றாண்டு என குறிப்பிடுகிறது.

**நிறைவுரை**

தொன்மையான தமிழரின் நகர நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தவதாகக் கீழடி அகழாய்வுகள் உள்ளது. சங்ககால செங்கற்கட்டடமைப்புகள், உறைக்கிணறுகள், கூறை ஓடுகள், சுடுமண் குழாய்கள், சாயத்தொட்டிகள், இரும்பு மற்றும் செம்பிலான பொருட்கள், மணிகள், காதணிகள், வட்ட வடிவ விளையாட்டுச் சில்லுகள், கருப்பு-சிவப்பு நிற பானை ஓடுகள், குறியீடுகள், தமிழ் பிராமி (தமிழி) எழித்துப் பொறிப்புகளுடன் கூடிய பானை ஓடுகள் போன்றவைகள் கிடைத்திருப்பதை நோக்கும்போது, கீழடியில் மிகச் சிறந்த பண்டைய தமிழர் பண்பாடானது செழித்திருந்தது எனலாம். இக்காலக்கட்டத்தில் பழந்தமிழர்கள் எழுத்தறிவு, வேளாண்மை, கட்டுமானக்கலை போன்றவைகளை நன்கு

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

அறிந்தவர்களாகவும், நகர நாகரிகப் பண்பாட்டைக் கொண்டவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதை மேற்குறிப்பிட்ட கீழடி ஆகழாய்வுச் சான்றுகள் புலப்படுத்துகின்றன. இப்பண்பாடானது கி.மு.6ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்பதால், சிந்துச்சமவெளி நாகரிகத்திற்கு இணையாகவே கீழடி நாகரிகத்தைக் கருதலாம். ஆகவே, கீழடியில் இனிவரும் காலங்களில் மிகுதியான அகழாய்வுகளும், காலக்கணிப்புகளும் செய்யப்படுமாயின் இந்த பண்பாட்டுக் காலத்தில் நிலவும் சிக்கல்களுக்குத் தீர்வாக அமையலாம். அதுவே இந்திய நகர நாகரிகத்தின் மிகப் பழமையான நாகரிகமாகலாம்.

**சான்றெண் விளக்கம்**

[1] அதியமான், ந.*தொல்லியல் நோக்கில் இரட்டைக் காப்பியங்கள்*, தமிழ்த்துறை, பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை, பக்.19-20, 2019.

[2] இராசமாணிக்கனார், மா. *மொஹஞ்சொ-தரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்*, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை-05, பக்.62-63, 2018.

[3] இராசேந்திரன், பொ, சாந்தலிங்கம், சொ. *வரலாற்று நோக்கில் விருதுநகர் மாவட்டம்*, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம், மதுரை, ப.3, 2014.

[4] இராசவேலு, சு. *தொல்லியல் சுடர்கள்*, சேகர் பதிப்பகம், சென்னை, ப.86, 2007.

[5] இராஜன், கா. “தமிழ்-பிராமியின் காலம் சிக்கல்களும் தீர்வுகளும்.” *ஆவணம் இதழ்-28*, தொல்லியல் கழகம், தஞ்சாவூர், பக் 255-272, 2018.

[6] கணியன் பாலன். “பழந்தமிழக (கீழடி) நகர நாகரிகமும் அதன் அழிவும்.” *பெயல் ஆய்விதழ் 6*, பெயல், பி.வி கிராபிக்ஸ் & அச்சகம், கோயம்புத்தூர், 6-7, 2020.

[7] சுப்பராயலு, எ. “மண்கல தமிழ்ப்பிராமி எழுத்துப் பொறிப்புகள்.” *ஆவணம் இதழ் -19*, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், பக்189-221, 2007.

[8] சேரன், எம், சிவானந்தம், ஆர். (ப.ஆ), “*கீழடி” – வைகை நதிக்கரையில் சங்க கால நகர நாகரிகம்*, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை, ப 2, 2019.

[9] ராஜா, ஆ., கொடுமணல் அகழாய்வுகளும் தொல்பொருட்களும், *வல்லமை*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

*மின்னிதழ்*, 30.01.2019.

[10] வெங்கடேசன், ந. *வரலாற்றில் அரிக்கமேடு*, திருமுடி பதிப்பகம், புதுச்சேரி, ப.32, 2009.

[11] ஸ்ரீதர், தி.ஸ்ரீ. *கொடுமணல் அகழாய்வு*, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை, பக்.15-22, 2011.

[12] Soundara Rajan, K.V. *Kaveripattinam Excavations 1963-73* (A port City of Tamil Nadu Coast), Memoirs of the Archaeological Survey of India No.90, ASI, New Delhi. pp.25-26, 1994.

**References in English**

[1] Athiyaman, N. *Tholliyal nokkil irattaikkappiyangal*, Department of Tamil Perathai Palkalaikkazhagam, Sri Lanka, p.16, 2018.

[2] Rajamanikkanar, M. *Sinthuchchamaveli Naagarigam*, Naam Thamizhar pathippagam, Chennai, pp.62.63, 2018.

[3] Rajendran.P., Santhalingam, S. *Vararatru nokkil Viruthunagar maavattam*, Pandiyanattu varalatru aayvu maiyam, Madurai, p.3, 2014.

[4] Rajavelu, S. Tholliyal Sutargal, *Sekar pathippagam*, Chennai, p.6, 2007.

[5] Rajan, K. "Thamizh bhiramiyin kaalm sikkalkalum theervukalum", *Aavanam Ithal-*28, Tholliyal Kalagam, Thanjavur, pp.255-272, 2018.

[6] Kaniyan Balan. "Pazhanthamizhaga nagara naagarigamum athan azhivum." *Peyal Research Journal* 6, P.V. Graphics achchagam, Coimbuture.pp.6-7, 2020.

[7] Subbarayalu, Y. "Mankala thamilz bhirami eluththu porippugal." *Aavanam Ithal-*19, Thamizhaga Tholliyal Kalagam, Thanjavur, pp.189-221, 2007.

[8] Seran, M., Sivanantham, R., (Ed)., "Keezhadi" – *Vaigai Nathikkaraiyil sangakala nagara nagarigam*, Deaparment of Archaeology, Government of TamilNadu, Chennai, p6, 2019.

[9] Raja, A., "Kodumanal Agazhayvukalum tholporulkalum." *Vallamai* E-Journal, 30.01.2019.

[10] Vengadesan, N. Varalatril Arikkamedu, Thirumudi pathippagam, Puducherry, p.32, 2009.

[11] Srithar, T.Sri. *Kodumanal Agazhayvukal*, Deaparment of Archaeology, Government of Tamil Nadu, Chennai, pp.15-22, 2011.

[12] Soundara Rajan, K.V. *Kaveripattinam Excavations 1963-73* (A port City of Tamil Nadu Coast), Memoirs of the Archaeological Survey of India No.90, ASI, New Delhi. pp.25-26, 1994.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com



**படம். 1. கீழடி - சங்க கால வாழ்விடப்பகுதி அமைந்துள்ள இடம்.**

கள ஆய்வு: அகழாய்வை பார்வையிட்டபோது எடுக்கப்பட்ட புகைப்படம்.



**படம். 2. கீழடி - உறைகிணறு (சங்க காலம்).**

E-ISSN: 2581-7140
Vol. 4: Issue - 1, July 2021
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கள ஆய்வு: அகழாய்வை பார்வையிட்டபோது எடுக்கப்பட்ட புகைப்படம்.




**படம். 3. கீழடி - தங்க அணிகலன்கள்.**

நன்றி: தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.



**படம். 4. கீழடி - கருப்பு சிவப்பு நிற பானை ஓட்டில் குறியீடுகள்.**

நன்றி: தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com



**படம். 5. கீழடி - அகழாய்வுக் குழியில் செங்கற் கட்டமைப்பு (சங்க காலம்).**

கள ஆய்வு: அகழாய்வை பார்வையிட்டபோது எடுக்கப்பட்ட புகைப்படம்.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இல்லை / NIL

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** NIL.

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பிடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

# தொல்காப்பிய நோக்கில் புறநானூற்றில் பாடாண்திணைத்துறைகள்

## Tholkappiyam in the Context of Padanthinai Thuraigal

**சு. ஸ்ரீநிதி**, முதுகலை இரண்டாமாண்டு தமிழ், அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர்-43

**S. Shrinithi,** M.A. Tamil, Avinashilingam Institute for Home Science & Higher Education for Women, Coimbatore-43

**ORCiD: https://orcid.org/0000-0001-7183-4473**

**முனைவர் மு.கவிதா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர்-43

**Dr. M. Kavitha,** Assistant Professor in Tamil, M.A. Tamil, Avinashilingam Institute for Home Science & Higher Education for Women, Coimbatore-43

**ORCiD: https://orcid.org/0000-0003-0484-9311**

**DOI: 10.5281/zenodo.5111424**

### Abstract

*"Tholkappiyam" is the oldest grammar treatise of Tamil. This is the grammar book that had been written by Tholkappiyar that evinces the art of language and life. It is the first book available today in the classical language Senthamizhil. It is considered to be the Document of the Tamil lifestyle because it beautifully shows the best facts of life in the Sangam Period. This is also said as the literature that portrays the culture of the Tamil people. This is also a grammar book written for written and spoken Tamil. In it, Porulathigaram speaks about the ancient people's love life, the inner self and the outer valour. It is not only proud to be ahead of its time, but it also has the sovereignty to be the oldest of the old and the oldest of the latter in its mastery over the subject matter. The purpose of this article is to explore tholkappiyam in the context of Padanthinai Thurai.*

**Keywords:** *Tholkappiyam*, Paadanthinai, Ethal Pazhithal, Seviarivuru, Paanatrupadai

### முன்னுரை

சங்க இலக்கியங்களாகக் கருதப்படும் பாட்டும் தொகையும் ஆன பத்துப்பாட்டு மற்றும் எட்டுத்தொகை நூல்களுள், எட்டுத்தொகையுள் எட்டாவது இலக்கியமாகத் திகழும் நூல் புறநானூறு ஆகும். இந்நூலில் தமிழினை வளர்த்தப் பல புலவர்கள் சேர்ந்து மொத்தமாக நானூறு (400) பாடல்களைப் பாடியுள்ளனர். அவர்களுள் ஆண்பாற் புலவர்களும் பெண்பாற் புலவர்களும் அடங்குவர். இந்நூலில் இருக்கும் பாடல்கள் யாவும் அரசாட்சிப் புரிந்த வேந்தர்களின் கொடைத்திறம் பற்றியும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

படைத்திறம் பற்றியும் எடுத்துக் கூறும் விதமாகப் பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் அனைத்திற்கும் திணையும் துறையும் வழங்கப்பட்டு இருக்கின்றன. திணை என்பது, பாடல்களின் பொருளைக் குறிப்பதாக அமைகின்றது. துறை என்பது, திணையின் உட்பிரிவாகக் அமைகிறது. ஒவ்வொரு பாடலும் பெரும்பாலும் ஒரு திணை ஒரு துறைக் கொண்டே அமையப் பெறும். ஆயினும் சிலப் பாடல்கள் ஒன்றிற்கு மேற்பட்ட திணைக் கொண்டும் ஒன்றிற்கு மேற்பட்டத் துறைக் கொண்டும் அமைகயப் பெறும். புறநானூற்றில் ஒரே துறையின் கீழ் பகுக்கப்படும் பாடலின் எண்ணிக்கை மொத்தம் முன்னூற்றி ஐம்பத்து ஒன்பது (359) ஆகும். ஒன்றனுக்கும் மேற்பட்ட துறையின் கீழ் பகுக்கப்பட்ட பாடல்களின் எண்ணிக்கை மொத்தம் முப்பத்தி ஐந்து (35) ஆகும். புறநானூற்றில் இருக்கும் பாடாண்திணைப் பாடல்களைப் துறைக் கொண்டு நோக்குவதே இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

**பாடாண் - சொற்விளக்கம்**

பாடாண் என்பதனைப் பாடு + ஆண் என்று பிரிப்பர். பாடு என்பதனை வினைச் சொல் எனக் கொண்டு பாடப்படும் எனப் பொருள் கூறி, ஆண் என்பதற்கு ஆடவனது ஒழுகலாறு என்று பொருள் கொள்ளப்படும். பாடு என்பதற்கு முறைமை, செவ்வி, பெருமை, ஒலி, ஒழுக்கம் என்ற 32 பொருள்கள் உள்ளன. ஆண் என்பதற்கு ஆடவர் என்று பொருள் கொள்வதனை விட ஆளுமை என்று பொருள் கொள்வதைவிட ஆளுமை எனப் பொருள் கொள்வது பொருத்தமானதாகும் என்று கூறப்படுகிறது.

**பாடாண் திணை துறைகள்**

துறை என்பது திணையின் உட்பிரிவு எனப்படும். பாடாண் திணையில் தொல்காப்பியர் மொத்தமாக இருபத்தி மூன்று (23) துறைகளைக் கூறியுள்ளார். அவற்றுள்,

**ஏத்தல் பழித்தல், இயன்மொழி, செவியறிவுறாவு,**
**பாணாற்றுப்படை, விறலியாற்றுப்படை, குடைநிழல் மரபு,**
**வாள்மங்கலம், ஓம்படை**

ஆகிய எட்டுத் (8) துறைகள் புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**ஏத்தல் பழித்தல்**

தனக்கு வேண்டிய பரிசில்களைக் கொடுப்போரைப் புகழ்ந்துரைப்பது ஏத்தல் ஆகும். அவ்வாறு கொடுக்காதோரைப் பழிந்து உரைப்பது பழித்தல் ஆகும். இதனைத் தொல்காப்பியர் பாடாண்திணையின் முதல் துறையாக அமைத்துள்ளார். **கொடுப்போர் ஏத்திக் கொடார் பழித்தல் (தொல். பொ. 1036.1)** என்ற நூற்பா வழி இதனை அறியமுடிகிறது. புறநானூறு பாடல்களில் பரிசில் விடை என்ற துறையின் பெயரால் தொல்காப்பியர் கூறும் இத்துறைக்கானப் பாடல்கள் அமையப் பெற்றுள்ளது. மேலும் இத்துறையானது கொடுத்தோரைப் புகழ்ந்து கொடாதோரைப் பழித்தல் என்ற பொருண்மையிலும் வரும். புறநானுற்றில் மொத்தம் ஆறு (6) பாடல்கள் இத்துறையில் அமைந்துள்ளது.

**கொடுப்போரைப் புகழ்தல்**

கொடுப்போரைப் புகழ்தல் என்பது, கொடையளிக்கும் மன்னனின் சிறப்பினைப் புகழ்ந்துப் பாடுவது ஆகும்.

வல்வில் ஓரி என்பவன் கொல்லி மலைக்கும் அதனையொட்டி அமைந்திருக்கும் பகுதிகளுக்கும் தலைவனாக விளங்கியவன். இவனின் கொடைச் சிறப்பினைப் பற்றி "ஓம்பா ஈகை" குணம் கொண்டவன் என புலவர் வன்பரணர் புகழ்ந்து கூறுகிறார். இவனிடம் யார் இரந்துச் சென்றாலும் அவர்களுக்கு தன்னிடம் சிறிதும் சேர்த்து வைத்துக் கொள்ளாமால் அனைத்தையும் கொடுத்துவிடுவான். அத்தகைய சிறப்பினை உடையவன் என்பதனை,

**கோ எனப் பெயரிய காலை ஆங்குஅது**
**தன் பெயர் ஆகலின் நாணி மற்று யாம்**
**நாட்டிடன் நாட்டிடன் வருதும் ஈங்கு ஓர்**
**வேட்டுவர் இல்லை நின்ஒப் புர் என, (புறம்: 152 – 21:24)**

என்ற பாடல் வழி, சிறந்த வீரனாகவும் தனக்கென்று பொருள் சேர்த்து வைத்துக் கொள்ளாது இரவலருக்கு வழங்கும் ஈகைக் குணம் கொண்டவானகவும் விளங்குகிறான். அத்தகைய ஓரி இனிது வாழ்க!" என்று கூறுகிறார். இவ்வாறு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

அவனின் கொடைத்தன்மையின் சிறப்புகளை எடுத்துக் கூறுவதால் இது கொடுப்போர் புகழ்தல் என்றாயிற்று.

**கொடுக்காதவரைப் பழித்தல்**

கொடாதவரைப் பழித்தல் என்பது கொடை அளிக்காமல் இருப்பவரையும், கொடையளிக்கக் காலம் தாழ்த்துபவரையும் பழித்துக் கூறும் விதமாகப் பாடுவதாகும். தம்மால் இயன்ற பொருளை மனம் ஒப்பித் தருதலும், அப்படித் தர இயலாதபோது இல்லையென்று கூறுதலும் முயற்சி உடையவர்களின் குணமாகக் கருதப்படுகிறது. தன்னால் கொடுக்க இயலாததை இயலும் என்று கூறலும், இயன்றதை இல்லை என்று கூறலும், இரந்து வரும் பரிசிலர்களைப் பெரிதும் மெலிவடையச் செய்யும். இத்தன்மையானது காக்கும் தொழிலையுடைய பெருமக்களுக்கு உள்ள புகழைக் குறைத்துவிடும். இத்தகு செயலையே மன்னன் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் புலவர் ஆவூர் மூலங்கிழாரிடம் காட்டினார். இதனால் தான் இதுவரைக் காணத ஒன்றை கண்டதாகவும் கூறுகிறார். வெயிலோ பனியோ எதைனையும் பொருட்படுத்தாமல், கல்லாகிக் கரையாமல் நிற்கும் தன் வறுமையோடு, நணாத்தையன்றி வேறு அணியேதும் கொண்டிருக்காத, கற்பு நெறியில் சிறந்த தன் மனைவியின் நலிவை மனத்தில் எண்ணியவனாய்த் திரும்பிச் செல்வதாய் உரைக்கிறார். இவ்வாறு கொடையளிக்காத மன்னனைப் பழித்துக் கூறுவிதமாய்,

**ஒல்லுவது ஒல்லும் என்றலும் யாவர்க்கும்**
**ஒல்லாது இல்லென மறுத்தலும், இரண்டும்**
**ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே!**
**ஓல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது (புறம்: 196 – 1:4)**

இப்பாடலைப் புலவர் ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளார்.

**இயன்மொழித் துறை**

இயன்மொழி வாழ்த்து என்பது ஒரு மன்னரின் இயல்பினை கூறி வாழ்த்துதல் ஆகும். பரிசுகளை பெறும் பொருட்டு மன்னர்களைப் புகழ்ந்துப் பாடுவார்கள். இதனைத் தொல்காப்பியர் **அடுத்துஊர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும் (தொல்.**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**பொ. 1036.2)** என்ற நூற்பாவின் வழிக் கூறுகிறார். ஒருவரின் வெற்றி சிறப்பினைபும், பண்புநலன்களையும் எடுத்துக் கூறி இவர்களின் இயல்பினை வாழ்த்துவது இயன்மொழி வாழ்த்தாகும். இதனை இயன்மொழி என்றும் அழைப்பார்கள். புறநானூற்றில் பாடாண் திணையின் மொத்தம் ஐம்பத்தினான்கு (54) பாடல்கள் இயன்மொழி வாழ்த்துத் துறையில் அமைந்துள்ளது.

சேரமான் கடுங்கோ வாழியாதன் என்பன் தன் நாடு மட்டுமல்லாது பிறரின் நாடுகளையும் கைக்கொண்டு தனது நாட்மை விரிவுபடுத்தும் இயல்பினை உடையவன். மேலும், பகைவர்கள் எதிர்த்தால் பெரிர்துப் போரிடுவான் என்றும் புறமுதுகு இடாதவன் என்றும் நிலையான ஆட்சியினை உடையவன் என்றும் அவனது இயல்பினை புகழ்ந்து கபிலர் கூறியுள்ளார்.

**வையம் காவலர் வழிமொழிந்து ஒழுகப்**
**போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது**
**இடம்சிறிது என்னும் ஊக்கம் துரப்ப,**
**ஒடுங்கா உள்ளத்து, ஓம்பா ஈகை (புறம்: 8 – 1:4)**

என்ற பாடல்வழி மன்னனின் போர்ச்சிறப்பினையும் ஈகைத் தன்மையினையும் எடுத்துக் கூறியுள்ளார்.

**செவியறிவுறூவு**

செவியறிவுறூவு என்பது, சான்றோர்க்கு கட்டுப்பட்டு அடங்கி நடத்தலைக் கடமையாகக் கொள்ள வேண்டும் எனச் செவிக்கு அறிவுறுத்துவதாகும். இதனைத் தொல்காப்பியர் பாடாண்திணையின் ஒரு துறையாகக் கூறியுள்ளார். **செவியறி வுறூவும் (தொல். பொ: 1036 – 8)** என்ற நூற்பா வழி இதனை அறியமுடிகிறது.

அரசன் தவறுதலாகச் செயல்பட நேரும் போது அரசன் செய்ய வேண்டிய கடமைகளை முறை தவறாமல் செய்யும் வகையில், அரசனுக்கு அறிவுரையாகக் கூறுவதே செவியறிவுறூஉ ஆகும். புறனாறூற்றில், இத்துறையில் மொத்தம் ஏழு (7) பாடல் அமையப் பெற்றுள்ளன.

**கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி!**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**நிலம் பெயரினும் நின் சொற் பெயரல் (புறம்: 3 – 13:14)**

என்ற பாடல் அடிகளில், ஊழிக்காலத்தில் இப்பூவுலகமே அழிந்து மாறிப் போனாலும், உன்னுடைய சொல் தவறாமல் நிலைத்து நிற்க வேண்டும். இதனை,

**அம்பு விட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்**

**திருந்து சிறை வளைவாய்ப் பருந்திருந்து உயவும்**

**உன்ன மரத்த துன்னருங் கவலை,**

**நின் நசை வேட்கையின் இரவலர் வருவர் அது (புறம்: 3 – 21:24)**

என்ற பாடலடிகளில், உன்னைத் தேடி காண வரும் இரவலர்களின் வருத்தத்தினை அவர்களின் முகக்குறிப்பினைக் கொண்டு அவர்களின் வறுமையைத் தீர்தல் வேண்டும் என்று பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதியிடம், இரும்பிடர்த் தலையார் என்னும் புலவர் அறிவுறுத்துவதால் இது செவியறிவுறூவுவாயிற்று.

***பாணாற்றுப்படை***

*பாணாற்றுப்படை* என்பது வள்ளல்களிடம் இருந்து பரிசில் பெற்று மீண்டு வரும் பாணர்கள் செல்லும் வழியில் தன் பாணர் இனத்தினைச் சேர்ந்த வறியவர்களைக் கண்டு அவர்களைத் தாங்கள் பரிசில் பெற்ற மன்னனிடம் ஆற்றுப்படுத்துவர். இதுவே பாணாற்றுப்படையாகும். இதனை,

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**

**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும் (தொல். பொ: 1037 – 3:6)**

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வழி .அறியமுடிகிறது. புறநானூற்றில் இத்துறையில் மொத்தம் ஆறு (6) பாடல்கள் உள்ளன.

“உடும்பு போன்று உடல் மெலிந்து வற்றிக் கடும்பசி வருத்த, அதனைப் போக்குவோர் யாரும் இல்லாத, நீ இசைக்கும் யாழின் ஒலியும் செவிக் கொடுத்து நோக்காத சுற்றத்தாரோடு துன்பப்படும் பாணனே! நீ இங்கே இருந்து கொண்டு ஏன் வருந்துகிறாய்? சிறந்த ஆபரணங்களை அழகு மிளிர அணிந்து, அழகிய மார்பில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

சிவந்த மாணிக்க மணிகள் விளங்க, மென்மையுடைய தாய்க் குலத்தின் மேல் கருணையுடன் விளங்கி, வன்மை கொண்டு எதிர்க்கும் பகைவரை அழிக்கும் சிறப்புடையவன் என் தலைவன். அவனிடம் சென்றால் பிறர் வாயில் முன்பு சென்று மீண்டும் கேட்காதபடி பெருஞ் செல்வத்தை வழங்குவான்" என்று தன் தலைவனான சோழன் நலங்கிள்ளியிடம் ஆற்றுப்படுத்தும் விதமாகப்,

**உடும்பு உரித்து அன்ன என்பு எழு மருங்கின்**
**கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது**
**சில்செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து,**
**ஈங்குஎவன் செய்தியோ பாண! பூண்சுமந்து (புறம்: 68 – 1:4)**

என்ற பாடலினை கோவூர் கிழார் அமைத்துள்ளார்.

**விறலியாற்றுப்படை**

விறலியாற்றுப்படை என்பது வள்ளல்களிடம் இருந்து பரிசில் பெற்று மீண்டு வரும் விறலியர்கள் செல்லும் வழியில் தன் விறலி இனத்தினைச் சேர்ந்த வறியவர்களைக் கண்டு அவர்களைத் தாங்கள் பரிசில் பெற்ற மன்னனிடம் ஆற்றுப்படுத்துவர். இதுவே விறலியாற்றுப்படையாகும். இதனை,

**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும் (தொல். பொ: 1037 – 3:6)**

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வழி .அறியமுடிகிறது. புறநானுற்றில் இத்துறையில் மொத்தம் நான்கு (4) பாடல்கள் உள்ளன.

வளையல்களை அணிந்த விறலியே! யானைக் கூட்டங்கள் போர் செய்த களத்தில் வானத்தில் பறக்கும் பருந்துகளை ஈர்க்கும் வகையில் ஊன் சதைகள் சிதறுமாறும், பகைவரின் நாட்டைக் கலங்குமாறும் செய்து அழித்து வெற்றி பெற்ற சிறப்புடைய முதுகுடுமிப் பெருவழுதியைச் சென்று காணலாம். வருவாயாக! நல்லிசை வழங்கும் யாழையும் சிறு பாறையையும் எடுத்துக் கொண்டு புறப்படு. அவனைக்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

கண்டால் நீர் கலந்த எளிய கஞ்சியை உண்டு வாழும் இவ்வறுமை வாழ்கையிலிருந்து அறவே விடுபடலாம். இதனை,

**களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை**
**விசும்புஆடு எருவை பசுந்தடி தடுப்பப்**
**பகைப் புலம் மரீஇய தகைப் பெருஞ் சிறப்பின்**
**குடுமிக் கோமாற் கண்டு,**
**நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே! (புறம்: 64 – 3:7)**

என்ற பாடல் வழி விறலியினை ஆற்றுப்படுத்தலை அறியமுடிகிறது.

**குடைநிழல்மரபு**

அரசனின் குளிர்ந்த நிழல் தரும் நல்லாட்சியைச் சிறப்பிப்பதற்குக் காரணமாக அமைவது வெண்கொற்றக் குடையாகும். அதனைப் புகழ்ந்து கூறுவதே குடைநிழல் மரபு ஆகும். இதனை, **நடை மிகுந்து ஏத்திய குடைநிழல் மரபும் (தொல். பொ: 1037 – 10)** என்ற நூற்பா வழி தொல்காப்பியர் கூறுகிறார்.

புறநானூற்றில் இத்துறை குடைமங்கலம் என்ற பெயரில் சுட்டப்பட்டிருக்கிறது. புறநானூற்றில் இத்துறையில் ஒரு (1) பாடல் அமைந்துள்ளது. தலைவனின் வெண்கொற்றக் குடையின் புகழினைக் கூறும் விதமாக,

**கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த**
**சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து**
**தொழுதனம் அல்லமோ, பலவே! கானல்**
**கழிஉப்பு முகந்து கல்நாடு மடுக்கும் (புறம்: 60 – 4:7)**

இப்பாடல் அமைந்துள்ளதால் இது குடைநிழல் மரபு என்ற துறையாயிற்று.

**வாள்மங்கலம்**

பகைவரை அழித்து ஒடுக்குவதற்குக் காரணமாக இருப்பது வீரவாள். அவ்வாளினைப் புனித நீராட்டி வழிபடுவதே வாள் மங்கலம் ஆகும். இதனை, **மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும் (தொல். பொ: 1037 – 11)** என்ற நூற்பா வழி கூறுகிறார் தொல்காப்பியர். புறநானூற்றில் இத்துறையில் ஒரு (1) பாடல் உள்ளது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**உண்டாயின் பதம் கொடுத்து,**

**இல்லாயின் உடன் உண்ணும்**

**இல்லோர் ஒக்கல் தலைவன்,**

**அண்ணல் எம் கோமான் வைந் நுதி வேலே! (புறம்;: 95 – 6:9)**

என்ற பாடலில், ஔவையார் தொண்டைமானிடம் அதியமானுக்காகத் தூது சென்றார். தொண்டைமான் நெய் பூசிப் பளபளவென அடுக்கப்பட்டிருந்த தன் படைக்கொட்டிலைக் காட்டினான். ஔவையார் அதனைக் கண்டு, 'போரிட்டுப் போரிட்டு அதியமானின் படைகலன்கள் கொல்லன் உலையில் கூர் வடிக்கப்பட்டு வருகின்றன' என்று அதியமானின் போர்த்திறத்தை எடுத்துரைக்கும் செய்திகள் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு அதியமானின் படைக்கலச் சிறப்பினை எடுத்துக் கூறுவதால் இது வாள்மங்கலம் என்னும் துறையாயிற்று.

**ஓம்படை**

நாளாலும், பறவைகளாலும், பிறவற்றாலும் அச்சம் மகிழ்ச்சி என்பவை நீங்காமல் தொடர்ந்து வரும். அவற்றுள் தீமையிலிருந்து நீக்கி இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலங்களில் நன்மை உண்டாகப் பாதுகாக்க வேண்டுவது ஓம்படை ஆகும். இதனை,

**அச்சமும் உவகையும் எச்சம் இன்றி**

**நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்**

**காலம் கண்ணிய ஓம்படை (தொல். பொ: 1037 – 16:18)**

என்ற நூற்பாவின் வழி தொல்காப்பியர் கூறுகிறார். புறநானூற்றில் இத்துறையில் ஒரு (1) பாடல் அமையப்பெற்றுள்ளது.

பால் புளித்துத் திரிந்தாலும், சூரியனின் ஒளி குன்ற நிலவுலகமே இருளில் ஆழ்ந்தாலும், நான்கு வேதங்களின் நெறியானது நிலை திரிந்து மாறினாலும், தன் கடமையிலிருந்து பிறழாத அமைச்சர்கள் விளங்கிச் சூழப் புகழ் கொண்டு, நெறி தவறாது இனிது நிலைத்து வாழ்பவன் சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன். இதனை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Vol. 4: Issue - 1, July 2021 Available at: www.ijtlls.com

**பாஅல் புளிப்பினும், பகல் இருளினும்,**

**நாஅல் வேத நெறி திரியினும்,**

**திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி,**

**நடுக்கின்றி நிலியரோ அத்தை; அடுக்கத்துச் (புறம்:2 – 17:20)**

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

**முடிவுரை**

உலகிலுள்ள ஒவ்வொரு மொழியும் ஒரு சிறப்பான தன்மையைப் பெற்றிருக்கும். அச்சிறப்பு மக்கள் அவர்கள் வாழும் சூழலுக்கு ஏற்ப அமைந்திருக்கும். தமிழுக்கு அந்தப் பெருமை வருவதற்கான காரணம் மொழிக்கு மட்டுமல்லாமல் வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்ததேயாகும். பொதுவாக, உலகிலுள்ள பழமையான மொழிகளில் காலந்தோறும் இலக்கண நூல்கள் தோன்றியுள்ளன. பழந்தமிழ்ச் சான்றோர் கூடுதலாக அவர்கள் வாழ்ந்த மண்ணுக்கும் மக்களுக்கும் இலக்கணம் எழுதி வைத்துள்ளனர். சங்ககால மக்களின் வாழ்வினை பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்வது புறநானூறு ஆகும். புறநானூற்றின் வழி மன்னர்களின் வரலாற்றையும், கல்வித் திறத்தையும், புகழ்நோக்கையும், மனத்திண்மையும், ஈகைத்திறம் ஆகிய பெருமிதப் பண்புகளையும், படைவண்மை, வாழும் ஒழுக்கமுறைகளையும், குடியோம்பல் முறையாகிய ஆட்சித்திறத்தையும் நயம்பெற விளக்கும் வரலாற்று பெட்டகமாகத் திகழ்கிறது. தொல்காப்பியர் கூறிய பாடாண்திணைத் துறைகளுள் மொத்தம் எட்டுத்துறைகள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளதனை இவ்வாய்வானது எடுத்துரைக்கிறது.

**துணைநூற்பட்டியல்**

[1] டாக்டர்.ந.சுப்பிரமணியம். *சங்ககால வாழ்வியல், சங்கத் தமிழரின்அரசுமுறையும் சமூக வாழ்வும்,* நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட், சென்னை – 600098, 2010.

[2] இராமசுப்பிரமணியம்.வ.த, *புறநானூறு மூலமும் தெளிவுரையும்,* திருமகள் நிலையம், சென்னை – 600017, 2000.

